# 'அனாஸின்'

## வலியை வெல்லுவதற்கான
## நான்கு மருந்துகளின் கலப்பாகும்

1. க்வினாயின் சல்பேட் 2. காப்பின்
3. பினாஸிடின் 4. ஆஸிடில்ஸாலிஸிலிக் ஆஸிட்

வலிகளுக்கு நிவாரணமளிப்பதில் புகழ் பெற்ற 'அனாஸின்' விஞ்ஞான முறையில் சேர்க்கப்பட்ட நான்கு மருந்துகளின் கலப்பாகும். இவைகள் நரம்புகளின் கேந்திர ஸ்தானங்களில் கூட்டாக வேலை செய்து, தலைவலி, ஜலதோஷம் ஜுரம், பல்வலி, மற்றும் தசைவலிகளுக்குத் துரிதமாயும் அபாயமின்றியும் நிச்சயமாயும் நிவாரணம் அளிக்கிறது. வலிகளுக்குத் துரித நிவாரணமளிப்பதில் அனாஸினுக்கு இணையொன்றில்லை... அனாஸினைப் போல் தீங்கு விளைவிக்காத வில்லை வேறொன்றில்லை. ஆகவே ஞாபகமிருக்கட்டும் 'அனாஸின்' ஒரு டாக்டரின் குறிப்புக்கு ஒப்பாகும். அது ஹிருதயத்திற்குத் தீங்கு விளைவிக்கவோ அல்லது வயிற்றுக் கோளாறுகள் உண்டு பண்ணவோ செய்யாது. 'அனாஸின்' லக்ஷக்கணக்கான மக்களுக்கு நிவாரணம் அளிக்கிறது. 'அனாஸின்' விலை ஒவ்வொருவர் சக்திக்கும் ஏற்றது. ஒரு பாக்கெட்டின் விலை அணா 2 மட்டுமே

**நான்கு**
**மருந்துகளின்**
**சேர்க்கையான**
# அனாஸின்
**வேண்டுமென்றே**
**கேளுங்கள்**




V 102

மலர் 16
இதழ் 35

# கல்கி

துன்முகி வரு
பங்குனி 18

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

## மனப்பூர்வமான ஆலயப் பிரவேசமே

# தீண்டாமையை அடியோடு ஒழிக்கும்

ஜாதி ஹிந்துக்கள் ஹரிஜனங்களுக்கு விதித்துள்ள தடைகளை நீக்கியே யாகவேண்டும். கோயில்களை ஆத்மீகச் செல்வத்தைப் போற்றிக் காப்பாற்றும் பொக்கிஷம் என்று கருதுகிறோம். கோடிக்கணக்கான மக்களுக்கு ஆலயங்கள் உயிரினும் மேலாகத் தோன்றுகிறது. அப்படிப்பட்ட ஹிந்துக்கள் தாங்கள் இதுகாறும் ஹரிஜனங்களிடம் நடந்து கொண்ட முறை தவறானது என்பதை உணர்ந்து அதற்காக உண்மையில் பச்சாத்தாபப் படுகிறார்கள் என்றால், இந்த ஆலயங்களை ஹரிஜனங்களுக்குத் திறந்து விட்டு அவர்களுடன் இந்த உயரிய செல்வத்தைச் சேர்ந்து அனுபவிக்கவேண்டும்.

— காந்திஜி

(1[illegible]-34 ஹரிஜன் பத்திரிகையில்)




**தமிழ் நாடு ஹரிஜன சேவக சங்கம்**



மலர் 16 | இதழ் 35

தமிழ்த்திரு நாடு தன்னைப் – பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

துன்முகி ௵ | பங்குனி 18௳

# வேலியழிந்த தோட்டம்

குலப்பற்றும் குறுகிலப்பற்றும் பாரதத் தொண்டுக்குத் தடையாக நிற்காமல் தேசபக்தியை விசாலப்படுத்தி வளர்த்தது காங்கிரஸ். இந்த விசால தேச பக்தியைக் கொண்டு காந்தியடிகள் இந்திய விடுதலையைச் சமைத்துத் தந்தார். அதன் பின் காங்கிரஸ் அமைப்பை ஒரு போட்டி அரசியல் கட்சியாக்கி விட்டதன் பயனாக அது பல ராஜ்யங்களில் வர வர அரசியல் அழுக்கை அடைந்து பண்பு மாறி நிற்கிறது. விடுதலைப் போர் நடந்த காலத்தில் காங்கிரஸை எதிர்த்த குலப்பற்றுக்காரர்களும் அந்த மனப்பான்மை கொண்ட பின்சந்ததியாரும் தற்போது வெளியே இருந்து கொண்டு காங்கிரஸை எதிர்க்க வில்லை: அதற்குப் பதிலாக உள்ளே புகுந்து நல்ல பாலைப் புளிப்புத் தயிர் ஆக்கி வருகிறார்கள். தேசத்தின் நலத்தை மறந்து கட்சியின் பலத்தையே பெரிதாகக் கருதும் சிலர், "அதனால் என்ன? பால் கட்டித் தயிராயிற்று. இதில் என்ன நஷ்டம், லாபம்தானே?" என்று பேசுகிறார்கள்.

பாலின் குணம் இனிப்பு: இனிப்பு அழிந்து புளிப்பு ஆயிற்று தமிழ்நாட்டுக் காங்கிரஸ்.

தமிழ்நாட்டுக் காங்கிரஸை வளர்த்தவர்கள் நாட்டில், தேசபக்திக்குப் பதிலாக ஜாதித் துவேஷப் பிரசாரம் தலை எடுத்து விட்டதே என்று வருந்துகிறார்கள். இதை யாவரும் சீர்திருத்தம் செய்ய வேண்டும் என்கிறார்கள். "அது வேண்டாம்" என்கிறார்கள் குலப்பற்றுக்காரர்கள். குலப்பற்றைக் காங்கிரஸுக்குள் புகுத்தினால் ஆயிரங் குலங்களான நம் மக்களை அது எங்கே கொண்டு போய் விடும் என்பதை யாவரும் அறிவார்கள். நம்முடைய நாட்டில் எத்தனை ஜாதிகள்! எத்தனை குலங்கள்! ஒன்று சேர்ந்த சமூகம் மறுபடியும் பிரிந்து போகும்!

குலப்பற்றுக்கு உள்ளே இடம் தராமல், அது எதிர்க்கட்சியாக நின்றால் அந்த எதிர்ப்பின் பயனாகக் காங்கிரஸ் கட்சியில் ஒற்றுமை அதிகரிக்கும். அப்படியின்றிக் கட்சியைப் பெருக்கும் கருத்துடன் குலப்பற்றுக்காரர்களை அந்த மனப்பான்மையை விடாதிருக்கும் போதே உள்ளே புக விட்டால் ஒற்றுமை அழிந்து, அகில இந்திய காங்கிரஸுக்கும் தமிழ்நாட்டுக் காங்கிரஸுக்கும் சம்பந்தமின்றித் தமிழ்நாட்டுக் காங்கிரஸ் தனிக் கட்சியாக முடியும்! எந்தக் குலத்தையும் துவேஷிக்கலாகாது: அவமதிக்கக் கூடாது என்கிற விசாலக் கொள்கையை அஸ்திவாரமாகக் கொண்ட காங்கிரஸில் ஜாதித் துவேஷமே அடிப்படையாகக் கொண்ட திராவிடக் கழகத்துக்கு எப்படி இடம் தரலாம்? அவர்களாகவே வந்தார்கள் என்று சமாதானம் சொல்லப்படுகிறது. இந்தச் சமாதானத்தில் பொருள் இல்லை. தானாகவே வந்து, பிறகு நாம் வரவேற்ற காரணத்தினால் விஷத்தின் குணம் வேறுபடாது. விஷம் விஷமாகத்தான் இருக்கும்.

"நமக்கு இது நல்ல இடம்" என்று ஜாதித் துவேஷக்காரர்கள் ஏன் கருதுகிறார்கள்? தங்களுடைய மனப்பான்மையை வளர்க்கும் வசதியைத் தமிழ்நாட்டுக் காங்கிரஸில் கண்டார்கள். அதனால் வருகிறார்கள். தங்களுடைய கொள்கைகளை நழுவவிட்டார்களா; மாற்றிக் கொண்டார்களா; இரண்டும் இல்லை.

இவ்வாறு தமிழ்நாட்டில் காங்கிரஸ் பழுதுபட்டபடியால் இந்தத் தேர்தலிலும் முன் தேர்தலில் காணாத கஷ்டங்கள் ஏற்பட்டன. அதைச் சமாளித்து ஸ்தானங்கள் பெறப்பட்டன. எவ்வாறு இது நடைபெற்றது என்பதைப் பற்றி நாம் திரும்பத் திரும்பச் சொல்ல வேண்டியதில்லை. நாடு முழுவதிலும் பேசப்படுகிறது. அதுவே




கேரளத்தில் கம்யூனிஸ்ட்கள் பி. சோ. கட்சியினரின் ஆதரவைக் கேட்டிருக்கின்றனர். ஆனால் பி. சோ. கட்சியினர் இதற்கு இணங்கவில்லை என்று தெரிகிறது.

---

காங்கிரஸுக்கு ஒரு பலவீனமாகும். அதை நீக்குவது எப்படி? ஒரு விசாரணை வைத்து அபவாதத்தைத் தீர்த்துக் கொள்ள வேண்டும். அல்லது பரிகாரம் தேடவேண்டும். இல்லாவிடில் அகில இந்திய காங்கிரஸுக்குப் பெரும் பலவீனமாகும்.

தென்னாட்டில் ஒரு பகுதியில் கம்யூனிஸ்டுகளும் மற்றொரு பகுதியில் ஜாதித் துவேஷக் காரர்களைச் சேர்த்துக் கொண்டு, அவர்களுக்குச் செல்வாக்குத் தரும் காங்கிரஸ் கட்சியும் அரசாட்சி நடத்தினால் வேலி யழிந்த தோட்டமாகும் காங்கிரஸ்.

# பாகிஸ்தானில் 'ஜனநாயகம்'

**பா**கிஸ்தான் தலைவர்களின் சூழ்ச்சி பலிக்காமற் போய்விட்டது.

உள்நாட்டில் ஊழல்கள், ஒற்றுமையின்மை, தலைவர்களிடையே பொறாமை, போட்டி, பதவி வேட்டை, அரசியல் திட்டம் உருவாக முடியாத அவல நிலைமை, பொது மக்களிடையே அதிருப்தி, உணவுப் பஞ்சம்:— இவற்றை யெல்லாம் மறைத்து மக்களின் கவனத்தை வேறு திசையில் திருப்பப் பாகிஸ்தான் தலைவர்கள் பல தந்திரங்களைக் கையாண்டார்கள். வெளி நாடுகளில் இந்தியாவுக்கு விரோதமாகத் துவேஷப் பிரசாரம் செய்தார்கள். காஷ்மீர் பிரச்னை தங்களுக்குச் சாதகமாகத் தீராவிடில் இந்தியா மீது படையெடுப்போம் என்று மிரட்டினார்கள்; இன்னும் மிரட்டி வருகிறார்கள்.

பாகிஸ்தான் தலைவர்கள் பல தந்திரங்களையும் நேர்மையற்ற முறைகளையும் கையாண்டும் கூட, அவர்கள் உள் நாட்டுக் குமுறல்களை மறைக்க முடியவில்லை;

குறிப்பாக, ஐக்கிய நாடுகள் சபையின் பிரதிநிதி ஸ்ரீ ஜாரிங்கும், வெளிநாட்டுப் பத்திரிகை நிருபர்களும் கராச்சிக்கு விஜயம் செய்துள்ள சமயத்தில் பாகிஸ்தான் குமுறல்கள் பீறிட்டெழுந்து விட்டன.

அதாவது பாகிஸ்தான் பிரமுகர்களின் போட்டியும் ஐ. நா. பிரதிநிதியின் முன்னிலையில் அம்பலமாகி விட்டது!

காஷ்மீர் பிரச்னையை ஒட்டிப் பாகிஸ்தான் தலைவர்கள் நீதிக்காகவும் நேர்மைக்காகவும் போராடுவது உண்மையாயின், அங்கு அவர்களிடையே இவ்வளவு போட்டியும் பொறாமையும் எழுவதற்குக் காரணமில்லை.

அந்தப் போட்டியும் பொறாமையும் காரணமாகச் சென்ற வாரத்தில், அங்கு முதல் நாள் பெரும்பாலோரின் ஆதரவு பெற்றிருந்த

டாக்டர் கான் சாகிப் மந்திரி சபையின் நிலைமை மறுநாள் கலகலத்து விட்டது!

அதன் விளைவாகப் பார்லிமெண்டில் வாக்குகள் எடுத்துச் சர்க்கார் தோல்வியடைவதற்கு முன்பே பாகிஸ்தான் ஜனாதிபதி மேஜர் ஜெனரல் இஸ்கந்தர் மிர்சா அச் சபையைக் கலைத்து விட்டார். தாமே சகல நிர்வாக அதிகாரங்களையும் பொறுப்புகளையும் ஏற்றுக் கொண்டு விட்டார்.

பாகிஸ்தான் பிரதமரான சுஹ்ரவர்த்தி பதவிக்கு வருமுன், பாகிஸ்தான் மேல்நாடுகளுடன் உறவு கொண்டாடுவதையும், இராணுவ உடன்படிக்கை செய்து கொள்ளுவதையும் வன்மையாகக் கண்டித்தார். இந்தியாவுடன் பாகிஸ்தான் நட்புக்கொள்ள வேண்டும் என்று வற்புறுத்தினார்.

ஆனால் அதே சுஹ்ரவர்த்தி தாம் அன்று கண்டித்த முறைகளையே பிரதமர் பதவி ஏற்றபின் கூசாமல் கையாண்டு வருகிறார். இந்தியாவுக்கு எதிராகத் துவேஷத்தையும் போர் வெறியையும் தூண்டி வருகிறார்.

பாகிஸ்தான் தலைவர்கள் அமெரிக்காவிலிருந்து கொடிய போர்த் தளவாடங்களை இறக்குமதி செய்ததற்குப் பதிலாக உணவுப் பொருட்களை இறக்குமதி செய்திருந்தால், பாகிஸ்தான் இன்றையச் சீர்கேடான நிலைக்கு வந்திராது.

அமெரிக்காவின் போர்த்தளவாடங்களையும் ஐரோப்பிய வல்லரசுகளின் தயவையும் நாடும் பாகிஸ்தான், இந்தியாவின் நட்பை ஏற்றுக் கொண்டிருந்தால், பாகிஸ்தானின் அரசியல் நிலைமையும் பொருளாதார நிலைமையும் இவ்வளவு மோசமாகியிராது.

**பா**கிஸ்தான் உருவாகி ஒன்பது ஆண்டுகள் கடந்துவிட்டன! அங்கு இதுவரையில் பல மந்திரிகளும் பிரதம மந்திரிகளும் மாறிவிட்டார்கள். ஆனால், பொதுத் தேர்தல் நடந்து உண்மையான ஜனநாயக சர்க்கார் மாத்திரம் இன்னும் அமைந்தபாடில்லை.

1958-ம் வருஷத்துக்கு முன் அங்கு பொதுத் தேர்தல் நடக்கப் போவதில்லை என்பது, சென்ற வாரம் கராச்சியில் சுஹ்ரவர்த்தி செய்துள்ள பிரசங்கத்திலிருந்து சந்தேகத்துக்கு இடமின்றி வெளியாகி யிருக்கிறது.

இன்று பாகிஸ்தானில் ஏற்பட்டுள்ள அரசியல் அலங்கோலத்துக்குச் சுயநல அரசியல் வாதிகள்தான் காரணம் என்றும் சுஹ்ரவர்த்தி அப்பட்டமாகச் சொல்லியிருக்கிறார்.

அந்த அரசியல்வாதிகள் கூட்டத்தில் அவர் தம்மையும் சேர்த்துக் கொண்டாரா என்பது தெரியவில்லை!

அது எப்படியாயினும், தங்கள் சொந்த நாட்டில் பொதுஜன வாக்கு எடுக்காத பாகிஸ்தான் தலைவர்கள்தான் காஷ்மீர் பிரச்னையைப் பொதுஜன வாக்கு எடுத்துத் தீர்த்துக் கொள்ள வேண்டும் என்று கூக்குரலிட்டு வருகிறார்கள். அவர்கள் கூற்றைச் சுயநல நோக்கமுள்ள வல்லரசுகள் ஆதரிக்கின்றன.

இந்த வெட்கக் கேடான நிலைமையை, பாகிஸ்தானுக்கு விஜயம் செய்து இப்போது புது டில்லிக்கு வந்துள்ள ஸ்ரீ ஜாரிங் உணர்ந்து கொள்வார் என்று நம்புகிறோம்.

இந்தியாவுக்கு ஐ. நா. சபை இழைத்துள்ள அநீதியை அவர் நன்கு உணர்ந்து அதற்குப் பரிகாரம் தேட முற்படவேண்டும் என்பதை வற்புறுத்த விரும்புகிறோம்.

## ஆகாச வெடி

"மிராசுதார்கள் எட்டு வேளை காப்பி சாப்பிடுவதை ஆறு வேளையாக ஏன் குறைத்துக் கொள்ளக் கூடாது."

—சீர்காழியில் திரு காமராஜ்

"குறைத்துக் கொள்ளலாம். ஆனால் அது சர்க்கார் தங்களுடைய நிலவாரக் கொள்கையினால் மிராசுதார்களுக்கு அளித்து வரும் தலைவலி குறைவதைப் பொறுத்திருக்கிறது" என்று தலைவலிக்குக் காப்பி சாப்பிடும் ஒருவர் அனுமானிக்கிறார்.

★

"ஆந்திரப் பிரமுகர் ஸ்ரீ லச்சண்ணாவின் சேவைகளைப் பாராட்டி அவருக்கு ஒரு வீடு பரிசளித்திருக்கிறார்கள் அவருடைய அன்பர்கள்."

—தினசரி

"ஆனால், என்னுடைய சேவையைப் பாராட்டிக் குடியிருக்கக்கூட ஒரு வீடு யாரும் கொடுக்காமல் இருக்கிறார்களே, ஏன்?" என்று அங்கலாய்க்கிறார் ஆர்மோனிய வித்வான் ஒருவர்.

"பணத்தைப் பாஷாணமாகக் கருதி அதில் ஓரளவு வெறுப்புக் காட்ட வேண்டும்."

—நேருஜி

"இதனாலேயே, தேர்தலில் நாங்கள் பணத்தை வாரி இறைத்தோம்!" என்கிறார் தமிழ் நாடு காங்கிரஸ்காரர் ஒருவர்.

★

"இந்தியாவிலிருந்து முதல் தடவையாக 8000 டன் சர்க்கரையை இலங்கை இறக்குமதி செய்யப் போகிறது." —தினசரி

இலங்கை - இந்திய நல்லுறவில் தோன்றி வரும் மனக்கசப்பு இதைத் தொடர்ந்து குறையுமானால் ஆச்சரியப்படுவதற்கில்லை!

★

"பல மேனாடுகளில் பஸ்களில் பிரயாணிகளுக்குத் தூங்கும் வசதி அளிக்கப்படுகின்றது!"

—ஒரு பத்திரிகை

"பஸ் ஸ்டாண்டுகளில் தூங்குவதற்கு வசதி உண்டா?" என்று கேட்கிறார் பஸ்ஸுக்குக் காத்திருப்பவர் ஒருவர்.

# வம்புச் சாவடி

கொக்கி

"பள்ளிக்கூட ஆசிரியர்களுக்கு உரிய மதிப்பும் அந்தஸ்தும் அளிக்காதவரையில் நாடு உருப்படாது!" என்று சாபம் கொடுத்துவிட்டு, "இதோ படித்துப் பாரும்!" என்று சொல்லி, இம் மாதம் 23-ந் தேதி இதழ் சென்னை "ஸ்வராஜ்யா" பத்திரிகையில் வெளியாகியுள்ள ஒரு பகுதியைச் சுட்டிக் காட்டினார் என் நண்பர் ஒருவர்.

வெகு காலத்துக்கு முன் பிரிட்டனில், ஒரு பள்ளிக்கூடத்துத் தலைமை ஆசிரியருக்கும் பிரிட்டிஷ் அரசருக்கும் இடையே நடந்த சம்பவம் ஒன்றைப் பற்றி அதில் குறிப்பிடப்பட்டிருந்தது.

பிரிட்டிஷ் அரசர், அந்தத் தலைமை ஆசிரியரின் பள்ளிக்கூடத்துக்கு விஜயம் செய்தாராம். அரசர் வரும்போது தலையிலுள்ள தொப்பியை அகற்றி மரியாதை செலுத்த வேண்டுமென்பது மேனாட்டு மரியாதை முறைகளில் ஒன்று. அந்தப் பள்ளிக்கூடத்துத் தலைமை ஆசிரியரோ தமது தலையிலுள்ள தொப்பியை அகற்றாமலே பிரிட்டிஷ் அரசரை வரவேற்றார். பள்ளிக்கூடத்தைப் பார்வையிட்டு விட்டு அரசர் வெளி வாயிலை அடைந்த பிறகுதான் அவர் தமது தொப்பியை அகற்றி மரியாதை செலுத்தினார். தலைமை ஆசிரியர் இவ்வளவு பெரிய ராஜ அவமதிப்புச் செய்து விட்டதற்காகப் பொது ஜனங்கள் கோபம் கொண்டார்கள். அவர்மீது நீதிஸ்தலத்தில் குற்ற விசாரணை நடந்தது. தண்டனை அளிக்குமுன், "ஏதாவது சொல்ல நினைத்தால் சொல்லுங்கள்!" என்று தலைமை ஆசிரியருக்குச் சந்தர்ப்பம் அளித்தார்கள். அப்போது தலைமை ஆசிரியர், சிறிதும் கலங்காமல், "நான் செய்ததில் தவறே கிடையாது. பள்ளிக்கூடத்துக்குள் நான் அரசன். பள்ளிக்கூடத்துக்கு வெளியே நான் மாட்சிமை தங்கிய பிரிட்டிஷ் அரசரின் விசுவாசமுள்ள பிரஜைகளில் ஒருவன். பள்ளிக்கூடக் கட்டடத்துக்குள் அரசர் வந்தபோது என் தலைத் தொப்பியை நான் எடுக்காதது தவறு அல்ல என்றே இன்னமும் கூறுகிறேன்!" என்றார். தலைமை ஆசிரியரின் பதிலைக் கேட்டு, அவர்மீது முதலில் ஆத்திரப்பட்டவர்கள்கூட மனம் மாறி, அவரைப் போற்றத் தலைப்பட்டார்கள்!

தஞ்சை கல்யாணசுந்தரம் உயர்நிலைப் பள்ளி நிர்வாகத்தினரால், வேலையிலிருந்து தள்ளப்பட்ட ஆசிரியர் ஸ்ரீ சாரங்கபாணி நாயுடு அவர்களின் நிலைமையை விவரிக்கும் போதுதான் முன் சொன்ன பள்ளிக்கூட அரசரான பிரிட்டிஷ் தலைமை ஆசிரியரின் வீர வார்த்தைகளை "ஸ்வராஜ்யா" பத்திரிகை வெளியிட்டிருக்கிறது.

ஸ்ரீ சாரங்கபாணி நாயுடு அந்தப் பள்ளியில் பதினெட்டு ஆண்டுகள் ஆசிரியர் வேலை பார்த்தவர். அவரை நிர்வாகத்தினர் வேலையை விட்டுத் தள்ளியது சரியல்லவென்று ராஜ்ய கல்வி இலாகா அதிகாரியும் சென்னை ஹைகோர்ட்டாரும் அறிவித்திருக்கின்றனர். எனினும் அவர் இன்னும் தாம் இழந்த பதவியைப் பெறாமல் தவிப்பதைப் பற்றி அந்தப் பத்திரிகையில் எடுத்துரைக்கப்பட்டிருக்கிறது. இதைப் படித்ததும்தான் எனது நண்பர், "பள்ளிக்கூட ஆசிரியர்களைச் சரியாக மதிக்காதவரை நாடு உருப்படாது" என்று கூறினார். அது முற்றிலும் உண்மைதான்.

* * *

கல்வி வாரங்கள் கொண்டாடினால் போதாது. உபாத்தியாயர்களைக் கொண்டாட வேண்டும். ஆனால் நடப்பது என்ன? ஏதாவது ஒரு ஊருக்கு ஒரு மந்திரி விஜயம் செய்வார். அவருக்கு வரவேற்பு அளிக்க வரும் வழியில் கடும் வெயிலில் பள்ளிக்கூடக் குழந்தைகளைக் கொண்டு போய் நிறுத்தி வைப்பார்கள். உபாத்தியாயர்கள் எந்த வரவேற்பிலும் பிழியப்படுவார்கள்.

பள்ளிக்கூடத்தை எட்டிக்கூடப் பார்த்திருக்க மாட்டார். ஒரு எம். எல். ஏ. பள்ளிக்கூடத்துக்கு விஜயம் செய்யப் போவதாக அறிவிப்பார். அவருக்குப் பள்ளிக்கூடத்தில் சரியான வரவேற்பு கிடைக்கா விட்டால், அதன் தலைமை ஆசிரியர் பாடு அப்புறம் திண்டாட்டம்தான்!

"நான் பள்ளிக்கூட ஆசிரியரா யிருந்தால், அப்படிப் பள்ளிக்கூடத்துக்கு வரும் எம். எல். ஏ.க்குத் தக்க பாடம் கற்பிப்பேன்!" என்றார் என் நண்பர்.

"முடியவே முடியாது. ஏனென்றால், பள்ளிக்கூடமே நுழையாத எம். எல். ஏ.க்கள், இந்தச் சாக்கிலாவது பள்ளிக்கூடத்துக்குள் நுழைந்தார்களே என்று நினைத்து அவர்களைச் சும்மா விட்டு விடுவீர்" என்றேன்.

* * *

"கேரளவாசிகள் இல்லாத இடமே உலகத்தில் இல்லை" என்று சொல்வதுண்டு. சமீபத்தில் இன்னும் மனிதர்கள் உட்புகாத பகுதிகள் அமெரிக்காவில் இருப்பதாக ஒரு செய்தி வெளியாகி யிருந்தது. அப்போது நமது கேரள சகோதரர்களின் அபார சக்தி நினைவுக்கு வந்தது. அந்த அமெரிக்கப் பகுதியைக் கண்டு பிடிப்பதாக நினைத்துக்கொண்டு யாராவது கிளம்பினால் அவர்கள் கட்டாயம் ஏமாற வேண்டியதுதான். ஏனெனில் அங்கு நம் கேரள சகோதரர் ஒருவரை, எப்படியும் சந்திக்காமல் இருக்க முடியாது.

* * *

உலகம் முழுவதும் பார்த்தவர்கள் நம் கேரள சகோதரர்கள் என்று கூறுகிறோமல்லவா? இப்போது பாருங்கள், உலகம் முழுதும் அவர்களைப் பதிலுக்கு விழி கொட்டாமல் பார்த்துக் கொண்டிருக்கிறது! இந்தத் தேர்தலில் அது கம்யூனிஸ மயமாகி யிருப்பதால்தான் இந்தப் பார்வை!

# அன்பார்ந்த நேயர்களுக்கு

கல்கிப் பத்திரிகை ஆரம்பித்துப் பதினாறு ஆண்டுகள் ஆகின்றன. இந்தப் பதினாறு ஆண்டு காலத்தில் தமிழ்ப் பெருமக்கள் கல்கிப் பத்திரிகையிடம் காட்டி வந்திருக்கும் பேரன்பையும் பேராதரவையும் எண்ணிப் பார்க்கும்போது அதற்கு ஈடுமில்லை, இணையுமில்லை என்று சொல்லத் தோன்றுகிறது.

இந்தப் பத்திரிகையில் அவ்வப்போது ஒரு சாராருக்குப் பிடிக்காத விஷயங்களை எழுதி வந்திருக்கிறோம். அதனால் நேயர்கள் பலரின் கண்டனத்துக்கும் உள்ளாகி யிருக்கிறோம். இருந்தாலும் நமக்கு உண்மை என்று பட்டதை, நாட்டுக்கு நன்மை என்று தெரிந்ததை, நியாயம் என்று உணர்ந்ததை எடுத்துச் சொல்வதற்கு நாம் எப்போதுமே பின் வாங்கியதில்லை. அதை உறுதியாகவும் அழுத்தமாகவும் எடுத்துச் சொல்லி யிருக்கிறோம்.

நம்முடைய அபிப்பிராயம் தவறு என்று தெரிந்து கொண்டபோது அவைகளை மாற்றிக் கொள்ளவும் நாம் தயங்கியதில்லை. ஆனால் பலருடைய கண்டனத்துக்கும் எதிர்ப்புக்கும் மத்தியில் நாம் வற்புறுத்திக் கூறி வந்த விஷயங்கள் பின்னால் மேளதாளத்துடன் நிறைவேறி யிருப்பதைக் கல்கி நேயர்கள் பார்த்து மகிழ்ந்து வந்திருக்கிறார்கள்.

கல்கிப் பத்திரிகை இம்மாதிரி பலமுறை நேயர்களின் கடுமையான சோதனைகளுக்கும் அன்பு நிறைந்த ஏகோபித்த பாராட்டுதலுக்கும் உள்ளாக நேர்ந்திருக்கிறது.

**　　　**　　　**

சமீபகாலத்தில் சூயஸ் கால்வாயில் விழுந்த குண்டு எப்படி உலகத்தில் ஒரு பெரிய நெருக்கடியை உண்டுபண்ணியதோ, அதேபோல நமக்கும் ஒரு நெருக்கடியை உண்டு பண்ணி விட்டது. நமக்கு வர வேண்டிய காகிதக் கப்பல் சூயஸ் கால்வாய்க்கு அப்புறத்திலேயே நின்று விட்டது. அதனால் நாம் வழக்கமாக உபயோகித்து வந்த காகிதத்துக்குப் பதிலாகத் தரக் குறைவான காகிதத்தைக்கூட உபயோகிக்கும்படி நேர்ந்தது உண்டு. அப்படி இருந்தும் அதையும் பொருட்படுத்தாமல் நேயர்கள் கல்கிப் பத்திரிகையை ஆதரித்தார்கள் என்பதை எண்ணும்போது இதயத்தில் நன்றி உணர்ச்சி பொங்குகிறது.

சூயஸ் கால்வாயில் தகராறு ஏற்படுவதற்கு முன்னமேயே பத்திரிகைக் காகிதத்துக்குச் சோதனை ஏற்பட்டு விட்டது. அதன் விலை விஷம் போல் ஏற ஆரம்பித்துவிட்டது. கூடவே பத்திரிகைத் தொழிலுக்கு மிகவும் அவசியமான இதர பல சாமான்களின் விலையும் ஒன்றுக்கு மூன்றாக உயர்ந்து கொண்டே போகின்றன.

இம்மாதிரி பல தொல்லைகளுடன் இப்பொழுது இன்னொரு புதிய சங்கடமும் ஏற்பட்டிருக்கிறது. வரும் ஏப்ரல் மாதத்திலிருந்து புதிய நாணய முறை அமுலுக்கு வரப் போகிறது. ரூபாய்க்கு அறுபத்துநாலு காலணா என்றிருந்த முறை மாறி நூறு நயா பைசா முறை வருகிறது. இந்த நாணய மாற்றமும் நமக்குப் பல விதத்தில் சங்கடத்தைக் கொடுத்திருக்கிறது.

**இதனால் அடுத்த இதழிலிருந்து கல்கி தனிப் பிரதியின் விலை முப்பது நயா பைசாவாக உயர்த்த வேண்டியிருக்கிறது. இதைப் போலவே கல்கியின் வருஷ சந்தாவிலும் உரிய மாறுதலுண்டு. கல்கியின் இந்தச் சிறிய விலை உயர்வை நேயர்கள் பொருட்படுத்த மாட்டார்கள் என்று நம்புகிறோம்.**

கல்கியின் இந்த விலை உயர்வால் நேயர்கள் இரட்டிப்பு பலன் அடைய வழி செய்திருக்கிறோம். வழக்கத்தைவிட அதிக பக்கங்களுடனும், புதுப் புது விஷயங்களுடனும், தமிழ் நாட்டின் மிகச் சிறந்த எழுத்தாளர்களின் நவநவமான சிறுகதைகளுடனும் கல்கியைக் கலை மணம் கமழும் ஒரு இலக்கிய மலராகவே வாரா வாரம் வெளியிடுவதற்கு வேண்டிய முயற்சிகளைச் செய்து வருகிறோம்.

அடுத்த இதழிலிருந்து இரண்டு புது அம்சங்கள் ஆரம்பமாகின்றன. பாரதநாட்டுக்குத் தொண்டாற்றிய பெண்மணிகளை ''மாதர்குல திலகங்கள்'' என்ற பகுதியில் நேயர்கள் தரிசிக்கப் போகிறார்கள்.

உலகில் என்னென்னவோ அற்புதங்கள் நிகழ்ந்து வருகின்றன. எத்தனை எத்தனையோ அதிசயங்களை ஆராய்ச்சியாளர்களும், விஞ்ஞானிகளும் கண்டு பிடித்து வருகின்றனர். இவைகள் எல்லாவற்றையும் தெரிந்து கொள்வதில் நேயர்களுக்கு ஆவலாக இருப்பது இயற்கை. நேயர்களின் இந்த ஆவல் 'தெரியுமா உங்களுக்கு?' என்ற பகுதியில் பூர்த்தியாகப் போகிறது.

இதுவரை கல்கியிடம் இணையற்ற அபிமானம் காட்டி வந்திருக்கும் நேயர்கள் இந்த நன்முயற்சியை ஆர்வத்துடன் வரவேற்பார்கள் என்று நம்புகிறோம். அவர்களுடைய மனம் நிறைந்த அன்புக்கும் ஆதரவுக்கும் கல்கிப் பத்திரிகை என்றென்றைக்கும் உரியதாக இருக்க வேண்டும் என்பதுதான் நம்முடைய மனோரதமாகும்.

**　　　**　　　**

தமிழ்கூறும் நல்லுலகில் வரும் சித்திரைப் புத்தாண்டு கலை மணத்துடன் பிறக்கப் போகிறது. ஏப்ரல் 14-ந் தேதி கல்கி இதழ் விசேஷ சித்திரை மலராக மலர்கிறது. மூன்று வர்ணச் சித்திர முகப்புப் படமும், சங்க இலக்கியக் காட்சிகளும், கவிதைச் சித்திரங்களும், ஹாஸ்யச் சித்திரங்களும் மலரில் சிறப்பாக இருக்கும். வழக்கமான தொடர் அம்சங்களுடன் இருபது பக்கங்கள் கொண்ட முழு நாவலும் மலரில் இடம் பெறுகிறது. நூற்று இருபது பக்கங்களுக்கு மேல் உள்ள இந்த மலரின் விலை முப்பது நயா பைசாதான் என்பதையும் நேயர்களுக்கு மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம். **வணக்கம் - ஆசிரியர்**

# வாழ்க, ஜனநாயகம்!

பி. டி. ராஜன்

ஜனநாயக ஆட்சி முறையில் பொது மக்களுக்கு உண்மையாகக் கொடுக்கப்பட்ட உரிமை வாக்குரிமை ஒன்றுதான். அந்த உரிமையையும், நமது அரசியல் சட்டப்படி ஐந்து ஆண்டுகளுக்கு ஒரு முறைதான் நாம் உபயோகிக்க முடியும். அத்தகைய மதிப்பு வாய்ந்த ஒரு உரிமையை மக்கள் ஒவ்வொரு வரும் எவ்வாறு பயன்படுத்த வேண்டும் என்று அவர்களுக்கு நல்ல முறையில் விளக்க மாக எடுத்துச் சொல்ல வேண்டியதே தேர்த லில் அரசியல் கட்சிகளின் கடமையாகும். இதைக் குறித்தே பிரதமர் நேரு அவர்களும் தேர்தல் பிரசாரம் பாமர மக்களுக்கு ஓர் சர்வகலாசாலைப் படிப்புக்கு ஒப்பானது என்று கூறி வருகின்றார். ஆனால் இப்பொழுது நடை பெற்ற தேர்தலில், ஆட்சியிலுள்ள கட்சியினர் தாங்கள் வெற்றி பெறுவதற்காக என்னென்ன முறைகளைக் கையாண்டார்கள் என்பதைப் பார்த்தவர்கள், நாட்டின் எதிர்காலத்தைப் பற்றி மனம் வருந்தாமல் இருக்க முடியாது.

அபேட்சகர்கள் பணம் கொடுத்து வாக்கு களை வாங்குவதும், வோட்டர்கள் அவைகளை விற்பதும் தேர்தலில் ஒரு சர்வ சாதாரண செய்கையே யாகும் என்று பொதுமக்கள் நினைக்கும் அளவுக்கு லஞ்சப் பழக்கம் நாட் டிலே புகுத்தப்பட்டு விட்டது. அத்துடன் பயமுறுத்தல், கொலை, குடி, களவு, தீ வைத் தல் முதலிய செய்கைகளில் ஈடுபடும் அள வுக்குக் கூடப் பல நிகழ்ச்சிகள் சில இடங் களில் நடைபெற்றிருக்கின்றன. மேலும் மக்க ளிடையே ஜாதிவெறியைத் தூண்டிவிட்டு அதன்மூலம் அவர்கள் ஆதரவைப் பெறும் முறையும் பழக்கத்துக்கு வந்து விட்டது.

மகாத்மா காந்தியின் போதனைகளில் சத்தி யம், நேர்மை, குடி ஒழித்தல், அஹிம்சை, ஜாதி வித்தியாசங்களை ஒழித்தல் ஆகிய வைகளே முக்கியமானவைகளாகும். இப் போதனைகள், இப்பொழுது நடைபெற்ற தேர்தலில், எந்த அளவுக்குக் கடைப்பிடிக்கப் பட்டன என்பதைப் பார்த்து, மகாத்மா காந்தியின் ஆவி இன்று கண்ணீர் விட்டுக் கொண்டிருக்கும் என்பது உறுதி.

இன்று காசைக் கொடுத்து வோட்டை வாங்குபவர்கள், நாட்டுக்கும் மக்களுக்கும் தாங்கள் எவ்வளவு பெரிய தீங்கைச் செய் கிறோம் என்பதைத் தெரிந்து கொண்டார் களோ, இல்லையோ? இன்று காசுக்காக வோட்டை விற்பவர்கள் நாளை, காசுக்காக நாட்டையும் காட்டிக் கொடுக்க மாட்டார் களா என்பதை நாம் சிந்திக்க வேண்டும்.

நல்ல ஜனநாயக முறைகளை மக்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டும்; அதன்படி நாமும் நடந்து காட்ட வேண்டும். அப்பொழுது தான் மக்களிடையே உண்மையான நாட்டுப் பற்று உண்டாகும். ஜனநாயகமும் நல்ல முறையில் வளர்ச்சியடையும்.

ஜனநாயகத்துக்கு இன்றியமையாத ஓர் உறுப்பு ஒரு நல்ல எதிர்க்கட்சியாகும். இன்றைய நிலையில் நமது சென்னை இராஜ் யத்தில் இந்தப் பொறுப்பை ஏற்றுக் கொள் ளத் தகுதி வாய்ந்தவர்கள் தி. மு. கழகத் தினரே. ஆகையால் தான் இத்தேர்தலில் நான் அவர்களை ஆதரித்தேன், அவர்கள் வெற்றியடைய வேண்டுமென்றும் விரும்பி னேன். மதச்சார்பற்ற ஒரு ஜனநாயகக் குடியரசு அமைப்பில், மதச் சார்பற்ற கட்சி ஒன்று இருப்பதைக் குற்றமென்று யார் சொல்ல முடியும்? அரசியலுக்கும் மதத்துக் கும் சம்பந்தமில்லை. அரசியல் நாட்டைப் பொறுத்த விஷயம், மதம் தனி மனிதனைப் பொறுத்த விஷயம். ஆகையால் இன்று சட்ட சபைக்குச் சென்றுள்ள திராவிட முன்னேற் றக் கழகத்தினர் சரியான எதிர்க்கட்சியாக இருந்து நல்ல முறையில் பணியாற்றி நாட் டுக்குச் சேவை செய்வார்கள் என்று நம்பு கின்றேன். வாழ்க ஜனநாயகம்!

[தேர்தல் நடந்த முறையைப் பற்றி திரு பி. டி. ராஜன் அவர்கள் குறைப்பட்டிருப்பது போலவே, பலரும் அபிப்பிராயம் கொண் டிருக்கிறார்கள். ஜனநாயகத்தில் மக்கள் நம்பிக்கை இழக்காமல் இருப்பதற்காகவும் பொது மக்களுடைய சீலம் பழுதுபடாமல் இருப்பதற்காகவும், காந்திமகான் வளர்த்த காங்கிரஸ் மகா சபையின் தொண்டர் கூட்டம் தன்னுடைய நல்ல பெயரை மீண்டும் பெறுவ தற்காகவும் நேருஜி அவர்கள் ஒரு பகிரங்க விசாரணைக் கமிட்டி ஏற்படுத்தித் தேர்தலில் நடைபெற்ற குறைபாடுகளை விசாரிக்க வேண்டும். இது காலதாமதமின்றிச் செய்யப் பட்டால் தேர்தலில் சட்டமும் நீதியும் நிரா கரிக்கப்பட்டது பற்றிய போதிய சான்றுகள் கிடைக்கும். ஆசிரியர்]

ஆடல் பாடல்

# வேதமூர்த்தியின் நாதஸ்வரம்

இசைத்தும்பி

மார்ச் 22உ. வெள்ளிக்கிழமை இரவு. என் நண்பர் என்னைச் சாப்பாட்டுக்கு அழைத்திருந்தார். அவர் வீட்டில் சாப்பாடு பிரமாதமாக இருக்கும். அந்தச் சபலத்தில் வயிற்றுக் கோளாறு உள்ள நான், ஆவது ஆகட்டுமென்று ஒத்துக்கொண்டு, ஆனந்தமாகச் சாப்பிட்டு விட்டு வெற்றிலை போட்டுக் கொண்டிருந்தேன். அந்தச் சமயத்தில் அவருடைய பெண் ரேடியோப் பெட்டியின் 'ஸ்விச்'சைப் போட்டுவிட்டாள். அதாவது இரவு 9-30 மணிக்கு ரேடியோவிலிருந்து நாயன வாத்திய இசை கேட்டது.

ஒரு அறிவிப்பும் வந்தது. ''திருச்சி தில்லை நகரில் நடந்து வரும் அருணகிரிநாதர் விழாவில் நடக்கும் வேதாரண்யம் திரு வேதமூர்த்தியவர்களின் நாகஸ்வரக் கச்சேரிக்கு நேயர்களை அழைத்துப் போகிறோம்'' என்று சொல்லப்பட்டது.

திரு வேதமூர்த்தியின் நாகஸ்வரத்திலிருந்து வெளிவந்த இசையின் 'குளுமை'யில் எங்களது பேச்சுக் கச்சேரி நின்றுவிட்டது. நாகஸ்வர இசையை ரஸிக்கும்படி செய்துவிட்டார் திரு வேதமூர்த்தி.

நமது தென்னாட்டுக்கே உரித்தான தனிப் பெருமையுடன் விளங்குவது மங்கள வாத்தியமான நாகஸ்வரம். ஆலய வழிபாடுகளுக்கும், கல்யாணங்கள் முதலிய மங்களகரமான விசேஷங்களுக்கும் முதன்மையாக நாம் உபயோகப்படுத்திக் கொள்ளும் சுபமான வாத்தியம் நாகஸ்வரமாகும்.

தற்காலத்தில் அந்த வாத்தியத்தைக் கையாளுவதில் சில கோளாறுகள் ஏற்பட்டு அந்த வாத்தியத்திலிருந்து ஸ்வர சுத்தமான நாதப் பொழிவு கிடைப்பதும், கர்ணாடக சுத்தமான நாதப் பொழிவு கிடைப்பதும், கர்ணாடக சுத்தமான பழைய பிரஸித்த ராகங்களைக் கேட்பதும் மிகமிக அபூர்வமாகி விட்டன. இந்தக் குறையை ஒருவாறு பெரிய நாகஸ்வர வித்வான்களே வெளிப்படையாக ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். இந்தக் குறையை நிவர்த்திக்க வேண்டியது நாகஸ்வர வித்வான்களின் கடமையாகும்.

அதிலும் நாகஸ்வரத்துக்கு ஆதார சுருதியாக ஒத்து என்னும் வாத்தியம் இருந்து வந்திருக்கிறது. ஆனால் அந்த ஒத்திலிருந்து நாதமே வெளிவராத வண்ணம் அதன் அடிப்பாகத்தில் ஒரு பந்தளவு துணியை அடைத்து ஒத்து ஊதுபவரைத் தொலைவில் இருக்கச் செய்து விட்டு, சுருதி இல்லாமல் நாயனம் வாசிப்பதையே நாம் கேட்டு வரும்படியாகி விட்டது. அதிலும் அபஸ்வரமயமாகவும், பெயரே கேளாத ராகங்களாகவும் அதாவது தனி உருவம் இல்லாத ராகங்களாகவும் இருந்தால் யார்தான் அலுத்துக் கொள்ள மாட்டார்கள்?

வேதாரண்யம் திரு வேதமூர்த்தியின் நாகஸ்வர நாதத்துடன் ஆதார சுருதிக்குப் பஞ்சம ஷட்ஜங்கள் சுத்தமாகச் சேர்க்கப்பட்ட ஒரு சுருதிப் பெட்டி நல்ல நாதத்துடன் ஒலித்ததும் 'அந்தச் சுருதியுடன் நன்கு இழைந்து இணைந்து வாசித்ததையும் கேட்டபோது, எங்கோ சொர்க்கலோகத்தில் இருப்பதுபோல் இருந்தது.

சக்ரவாக ராகத்தில் ஒரு திருப்புகழும், பிறகு பிலஹரி ராகத்தில் ஒரு உருப்படியும், மோகனத்தில் ஒரு உருப்படியும் பைரவியில் ஒரு கீர்த்தனமும் வாசித்தார். அவைகளில் பிலஹரி ராகமும், மோகன ராகமும் வெகு அழகாக இருந்தன. பைரவியை விஸ்தாரமாக வாசித்து 'தனயுனிப்ரோவ' கீர்த்தனத்தின் சரணத்தில் நிரவல் செய்து ஸ்வரம் வாசித்தது அருமையாக இருந்தது. முக்கியமாக ராகங்களை மத்ய ஸ்தாயியில் விரிவாகச் சஞ்சாரம் செய்வது வாய்ப்பாட்டிலும் சரி, வாத்தியங்களிலும் சரி இப்பொழுது கேட்பது அபூர்வமாகிவிட்டது. அதிலும் வானொலி நிலையத்தில் ஒரு அறையில் உட்கார்ந்து 'மைக்'கைப் பார்த்துப் பாடுபவரும் சரி, வாத்தியம் வாசிப்பவரும்கூட மேல் ஸ்தாயியில்தான் சஞ்சாரம் செய்கிறார்கள். அதற்குத் தகுந்தபடி ராகங்களுக்கும் ஒரு சிட்டை ஏற்பட்டு அடுக்கடுக்காகச் சில சங்கதிகளைப் போட்டு நம் காதுகளைச் செவிடாக்கி வருவதுதான் வழக்கமாக இருந்து வருகிறது. ஆனால் அம்மாதிரி முறையில் நல்ல சங்கீதம் இல்லை என்பதை நிரூபிப்பதுபோல் திரு வேதமூர்த்தி பைரவி ராக ஆலாபனையை மத்யஸ்தாயியில் கர்ணாடக சுத்தமாக, அழகாக விஸ்தரித்து வாசித்தது ஆனந்தமாகவும் மேல் ஸ்தாயியில் ஒரு அளவிலேயே வாசித்தது ரஸமாகவும் இருந்ததுடன், நாத வெள்ளத்திலேயே நம்மை மிதக்கவும் செய்து விட்டார்.

திரு வேதமூர்த்தி வாசித்த நாயனம் பாரி நாயனந்தான். அதில் சுத்தமத்யமம் பஞ்சமம் பரம சுத்தமாகச் சேர்ந்திருந்ததும் தங்கு தடையில்லாமல் மத்ய ஸ்தாயியில் அவர் வாசித்ததும் குறிப்பிடாமல் இருப்பதற்கில்லை.

வாசிப்பில் நல்ல கார்வையுடன் நாதத்தில் நல்ல சுகமும், குளுமையும், நல்ல பிர்க்காப் பொழிவும், குழைவும், தழைவும் அமைந்திருக்கின்றன. ராகம் வாசிப்பில் நல்ல பாவபுஷ்டியும் பேச்சு சுத்தமும் இருந்ததை முக்கியமாகக் கூறவேண்டும். ஏன், திரு வேதமூர்த்தியின் வாசிப்பைக் கேட்கும் போது நாகஸ்வர மன்னர் திரு ராஜரத்தினம் பிள்ளையின் நினைவு வந்து கொண்டே இருந்தது. அவ்வளவு அபாரமாய்த் திரு வேதமூர்த்தி நாகஸ்வரத்தைக் கையாண்டார்.

எதிர்காலத்தில் திரு வேதமூர்த்தி நமது கர்ணாடக சம்பிரதாய சங்கீதத்தின் தரம் குறையாமல் உயர்வான முறையில், வர்ஜா வர்ஜக்ரமங்களில் கவனம் செலுத்தி, நாகஸ்வர இசை உலகத்தில் ஒரு மார்க்கதரிசியாக விளங்குவார் என்பதில் சந்தேகமில்லை.

# ஈழ நாட்டுப் பிரயாணம் (12)

தமிழ் நாட்டில் சென்ற சில ஆண்டுகளாகப் பல வகையான பிரசாரங்கள் நடைபெற்று வருகின்றன. அதில் குறிப்பாகச் சொல்ல வேண்டியது கடவுள் ஒழிப்புப் பிரசாரமாகும். கடவுளைப் பற்றி யாரும் கவலைப்படவேண்டியது இல்லை. ஜாபாலி முதலிய முனிபுங்கவர்களும், இரணியன் முதலான இராட்சதர்களும், இங்கர்ஸால் போன்ற உலகப் புகழ்பெற்ற அறிவாளிகளும் எவ்வளவோ பிரயத்தனம் செய்தும் கடவுளை யாரும் அசைக்க முடியவில்லை. கல்லுப்பிள்ளையார் போல் அழுத்தமாக, ஆழமாக வேர்விட்டுக்கொண்டு கடவுள் மக்களின் இதயங்களில் அமர்ந்திருக்கிறார்.

தமிழ் நாட்டில் உள்ள முருகனின் ஆறு படை வீடுகளான திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், பழனி, சுவாமிமலை, திருத்தணி, அழகர் கோயில், ஈழநாட்டில் உள்ள கதிர்காமம் ஆகிய வேலன் தலங்களில் உற்சவம் நடக்கும் போது ஆயிரக் கணக்கில், லட்சக் கணக்கில் முருகனடியார்கள் வருகிறார்கள். அவர்களில் ஆயிரக்கணக்கானோர் புஷ்பக் காவடி என்றும், பால் காவடி என்றும், மச்சக் காவடி என்றும் பலவிதமான காவடிகளை எடுத்து வருகிறார்கள். பட்டதாரிகள்; பணக்காரர்கள்; பாமரர்கள்; சைவ, வைஷ்ணவ, பௌத்த மதத்தைச் சேர்ந்தவர்கள் எல்லாரும் காவடி எடுத்து வருகிறார்கள். முருகனின் சந்நிதியில் காவடியுடன் ஆடிக் குதிக்கிறார்கள்.

நாத்திகப் பிரசாரங்கள் மக்கள் மனத்தில் பக்தி உணர்ச்சி பொங்கித் ததும்பிப் பூரணமாகப் பெருகி வெள்ளமாக ஓடுவதற்குத்தான் உதவி செய்கின்றன.

தமிழ் நாட்டிலும் சரி, ஈழநாட்டிலும் சரி முருகனுடைய பக்தர்கள் ஏராளமாக இருக்கிறார்கள். அவர்கள் நீண்ட வழிப் பிரயாணம் செய்யும்போதெல்லாம் கலியுகத்தின் கடவுளான கதிர்வேலனை மறப்பதில்லை.

"கதிர்காமக் கந்தன்
கைபிடித்து வருவான்"

என்ற மந்திரத்தைச் சொல்லிக் கொண்டு போவார்கள். வனப்பிரதேசங்களில் பயங்கர மிருகங்கள் நிறைந்த காட்டுவழிகளில் தனிமையில் பிரயாணம் செய்யும்போது கந்தனடியார்கள் இந்தத் திரு மந்திரத்தை உச்சரித்துக் கொண்டு போவார்கள்.

"நம்பினோர் கெடுவதில்லை
நான்குமறை தீர்ப்பு"

என்று கவியரசர் பாரதியார் பாடியுள்ளபடி முருகனிடம் நம்பிக்கை வைத்திருப்பவர்களுக்குத் தமிழ்த் தெய்வமான முருகனே கைப்பிடித்து வருவான் என்று சொல்லப்படுகிறது. அதற்கு எத்தனை எத்தனையோ நம்ப முடியாத பல அதிசய சம்பவங்களையெல்லாம் முருகனடியார்கள் எடுத்துக் காட்டுகிறார்கள்.

இவ்வளவு சக்தியுள்ள தெய்வம், தமிழ்க் கடவுள் கையிலே வேலேந்தி நிற்கும் கம்பீரமான காட்சியை இந்த வாரத்து அட்டையில் நேயர்கள் கண்டு தரிசிக்கலாம்.

"சுற்றி நில்லாதே போ - பகையே
துள்ளி வருகுது வேல்!"

என்று ஈழநாட்டுக்கு அபயம் அளிப்பதுபோலக் கதிர்வேலன் காட்சி அளிக்கிறான். கதிர்காமக் கடவுள் குடிகொண்டிருப்பதால்தானோ என்னவோ ஈழத் தீவே வேல்வடிவத்திலே காட்சி தருகிறது. கதிர்காமத்தில் இருந்தபோது, தமிழ்க் கடவுளான முருகன் தமிழ் மக்களுக்குத் தன்னுடைய பக்தர்களுக்கு அபயம் அளிப்பதற்காகக் கையில் வேலேந்தி நிற்பதுபோன்ற மன உணர்ச்சி ஏற்படுகிறது. கதிர்காமக் கடவுளின் சந்நிதியில் நிற்கும்போது, அங்கு நின்று "ஓ! முருகா!" என்று நினைத்தவுடன் "மயிலேறி அயிலெடுத்துவரும் செவ்வேள்!" நம் முன் காட்சி தருகிறான்.

இந்தப் புண்ணிய பூமியான கதிர்காமத்துக்குச் செல்வதற்குத்தான் இசை மாமுனைமயி



## இதுதானே



லிருந்து அதிகாலையிலேயே புறப்பட்டோம். இங்கிருந்து கதிர்காமம் சுமார் முப்பது நிமிடப் பிரயாணம்தான். அதிகமாக இருந்தால் பன்னிரண்டு மைல் இருக்கும். காட்டுக்கு மத்தியில் உள்ள சாலையில்தான் கார் போகிறது. இருபுறமும் இப்பொழுது காடுகளை அழித்து, சேனைப் பயிர் வைத்திருக்கிறார்கள். ஒவ்வொரு தோட்டத்திலும் நட்ட நடுவில் ஒரு உயரமான கம்பத்தின் மீது ஒரு குடிசை இருக்கிறது. அந்தக் கம்பத்தைச் சுற்றி இரவில் தீ வளர்த்திருப்பார்களாம்.

''ஏன் அப்படித் தீ வளர்க்கிறார்கள்?''

''இது யானைகள் வாழும் காடு. இரவு நேரத்தில் சேனைக்கிழங்கைச் சாப்பிடுவதற்காகக் காட்டு யானைகள் வரும். அதை விரட்டுவதற்குத் தோட்டத்தின் மத்தியிலே உயரமான கம்பத்தின் உச்சியில் அமைத்திருக்கும் குடிசையில் இருக்கும் காவற்காரன் ஏதாவது சத்தம் செய்வான். அப்பொழுது காட்டு யானை அந்தக் குடிசையை மோதிக் காவற்காரனைக் கொன்று விடாமல் இருப்பதற்காகக் குடிசை கட்டியிருக்கும் கம்பத்தைச் சுற்றித் தீ வளர்த்து வருகிறார்கள்.''

அடாடா! மனிதன் ஒரு சாண் வயிற்றை நிரப்பிக் கொள்வதற்காக என்னென்ன அபாயமான முறையிலெல்லாம் வாழ்க்கையை நடத்த வேண்டியிருக்கிறது!

இவ்வாறு கதிர்காமத்துக்குச் செல்லும் வழி நெடுகிலும் இருக்கிறது. இந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டே கதிர்காமத்துக்குச் செல்வதற்கு முன் கதிர்காமத் தலத்தைப் பற்றித் தெரிந்து கொள்வோம்.

*** *** ***

ஈழநாட்டின் தென்பகுதியில் ஊவா மாகாணத்தில் தியனகம என்னும் காட்டில் இருக்கிறது கதிர்காமம். மாணிக்கக் கங்கைக் கரையில் உள்ள சிற்றூருக்குத்தான் கதிர்காமம் என்று பெயர். வேலாயுதம்போல முக்கோண வடிவமுள்ள இந்தச் சிற்றூரில் கதிர்காமக் கடவுளான கதிர்வேலன் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கிறார்.

கதிர்காமன் சந்நிதி
தெற்கு நோக்கியும்

# கதிர்காமம்!



பகீரதன்

**அருள்வாக்கு**

**இந்தப் பிறப்புக்கு அப்புறமும் நாம் இருக்கிறோம்; அதனால் இப்பொழுதே நல்ல காரியங்கள் செய்ய வேண்டுமென்று ஆஸ்திகன் சொல்லுகிறான். அப்புறம் இருப்பது என்ன நிச்சயம் என்று நாஸ்திகன் சொல்லுகிறான். இப்பொழுது நல்ல காரியங்களைச் செய்துவிட்டால் பின்பு இருந்தால் நன்மை உண்டு; இல்லாவிட்டால் நஷ்டம் ஒன்றும் இல்லை. இரண்டு பக்ஷத்திலும் ஆஸ்திகனுக்குக் கஷ்டமே இல்லை. பின்பு நாம் இருப்பது உண்மையானால் சும்மா இருந்த நாஸ்திகன் பாடுதான் திண்டாட்டம்.**

**— ஸ்ரீ சங்கராச்சாரியார்**

வள்ளியம்மன் சந்நிதி வடக்கு நோக்கியும் இருக்கிறது. தம்முடைய இளம் மனைவி வள்ளியை எப்போதும் பார்த்துக் கொண்டே இருப்பதற்காகத்தான் கதிர்காமன் கோயிலை இப்படி அமைத்துக் கொண்டாரோ என்னவோ! இவர்களுடைய இந்தக் காதலுக்கு இடையூறு செய்ய விரும்பாமல் தெய்வயானை தமது கோயிலைக் கிழக்கு நோக்கி அமைத்துக் கொண்டிருக்கிறார் போலும்!

''முருகக் கடவுள் எல்லா இடத்தையும் விட்டுக் கதிர்காமத்துக்கு ஏன் வந்தார்?''

சூரபன்மனைச் சங்கரிக்கும் நோக்கத்துடன் முருகன் புறப்பட்டபொழுது கதிர்காமத்தை அடைந்து மாணிக்கக் கங்கையின் கரையில் கூடாரம் அமைத்திருந்தார். பின்னர் சூரபன்மனை வென்று வாகை சூடி மீண்டபொழுது கதிர்காமக் குன்றில் நவகங்கா தீர்த்தம் உண்டாக்கிச் சிந்தாமணி ஆலயத்தில் தேவர்கள் துதிக்க வள்ளி தெய்வயானையுடன் வீற்றிருந்தார் என்று புராணங்கள் கூறுகின்றன.

சீதாபிராட்டியைத் தேடி இலங்கைக்கு வந்த அநுமான் வெற்றி வேலனை கதிர்காமப் பெருமானை வணங்கிச் சென்றதாகச் சில முருக பக்தர்கள் கூறுகின்றனர்.

இந்த விவரங்களை உடன் வந்த நண்பர் கூறிக் கொண்டிருக்கும்போது சாலை திரும்பியது. கொஞ்ச நேரத்துக்கெல்லாம் ''இதோ கதிர்காமம் வந்துவிட்டது!'' என்றார் நண்பர்.

கதிர்காமம் என்றால் எப்படி எப்படி எல்லாமோ இருக்கும் என்று கற்பனை செய்து கொண்டிருந்தேன். கொஞ்ச தூரத்துக்கு அப்பாலேயே கதிர்காமத் தேவனின் ஆலயத்தின் கோபுர தரிசனம் கிடைக்கும். பிறகு கோயிலும் பெரிய மதிள் சுவரும் தெரியும். கோயிலைச் சுற்றிப் பெரிய ஊர் இருக்கும் என்றெல்லாம் எண்ணிக் கொண்டிருந்தேன். நண்பர் ஏதோ ஒரு சிறு தோப்பைக் காண்பித்து, ''இதுதான் கதிர்காமம்!'' என்றதும் எனக்கு ஒரு கணம் ஒன்றும் புரியவில்லை. ''இதுதானா, கதிர்காமம்!'' என்று வாய் விட்டுச் சொல்லிக் கொண்டேன்.

**வ**ண்டி மாணிக்கக் கங்கையின் கரையில் வந்து நின்றது. வட இந்தியாவில் உள்ள கங்கை நதியையும், தமிழ் நாட்டின் காவேரி நதியையும் பார்த்துப் பழகியவர்களுக்கு மாணிக்கக் கங்கையைப் பார்த்ததும் ஒன்றும் மலைப்புத் தோன்றாது. ஆனால் திகைப்புத்தான் தோன்றும். ''இதுதான் மாணிக்கக் கங்கையோ!'' என்று எண்ணத் தோன்றும். எல்லாம் ஒரு கண நேரம்தான். பிறகு மனத்தில் நம்மை யறியாமல் ஒரு மாற்றம் ஏற்படுகிறது. மாணிக்கக் கங்கைக் கரையில் அடர்ந்து படர்ந்து இருக்கும் மருத மரங்களின் அழகும், சல சல என்ற சத்தத்துடன் மாணிக்கக் கங்கையின் ஒரு ஓரத்தில் பளிங்கு போன்ற தண்ணீர் ஓடிவரும் கோலமும் நம்மைக் கவர்ந்து விடுகின்றன.

அந்தத் தண்ணீரில் அடிக்கடி ஏதோ சலசலப்பு ஏற்படுகிறது. திடீர் திடீர் என்று தண்ணீர் வெண் முத்துக்கள் போல் சிதறித் தெறிக்கிறது. அது என்ன என்று ஆவலுடன் பார்க்கிறோம். பார்த்தபடியே நிற்கிறோம். மீன்கள் கூட்டம் கூட்டமாகத் திரிகின்றன. நம்மைப் பார்த்தவுடன் காதலோடு ஓடிவருகின்றன. மாணிக்கக் கங்கையில் கதிர்காமக் கடவுளின் சந்நிதியில் மீனாய் இருப்பதைவிட பாக்கியம் வேறு என்ன வேண்டும். அவைகள் எல்லாம் உண்மை மீன்களா? இல்லை, மீன் உருவில் இருக்கும் முருக பக்தர்களா? யார் கண்டார்கள்? ''திருவேங்கடச் சுனையில் மீனாய்ப் பிறக்கும் விதியுடையேன் ஆவேனே!'' என்று ஆழ்வார் இறைவனிடம் உள்ளம் உருகி இறைஞ்சவில்லையா?

இந்த மீன்களைப் பார்த்தவுடனேயே அவை மீது ஒரு அன்பும் இரக்கமும் நமக்கு ஏற்பட்டு விடுகின்றன. நாம் அருகிலிருக்கும் கடைக்குச் சென்று ஒரு ரொட்டியை வாங்கி வந்து அந்த மீன் கூட்டத்துக்குக் கொடுக்கிறோம். கண் மூடிக் கண் திறக்கும் நேரத்துக்குள் மீன் கூட்டம் ரொட்டியைக் காலி செய்து விடுகிறது. இன்னும் ரொட்டி கிடைக்குமா என்று அந்த மீன்கள் நம்மை ஆவலுடன் பார்க்கின்றன. அவைகளுக்கு ரொட்டி வாங்கிப் போடவா நாம் கதிர்காமத்துக்கு வந்தோம். இல்லையே!

நான்குபுறத்திலிருந்தும் வரும் ''அரோகரா!'' என்ற மந்திரச் சத்தம் நாம் வந்த கடமையை நினைவூட்டுகிறது. நம்மையும் அறியாமல் ''அரோகரா!'' என்று சொல்கிறோம். முழங்கால் அளவுக்குத் தண்ணீர் ஓடும் 'ஜில்'லென்ற மாணிக்கக் கங்கையில் நீராடுகிறோம். நீராடி எழுந்ததும் நம்முடைய உடல் இலேசாகி விட்டது போன்ற உணர்ச்சி ஏற்படுகிறது. பாப மூட்டைகள் கரைந்து விட்டனவோ என்னவோ! மாசு படிந்த உள்ளத்தின் மாசு நீங்கி இதயம் மாணிக்கம் போலாகி விட்டதோ என்னவோ! இறைவன் திருவடியைத் தரிசிப்பதற்கு வேண்டிய மனத் தூய்மையைப் பெற்று விட்டது போன்ற மன நிலை உண்டாகி விடுகிறது. கதிர்காமத்து மாணிக்கக் கங்கையில் நீராடியவுடன் மனசில் இதுவரை இல்லாத ஒரு விசாலம் ஏற்பட்டு வருவதை உணர முடிகிறது. அப்பொழுதிருந்த மன நிலையை எழுத்திலே எழுதிக் காட்டுதல் அவ்வளவு எளிதல்ல. ஒரு முறை கதிர்காமத்துக்குச் சென்று மாணிக்கக் கங்கையில் நீராடி, பக்தி வெள்ளத்தில் பரவசமுற்று, ''அரோகரா!'' என்ற இரு மந்திரத்தைச் சொல்லிப் பாருங்கள். ஏதோ இனந்தெரியாத ஒரு பேரின்ப சுகமே கிடைத்துவிட்டதுபோன்ற மகிழ்ச்சி ஏற்படும்.

**மா**ணிக்கக் கங்கையில் நீராடியவுடன் அதன்மீது கட்டப்பட்டிருக்கும் பாலத்தைக்

கடந்து கதிர்காமத்துக்குள்ளே செல்கிறோம். கதிர்காமத்து வீதியில் செல்லும் போதே தூரத்தில் தெரியும் ஓடு வேய்ந்த ஒரு சிறு மண்டபத்தைக் காண்பித்து, "இதுதான் கதிர்காமக் கோயில்!" என்று கூறிவிட்டு "அரோகரா!" என்று பக்திப் பெருக்குடன் கூவனக்கில் போட்டுக் கொண்டார் நண்பர்.

கதிர்காமத்துக்குச் செல்வோர் விண்ணை முட்டும் கோபுரத்தின் அழகைக் கண்டு களிக்கலாம் என்றோ, வீதியின் அழகையும் தூய்மையையும் கண்டு வியக்கலாம் என்றோ, கர்ப்பூர தீப ஆரத்தின் ஒளியைக் கண்டு மயங்கலாமென்றோ, வரிசை வரிசையாக இருக்கும் கடை வரிசைகளையும், விதம் விதமான ஆண் பெண் கூட்டத்தையும் பார்த்து மகிழலாம் என்றோ எண்ணிக் கொண்டு சென்றால் உண்மையிலேயே ஏமாற்றம் அடைவார்கள். உண்மை பக்தியுடன்தான் செல்ல வேண்டும். கதிர்காமக் கடவுளைத் தரிசிக்கப் போகிறோம் என்ற உணர்ச்சியுடன்தான் செல்ல வேண்டும். இந்த உணர்ச்சியில் தான் ஆயிரக்கணக்கான முருக பக்தர்கள் ஆண்டுதோறும் இங்கு வருகின்றனர்.

இந்தப் புனிதமான எண்ணத்துடனேயே கதிர்காமக் கடவுளின் ஆலயத்துக்குச் செல்வோம். போகும்போதே இந்தத் திருக்கோயிலின் அற்புத மகிமையையும் சிறிது நினைவு படுத்திக் கொள்வோம்.

முன்பெல்லாம் அதாவது கதிர்காமத் தலத்துக்குச் சாலை வசதிகள் இல்லாத காலத்தில் நினைத்தபோது யாரும் கதிர்காமத்துக்குச் செல்லுவதில்லை. கதிர்காமத்துக்குச் செல்ல வேண்டும் என்று முருகனைப் பிரார்த்தித்துப் பல ஆண்டுகள் நோன்பிருப்பார்கள். பக்தனின் பிரார்த்தனைக்கு இரங்கிக் கதிர்காமன் கனவில் தோன்றுவான். "பக்தா! நீ கதிர்காம யாத்திரை செய்யலாம்!" என்று உத்தரவு கொடுப்பான். இதன் பின்னர்தான் பக்தர்கள் கதிர்காம யாத்திரைசெய்வார்கள். அவ்வாறு கதிர்க் காமக் கடவுளின் உத்தரவு பெறாமல் சென்றால் கொடிய மிருகங்கள் நிறைந்த காட்டு வழியில் பல இன்னல்களுக்கு உள்ளாக வேண்டியிருக்கும் என்ற நம்பிக்கை.

கதிர்காமனின் சந்நிதியில் சாதி மத பேதம் ஒன்றும் இல்லை. ஈழ நாட்டில் இதர இடங்களில் தீண்டாமை கடுமையாக அநுசரிக்கப்பட்டு வரும்போது கதிர்காமக் கடவுளின் சந்நிதியில் மட்டும் அந்தக் கொடுமை இல்லை. இது பன்னெடுங்காலமாகவே இங்கு இருந்து வருகிறது. காரணம் கடவுளின் உண்மைத் தத்துவத்தை உணர்ந்தவர்களே கதிர்காம யாத்திரையை மேற்கொண்டு வந்தார்கள். எல்லாரும் கடவுளின் மக்கள் என்ற எண்ணம் கொண்டவர்கள் மட்டுமே கதிர்வேலனைத் தரிசிக்கச் சென்றார்கள். பிறர் துன்பத்தைத் தன் துன்பமாக அநுபவித்த பெரியோர்கள் மட்டுமே ஆண்டவனை நாடிச் சென்றார்கள். "அரோகரா!" என்ற திருமந்திரத்தை உச்சரிப்பதில் அவர்கள் உண்மையான ஆனந்தத்தை அடைந்தார்கள். எந்தப் பொருளிலும் அவர்கள் தமிழ்க் கடவுளைக் கண்டு மகிழ்ந்தார்கள். அதனால் தமிழ்த் தெய்வத்தின் சந்நிதியில் கதிர் வேலவின் முன்னால் சாதிமதம் என்னும் பேய்கள் தூர விலகி ஒதுங்கி நின்று வந்திருக்கின்றன.

இத்தகைய சர்வமத சமரச மனப்பான்மைக்குச் சாட்சியாக விளங்குவதுதான் கதிர்காமக் கோயில். ஆனால் இந்தக் கோயிலுக்குள் விக்கிரகம் இல்லை. கர்ப்பக்கிருகமும் சிறு மண்டபமும் கொண்ட இந்தச் சிறு கோயிலுக்குள் கர்ப்பக்கிருக வாசலில் திரையிடப்பட்டிருக்கிறது. கதிர்காமத்தில் ஆறுமுகப்பெருமான் சிறியதொரு கோயிலில் திரை மறைவில் தான் வீற்றிருக்கிறார். திரைமறைவில் வீற்றிருந்தே திசையனைத்தையும் ஆண்டு வருகிறார் தீந்தமிழ்க் கடவுளான முருகன்.

நமது கோயில்களில் இருப்பது போலவே இங்கும் பூசை செய்பவர்கள் இருக்கிறார்கள். இவர்களைக் கப்புராளைமார் என்று சொல்லுகிறார்கள். கப்புராளைமார் பூசை செய்யும் முறை நமது கோயில் சம்பிரதாயங்களுக்கும் சடங்குகளுக்கும் மாறுபட்டவைகளாக இருக்கின்றன. வள்ளிமணாளனுக்குப் பூசை நிகழும் போது அவனை வரவேற்பதற்காகப் பெண்கள் ஆரத்தி எடுக்கிறார்கள். கப்புராளைமார் தம் வாயை மஞ்சள் துணியினால் கட்டிக் கொண்டு, நிவேதனத்துக்கு வேண்டிய அமுதைக் காவித் துணியால் மூடிக்கொண்டு உள்ளே செல்கிறார். பிறகு வெளியே வந்து திரைச்சீலைக்கு முன்பாக தலைக்குமேல் கை குவித்து நின்று வழிபாடியற்றுகின்றனர். இவர்கள் எல்லாரும் சிங்களவர்கள்தான். தமிழ்த் தெய்வமான முருகனுக்குப் பூசை செய்யும் இவர்களுக்குத் தெய்வத் தமிழின் இனிமை தெரியாதது விந்தையே!

சாதாரணமாக, பக்தர்கள் கதிர்காமக் கடவுளின் கோயிலுக்குப் போகும்போது தேங்காய் பழம் ஊதுவத்தி முதலியவைகள் கொண்டு செல்கின்றனர். அவைகளைத் தட்டில் வைத்துக் கப்புராளைமாரிடம் கொடுக்கின்றனர். கப்புராளைமார் சட்டை, தலைப்பாகை எல்லாம் அணிந்து கொண்டுதான் இருக்கின்றனர். இப்பொழுது அவர் தம் வாயைத் துணியினால் கட்டிக் கொள்வதில்லை. பக்தர்கள் கொடுக்கும் தேங்காய், பழத் தட்டுகளைப் பெற்றுக் கொண்டு கர்ப்பக்கிருகத்துக்கு முன்னால் இருக்கும் திரையை விலக்கிக் கொண்டு உள்ளே போகிறார். உள்ளிருந்து தேங்காய் உடைக்கும் ஓசையும், மணி அடிக்கும் நாதமும் கேட்கின்றன. இவையே நம் செவியில் தேன்மாரி பொழிகின்றன. 'ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே!' என்ற தேவாரத்தின் பொருள் விளங்கி ஆனந்த பரவசம் அடைகிறோம்; மெய்யுருகி நிற்கிறோம்.

மண்டபத்தில் எரியும் ஊதுவத்தியின் மணமும், சாம்பிராணி வாசனையும் கம்மென்று வருகின்றன. சற்று நேரத்துக்கெல்லாம் கர்ப்பக்கிருகத்துக்குள் இருந்து கப்புராளைமார் தேங்காய், பழத்தட்டுடன் வெளியில் வருகிறார். பக்தர்களுக்கு விபூதி வழங்குகிறார். இந்த விபூதி நாம் இதர கோயிலில் பெறும் விபூதி போன்றதன்று. கதிர்காமத்துக்கே உரிய தனிச் சிறப்பும் உரிமையும் பெருமையும் உடைய விபூதியாகும். இதர சிவஸ்தலங்களில் பசுஞ் சாணத்திலிருந்து விபூதி தயாரித்து அளிக்கின்றனர். ஆனால் கதிர்காமத்தில் வழங்கும் திருநீறு இயற்கையாக விளைந்த திருநீறு. கதிர்காமக் கோயிலுக்கு அருகில் இருக்கும் விபூதி மலையிலிருந்தே எடுத்து வரும் புனிதமான திருநீறாகும்.

இந்தத் திருநீற்றைப் பெற்றுக் கொண்டு அங்கிருந்து செல்வதற்குத் திரும்புகிறோம். கப்புராளைமார் நம்மை ஒருமாதிரிப் பார்க்கிறார். நம்முடைய சட்டைப் பையைப் பார்க்கிறார். எல்லாக் கோயிலுக்கும் உள்ள பொதுவான சம்பிரதாயம் ஒன்று நமக்கு நினைவுக்கு வந்து விடுகிறது. சட்டைப் பையிலிருந்து பணத்தை எடுத்து அவர் கையில் வைக்கிறோம். அவர் முகம் மலருகிறது. நமது முகத்திலும் மலர்ச்சியை வரவழைத்துக் கொண்டு கோயிலுக்கு வெளியில் வந்து சேர்கிறோம்.

கதிர்காமக் கோயிலில் விசேஷமான திருவிழா வருடத்துக்கு நான்கு முறை நடக்குமாம். முதல் திருவிழா, சித்திரை வருடப் பிறப்பு தினத்தன்று நடைபெறும். இரண்டாவது திருவிழா கந்தசாமியார் வள்ளி நாச்சியாரை மணம்புரிவதற்காக வேண்டி, கன்னிக் கால்நடும் திருவிழா. இது ஆனிமாதம் நடைபெறும். மூன்றுவது ஆடிமாதத்திலும் நான்காவது கார்த்திகை மாதத்திலும் நடைபெறும்.

திருவிழாக் காலங்களில் கர்ப்பக்கிருகத்துக்குள்ளிருந்து ஏதோ ஒரு பொருளைத் துணியால் மூடி எடுத்து வருகின்றனர். அதற்குள் என்ன இருக்கிறது என்று யாருக்கும் தெரியாதாம். அதை யார் தூக்கினாலும் அவரவர்கள் சக்திக்குத் தூக்குவதற்கு வேண்டிய கனம் உடையதாக இருக்குமாம். அதைக் கொண்டு வந்து யானைமீது உள்ள பெட்டியில் வைத்துக் கட்டி விடுவார்கள். கப்புராளைமார்களின் தலைவருக்குச் சுவாமி கப்புராளை என்றுபெயர். சுவாமிகப்புராளை யானைமீதுள்ள பெட்டியைக் கவனமாகப் பிடித்துக் கொள்கிறார். இந்தப் பொருள்தான் கந்தன் சந்நிதியிலிருந்து வள்ளியம்மன் சந்நிதிக்கு உலா போகிறது. அடியார்கள் தங்கள் தலைமீதும், தோள்மீதும் கொண்டு செல்லும் விபூதிச் சட்டியில் ஏற்றிய கற்பூர வெளிச்சம் இரவைப் பகலாக்கிக் கொண்டிருக்கும். ஊதுவத்திகளின் நறுமணம் ஓங்கிப் பரவப் பல்லாயிரக்கணக்கான முருக பக்தர்கள், 'அரோகரா!' என்று கதறிக் கண்ணீர் மல்க, கதிர்காமக் கடவுள் உலா போகும் காட்சி கண்கொள்ளாக் காட்சியாக இருக்குமாம். இந்தக் காட்சியை ஒருதரம் பார்த்தவர்கள் அப்புறம் ஆயுள் காலம் வரையில் அதை மறக்கவே மாட்டார்களாம்.

விழாக் காலத்தில் பவனி வரும் யானைமீது ஏற்றிச் செல்லும் பெட்டியில் முத்துலிங்கசாமி அவர்கள் அமைத்த இயந்திரம் வைத்திருப்பதாகச் சொல்லிக் கொள்கிறார்கள்.

*** *** ***

கதிர்காமத்தில் முருகன் திருக் கோயிலைத் தவிரப் பார்க்க வேண்டியது அங்குள்ள திருமடங்கள். கதிர்காமத்துக்கு வரும் பக்தர்களை உபசரிப்பதற்காகவென்றே கட்டப்பட்ட மடங்கள். உண்மையான பக்திக்கு நினைவுச் சின்னங்களாக இந்த மடங்கள் விளங்குகின்றன. நகரத்தார் மடம், வைத்தியலிங்கர் மடம், சடையம்மா மடம், தம்பையா மீனும் பாள் மடம், தம்புச்சாமி மடம், பொன்னம்பல சாமி மடம், கங்காணியார் மடம், தியாகராச பண்டிதர் மடம், டாக்டர் அப்பாசாமி மடம், புலிலிங்கச் செட்டியார் மடம், மருத்துவர் மடம், பழனியாண்டவர் மடம் என்று எத்தனையோ மடங்கள் இருக்கின்றன.

இந்த மடங்களுக்கெல்லாம் சிறந்த மடமாக விளங்குவது ராமகிருஷ்ண மடம். கதிர்காமத்துக்குச் சென்று இந்த ராமகிருஷ்ண மடத்தைப் பார்க்காவிட்டால் நாம் கதிர்காமத்துக்கு வந்துதான் என்ன பிரயோசனம்? எனவே நாளைக்கு இந்த ராமகிருஷ்ண மடத்தையும் அவர்கள் ஆற்றிவரும் தொண்டையும் பார்ப்பதற்குப் போகலாம். (தொடரும்)

# வட்ட மேஜை

## ஜனநாயகம் வளர வழி!

சமீபத்திய கல்கி இதழ்களில் வெளிவந்துள்ள தங்கள் அரசியல் தலையங்கங்கள் எல்லாமே மிகச் சிறந்தவைகளாக,-நிலைமையைத் தெளிவுபடுத்தும் கண்ணாடிகளாக, எழுதப்பட்டிருக்கின்றன என்பதை உணர்ந்து பெருமை யடைகிறேன்.

தமிழ்நாட்டு அரசியலில் நல்ல ஞானம் உள்ள பெரும்பான்மையோர், பேராசிரியர் கல்கி அவர்களின் தெள்ளிய அரசியல் எழுத்துக்களினின்றும் ஊக்கமும் உணர்வும் எடுத்துக் கொண்டவர்கள்தாம். தரம் கெடாத அரசியல் யோசனைகளுக்கு இப்போதும் 'கல்கி' பத்திரிகை நிலைக்களனாக இருப்பதை, பத்திரிகைப் பண்பாட்டுக்கே சிறப்புச் செய்வதாகக் கொள்ளலாம்.

ஜனநாயக யுகத்தில் ஆளும் கட்சிக் கொள்கைகளுக்கு மாத்திரமின்றி, எதிர்க் கட்சிகளின் கொள்கைகளில் உள்ள உயர்தர அம்சங்களைப் போற்றிப் புகழும் மனப்பான்மையும் வளர வேண்டும்.

இன்றையதினம், தி. மு. கழகத்திலும் சரி, கம்யூனிஸ்ட் கட்சியிலும் சரி மிகப் படித்த அறிஞர்கள் பேச்சாளர்கள், இளைஞர்களாக, சிந்தனையின் ஊற்றுக்களாக உள்ளனர்.

''திராவிட'' முன்னேற்றத்தில் அக்கறை கொண்டு, விசால மனப்பான்மையுடன் கூடிய திட்டங்களுடன் மாற்றுக் கட்சி அறிஞர்கள் முன் வரும்போது, அவர்களை மதிப்பதுதான், ஜனநாயகம் நல்ல முறையில் வளர வழி.

சென்னை
21—3—57 பி. மங்களம்

## விறுவிறுப்பான தொடர்கதை

''மலைச்சாரல் மாதவி'' விறுவிறுப்பான முறையிலே அடுத்து நிகழ்வதை அறியத் துடிக்கச் செய்யும் முறையில் அமைந்துள்ளது. கதையின் போக்கு மிகவும் பிடித்திருக்கின்றது.

மற்றும் ''பிரார்த்தனை'' என்னும் கதை நேர்மையையும், மாண்பையும் வெளிக்காட்டும் முறையில் அமைந்திருக்கிறது. ''இதயக் குமுறல்'' ''தேனருவி'' ''ஜிகினா ரவுக்கை'' முதலானவைகள் இதழுக்கு மெருகூட்டி அழகு ஊட்டுகின்றன.

போதக்குடி
18—3—57 எம். எம். ஏ. சாதலி

## ''திராவிடத்தைக் காப்போம்''

எமது இல்லத்துக்கு வாங்கி வந்த மார்ச் 24௳ 'கல்கி' இதழை ஆவலோடு பிரித்ததும் ''திராவிடத்தைக் காப்போம்'' என்ற தலையங்கத்தைக் கண்டேன். உண்மையிலேயே திராவிடத்தைப் பெற்று அதைக் காத்து வருவது போன்ற உணர்ச்சியே பெற்றேன். பெருமிதம் அடைந்தேன். அதை முதலிலிருந்து முடிவு வரை ஒரு எழுத்து விடாமல் படித்ததில் திராவிட நாட்டின் முன்னேற்றத்தில் கவனம் செலுத்த வேண்டிய கடமையைக் குறித்துச் சரியான எடுத்துக்காட்டுகளால் விளக்கி யிருக்கிறீர்கள். ஒரு சில மக்களின் உள்ளங்களில் இருக்கும் தவறான எண்ணத்தைத் துடைத்து, '''ஜனகண' என்று நாம் பாடும் நாட்டு வணக்கப் பாட்டில் சொல்லப்பட்ட திராவிடத்தைக் கவனித்துக் காத்து வருவோமாக. திராவிட நாட்டின் முன்னேற்றத்துக்கு அனைவரும் பாடுபடுவோம்'' என்று தூய உள்ளத்தோடு எடுத்து இயம்பிய கல்கிக்குத் தமிழ்மக்கள் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

சென்னை-1 எம். எஸ். நடராஜன்
21—3—57 கண்ணன்

## அதிசய நவீனம்!

மாலவல்லியின் தியாகம் ஒரு மகத்தான நவீனம் என்பதற்கு அதன் ஆரம்பக் கட்டங்களே சான்று சொல்கின்றன. கதையில் வரும் ஒவ்வொரு பாத்திரத்தின் பின்னணியும் மர்மம் செறிந்து காணப்படுகின்றது.

பூதுகன் ஒரு புதுமையான - நூதனமான பாத்திரம். அவன் தோற்றம்-செயல் இரண்டையும் பார்க்கும்போது ''பொன்னியின் செல்வ''னில் வரும் வந்தியத்தேவனின் நினைவுதான் வருகிறது.

காவிரிப்பூம் பட்டினத்துக் கடற்கரையில் பூதுகனையும், வீரவிடங்கனையும் சந்திக்க வைத்திருக்கும் சம்பவக் கோவை ரஸனையாக அமைந்திருக்கின்றது.

மாலவல்லியின் தூய துறவுக்கோலம், அதற்குள் அமுங்கிக் கிடக்கும் ''இன்பத்தை அநுபவிக்க வேண்டும்'' என்ற காதல் துடிப்பு வாசக நேயர்களின் உள்ளங்களில் ரஸனைத் துடிப்பை ஏற்படுத்துகின்றன.

கலங்கமாலரையர்; பாவம்! அந்தமாவீரரை இவ்வளவு விரைவிலேயே அவமானப்படுத்தியிருக்க வேண்டாம். செம்மையாக உதை வாங்கிய அந்த மனிதர் எங்கு சென்றாரோ?

வைகைமாலை, பூதுகன் காதலி, மலை அசைந்தாலும் மனம் அசையாத பூதுகனைத் தன் தேன்மொழியால் ஆட்டி வைக்கிறாள். அபூர்வமான பாத்திரம்.

இலங்கை எஸ். சாரதாதேவி
22—3—57 பி. லீலா

## மகிழ்ச்சியூட்டும் கட்டுரை

நாவல், கதைகள் படிக்க விருப்பம் இருப்பதுபோல் கட்டுரைகளைப் படிக்க இருப்பதில்லை. ஆனால், திரு பகீரதனின் 'ஈழநாட்டுப் பிரயாணக் கட்டுரை'யைப் படிக்கும்போது அதிக மகிழ்ச்சி அடைகிறேன். ஆசிரியரின் சுகமான தமிழ் நடையும், காட்சிகளின் வர்ணிப்புகளும் என் மனத்தை ஈழநாட்டுக்கே அழைத்துச் சென்று விடுகின்றன. பதினைந்து நிமிஷ நேரம் காட்சிகளையும், வரலாறுகளையும் சொல்லிக் கொண்டு போவதிலே அவருக்கு இணை அவரேதான் என்பதைக் காட்டி விடுகிறார். இதுபோன்ற, இன்னும் பல பிரயாணக் கட்டுரைகளை எழுத வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

கடலூர் எஸ். கே. ஆர்
21—1—57



# சமய சஞ்சீவி

காந்தன்

"வாழ்க்கை" படத்தில் வைஜயந்தி மாலாவுடன் நடித்துப் புகழ் பெற்ற டி. ஆர். ராமச்சந்திரன் "ராஜி என் கண்மணி" என்ற படத்தில் உணர்ச்சி பொங்கும் பாத்திரத்தை ஏற்று அற்புதமாக நடித்தார். அந்தப் படமும் நன்றாகத்தான் இருந்தது. ஆனால் ஏனோ அது அதிக நாள் ஓடவில்லை. அதே மாதிரி அவர் நடித்த "பொன் வயல்" படமும் வெற்றிகரமாக ஓடவில்லை.

எவ்வளவு உயர்ந்த கடிகாரமானாலும் ஓடினால்தானே அதற்கு மதிப்பு? ஓடாத கடிகாரத்தை யார் மதிப்பார்கள்?

ஓடாத கடிகாரத்தில் நல்ல இயந்திர உறுப்புக்கள் இருக்கலாம். ஆனால் அவற்றை யாரும் தனியாக மதிக்க மாட்டார்கள்.

அதே மாதிரிதான் ஓடாத படத்தில் நடித்திருக்கும் நல்ல நடிகரின் நிலையும் மாறிவிடும்.

வெகு நாட்களுக்குப் பிறகு டி. ஆர். ராமச்சந்திரன் வெள்ளித் திரையில் தோன்றியிருக்கிறார். கதாநாயகனாகவே நடித்திருக்கிறார்.

ஒரு பெண்ணின் படத்தைக் கண்டு அவளிடம் மோகம் கொண்டு பைத்தியமாகும் நிலையில் இருந்த மனோகர் தன் நண்பன் சஞ்சீவியின் உதவியால், சித்திரக்கார ரவீந்திரனாக மாறி அவள் வீட்டுக்கே சென்று வருகிறான்.

மனோகராக நடிக்கும் டி. ஆர். ராமச்சந்திரன் சிற்சில இடங்களில் மிகவும் நன்றாக நடித்திருக்கிறார்.

வெறும் நிகழ்ச்சிக் கோவைகளைக்கொண்டே கதையைத் தயாரித்துவிட முயல்வது, வெறும் நூல் உருண்டைகளையே ஆடையாக நினைத்துக் கொண்டு அணிய முயலுவது போலத்தான்.

மனோகரின் பால்ய நண்பன் சஞ்சீவி. சஞ்சீவியின் வளர்ப்புத் தந்தையின் மகள் விஜயா. விஜயாவின் படத்தைக் கண்டுதான் மனோகர் காதல் கொண்டான். மனோகர் வீட்டு வேலைக்காரன் சாரங்கபாணி. விஜயாவின் வளர்ப்புத் தந்தை டி. என். சிவதாணு; பரமலோபியாக நடிக்கும் சிவதாணு பல ஹாஸ்யவெடிகளை வெடிக்க முயன்றிருக்கிறார். சில வெடிகள் மஞ்சள் பட்டாஸாகப் போய் விட்டாலும், சில வெடிகள் வெடிக்கவும் செய்கின்றன!

லோபி தயாளனுக்குக் குழந்தையில்லையாகையினால், ராமசாமியின் குழந்தை சஞ்சீவியைத் தன் மகனாக வளர்க்கிறான். இன்னொரு குழந்தை பிறந்ததும் அவனைப் பெற்றவனிடம் கொடுத்து விடுவதாக ஒப்பந்தம். ஆனால் அந்த ஒப்பந்தப்படி தயாளன் நடக்கவில்லை. பெற்றவன் அடிக்கடி வந்து மகனைத் தன்னுடன் அனுப்பும்படி கெஞ்சுகிறான். கடைசியில் மகன் உண்மைத் தந்தையைத் தானாகவே அறிந்து கொள்ளுகிறான். தந்தையும் மகனும் ஒருவரை யொருவர் அறிந்து கொண்டு கண்ணீர் விட்டுக் கதறுகின்றனர். படம் பார்ப்பவர்களை அந்தக் காட்சி சிறிதும் உருக்கவில்லை!

சஞ்சீவியாக நடிப்பவர் சினிமாவுக்குப் புது முகம் என்று நினைக்கிறேன்; பல இடங்களில் மிகவும் இயல்பாக நடித்திருக்கிறார்.

* * *

இந்தத் திரைக் கதைக்கு விறுவிறுப்பூட்ட எம். என். ராஜம் நளினியாகத் தோன்றுகிறார். நளினியின் காதலன் சங்கராக எம். என். நம்பியார் தோன்றுகிறார்.

நம்பியாரும் ராஜமும் பளிச்சென்று தோன்றிக் கச்சிதமாக நடிக்கவில்லையென்றால் இந்தப் படம் முழுவதுமே மங்கலாக இருந்துவிடுமோ என ஐயுற வேண்டி யிருக்கிறது.

அவர்களுக்கு அடுத்தபடியாக, கே. சாரங்கபாணியைக் குறிப்பிட வேண்டும்.

மற்ற வெள்ளித்திரை நடிகர்களுக்கும் சாரங்கபாணிக்கும் ஒரு முக்கிய வேற்றுமை உண்டு. உதாரணங் கூறி விளக்க வேண்டுமானால், பொதுவாகச் சினிமா நடிகர்களுக்குப் பாலே உதாரணமாகச் சொன்னால், சாரங்கபாணிக்கு மோரைத்தான் உதாரணமாகச் சொல்ல வேண்டும். பால் பலவிதமாக மாறிவிடும். ஆனால் மோர் மாறாது. மோரில் நீர் கலந்து அதன் தரத்தைக் குறைக்கலாம்; ஆனால் அடியோடு கெடுக்க முடியாது. அதுபோல, சாரங்கபாணிக்குச் சரியான சந்தர்ப்பம் கொடாமல், அவர் நடிப்பின் தரத்தைக் குறைக்கலாம். ஆனால் அடியோடு அவரைக் கெடுத்துவிட முடியாது. எந்த ஒரு பாகமானாலும், அதை ஏற்று நடிப்பவர் சாரங்கபாணி என்றால், அவர் அதில் எப்படியும் தமக்கே உரிய 'பாணி'யைக் காட்டி விடுவார். இந்தப் படத்தில் சாரங்கபாணி அவர் இயல்புக்கு ஏற்ப நன்றாய் நடித்திருக்கிறார்.

படத்தின் கவர்ச்சிக்கு, குசலகுமாரி, கேரள சகோதரிகள் நடனம் சேர்க்கப்பட்டிருக்கிறது. குசலகுமாரியின் நடனமும் அபிநயமும் நன்றாயிருக்கின்றன.

படப்பிடிப்பு, பல இடங்களில் பரிகாசத்துக்கு இடமா யிருக்கிறது.

தெருவில் பத்திரிகை விற்கும் பையன் பாடும் பாட்டு நன்றாயிருக்கிறது! விருப்பு வெறுப்பில்லாமல் எல்லாப் பத்திரிகைகளையும் குறிப்பிடும் அந்தப் பாட்டுக்கு அழகாகக் குரல் கொடுத்திருப்பவர் பிரபல ஹாஸ்ய நடிகர் சந்திர பாபு. ஆனால் அந்தக் காட்சி நல்ல முறையில் படமாக்கப் படவில்லை என்பது மிகவும் வருந்தத்தக்க உண்மை.

நம்பியாரின் நண்பனாக நடிப்பவர் புது முகம். நன்றாய் நடித்திருக்கிறார். ஒரு வில்லனுக்குத் தேவையான பார்வை, பேச்சு, முதலியன வெல்லாம் அவரிடம் பொருத்தமாக அமைந்து ஆரம்பத்திலேயே நன்கு ஒளிவிடுகின்றன. அவர் நடிப்பில் நல்ல எதிர்காலத்தைக் காண முடிகிறது.

விஜயாவாக நடிக்கும் வித்தியாவதி இன்னும் சற்று முயன்று நடித்தால் ஓரளவு வெற்றியும் பெறலாம்.

திரைக் கதை எழுதுபவர் மனத்தில் பதிய வைத்துக் கொள்ளவேண்டிய விஷயம் ஒன்று உண்டு. கதாபாத்திரங்களுக்கு நல்ல உருவம் கொடுக்க வேண்டும்; ஒவ்வொரு பாத்திரமும் முழுவடிவம் பெற்றுக் கதையின் விறுவிறுப்பான ஓட்டத்துக்கு உதவியா யிருக்கும்படி அமைய முயல வேண்டும். கதாநாயகனும் கதாநாயகியும், மற்றப் பாத்திரங்களின் அநாவசியமான நடிப்பினால் மங்கி விடாமல் இருக்கும்படி பார்த்துக் கொள்ள வேண்டும்; திரைக் கதையின் அடிப்படைக் கருத்து மறைந்து போய், கதை என்ன வென்றே தெரியாமல் போய் விடக் கூடாது. மேற்படி குறைகள் தவிர்க்கப்பட்டாலன்றி ஒரு படத்தில் வெற்றியை எதிர்பார்க்க முடியாது.

இந்தப் படம் ஏற்கெனவே மேடைகளில் நடிக்கப்பட்டு வந்த ''டயல் மிஸ்டர் சஞ்சீவி'' என்ற நாடகத்தை ஒட்டித் தயாரிக்கப்பட்டிருக்கிறது. கதை பல இடங்களில் தடம் புரண்டு போய் விடுவதால் சுவை குன்றி விடுகிறது. படம் பார்ப்பவர்கள் உள்ளம் ஒன்றிப் படத்தைப் பார்க்க முடியவில்லை. துண்டு துண்டாகச் சம்பவங்கள் ஒன்றோடு ஒன்று சேராமல் நின்று திரைக் கதையைத் திணற அடிக்கின்றன.

கதையின் கருத்தை மனத்தில் ஆழப் பதிய வைத்துக் கொண்டு, இந்த நாளில் மக்கள் விரும்பும் சமயசஞ்சீவிகளான படங்கள் தயாரிக்கப்படும் நாள் எப்போது வருமோ?






சூரியன் மறைந்து இருளும் பகலும் கலக்கும் இன்பமான அந்தி நேரம். நகரின் மத்தியிலே, நான்கு தெருக்கள் கூடும் இடத்திலே, அந்த அழகிய பூங்கா அமைந்திருந்தது. அந்தப் பூங்காவில் விதவிதமான மரங்கள் வானையளாவி நின்றன. புஷ்பக் கொத்துக்களைத் தாங்கி நின்ற பூஞ்செடிகளின் காட்சி பார்ப்பதற்கு மிகவும் ரம்மியமாக இருந்தது. பூங்காவின் மத்தியிலே ஒரு ரேடியோ. காற்றிலே மிதந்து வரும் இன்னிசையைக் கேட்க, அங்கு நிறைய சிமெண்ட் பெஞ்சுகளும் புல் மேடைகளும் போடப்பட்டிருந்தன.

இப்படி அந்தப் பூங்காவுக்கு எல்லோருமே ஜீவனை ஊட்டிக் கொண்டிருந்த வேளையில் அவன் வந்தான். நேரே பாதை வழியே நடந்து தென்கோடியிலிருந்த ஒரு சிமெண்ட் பெஞ்சியில் உட்கார்ந்து, தான் கொண்டு வந்த புத்தகத்தை அவசரமாகப் பிரித்து ஆவலுடன் படிக்க ஆரம்பித்தான்.

அவனுக்கு வயது இருபத்தைந்து இருக்கும். வாட்ட சாட்டமாக, ஆகிருதியுடன் இருந்தான். அவனது அரும்பு மீசை, நெளி நெளியான கிராப்பு, எடுப்பான மூக்கு, யாவரையும் வசீகரிக்கும் தன்மையைப் பெற்றிருந்தன. நாகரிகத்துக்கேற்ப 'டுவீட் பாண்ட்' ஸில்க் சட்டையும் அணிந்து கொண்டிருந்தான். கழுத்திலே ஒரு மைனர் சங்கிலி. புத்தகத்தைப் பிரித்து மடிமீது வைத்துக் கொண்டிருந்தானே தவிர, கவனம் அதில் செல்ல வில்லை. ரேடியோவிலிருந்து வரும் இசைக்குத் தகுந்தவாறு தாளம் போட்டுக் கொண்டிருந்தான். அடிக்கடி ஸில்க் கைக்குட்டையை எடுத்து, பவுடர் பூசிய தன் முகத்தில் இலேசாகப் படர்ந்திருக்கும் வியர்வையைத் துடைத்துக் கொண்டான். எட்டாவது முறையாகத் துடைத்துக் கொண்டு கைக்குட்டையைத் தன் பக்கத்தில் வைத்துக் கொண்டான். திடீரென்று வீசிய காற்றினால் சருகுபோல இருந்த அந்த ஸில்க் கைக்குட்டை பறந்து கீழே புல்தரையில் விழுந்து புரண்டு கொண்டே போயிற்று. அதைக் கவனித்து எடுப்பதற்குள் அது பத்தடி போய் விட்டது. நல்லவேளை. அந்தப் பூவரசமரத்தடியில் உட்கார்ந்திருந்த ஒருவர் அதைக் கையிலெடுத்து அவனிடம் நீட்டினார். அவன் நன்றியுடன் அதை வாங்கி, 'ரொம்ப நன்றி' என்றான். ஒரு முறை அந்த இளைஞனை அவர் கூர்ந்து கவனித்து விட்டு, 'இப்படி வாருங்களேன்' என்று புல்தரையைக் காண்பித்தார்.

அவனுடைய கண்கள் அவரை எடைபோட்டன. அவருக்குச் சுமார் முப்பத்தைந்து வயதுக்கு மேலிருக்கும். தலையில் ஓரிரண்டு இடத்தில் நரை ஓடி இருந்தது. இடுப்பிலே நாலு முழக் கதர் வேஷ்டி. துல்லியமான ஒரு கதர் ஜிப்பா. தோளிலே நன்றாக மடித்துப் போடப்பட்ட ஒரு கதர்த் துண்டு.

இத்தகைய சாதாரண அலங்காரத்துடன் இருந்த அவரைக் கண்டு, 'அவர் தன் அந்தஸ்துக்கு ஏற்றவரா? அவருடன் சரிசமமாக உட்கார்ந்து பேசலாமா?' என்று ஒரு கணம் தயங்கி நின்றான். அவன் தயக்கத்தைக் கண்டு அவர், 'நீங்கள் விலையுயர்ந்த ஸூட் போட்டிருக்கிறீர்கள். இந்தப் புழுதியில் அழுக்காகி விடும். இதோ என் துண்டைப் போடுகிறேன் உட்காருங்கள்' என்று கூறி அவன் பதிலை எதிர்பார்க்காமல் துண்டை விரித்து, 'உட்காருங்கள் சார்!' என்றார். வேறு வழி இல்லாமல் அவர் பக்கத்தில் வந்து அவன் உட்கார்ந்து கொண்டான். சிறிது நேரம் மௌனம் நிலவியது. ''ஸார், ஏதாவது பேசுங்களேன்....'' என்று மெதுவாக ஆரம்பித்தான் அந்த இளைஞன்.

''எதைப்பற்றிப் பேசவேண்டும்....?''

''இந்த நந்தவனத்துக்கு வரும் ஜனங்களைப் பற்றி ஏதாவது சொல்லுங்கள்...ம்...அதோ அவர்கள் சந்தோஷமாகச் சிரித்து மகிழ்கிறார்களே, உண்மையில் அவர்கள் வாழ்க்கை சந்தோஷமானதா? அல்லது அவர்கள் தங்களது துன்பத்தை மறப்பதற்காக அப்படிச் சிரித்து மகிழ்கிறார்களா?''

இந்தமாதிரியான ஒரு சந்தர்ப்பத்தைத் தான் எதிர்பார்த்திருந்தவர் போலத் தொண்டையைக் கனைத்துக் கொண்டு பேச ஆரம்பித்தார். ''ஜனத்திரளைப் பார்த்து, அவர்களது மனோபாவங்களை அறிந்துகொள்வது ஒரு கலை. புத்தகத்தில் பல ஆண்டுகள் படித்து அறிந்து கொள்ளும் விஷயத்தை, சில மணிக்குள் அறிந்து கொள்ளலாம்'' என்று சொல்லிக்

கொண்டு போனவரை இடைமறித்து, 'எனக்கு அப்படி ஒன்றும் தெரிந்து கொள்ள வேண்டிய அவசியமில்லே. நான் ஏகாந்தமாகக் கிராமத்தில் வளர்ந்தவன் ஸார்! நேற்றுத் தான் பட்டணம் வந்தேன்....'' என்று சொன்னன் அந்த நாகரிக இளைஞன்.

''ஓகோ, அப்படியா?''

''பார்வதிபுரம் என்ற கிராமத்தைப் பற்றிக் கேள்விப் பட்டிருப்பீர்களே....''

''ஆமாம்.''

''அந்த மிராசுதாரின் ஒரே பிள்ளை நான்.''

''நான் அப்பொழுதே நினைத்தேன்!''

அந்த இளைஞன் ஆவல் பொங்க, ''என்ன நினைத்தீர்கள்? நான் யாரென்று முன்னமேயே உங்களுக்குத் தெரியுமா?'' என்று மிகுந்த ஆவலுடன் கேட்டான்.

''உங்கள் கைக் குட்டையிலிருந்து கமழும் நறுமணத்தையும், உங்களையும் பார்த்தபிறகு நீங்கள் ஒரு மிராசுதாராகத்தான் இருக்க வேண்டும் என்று ஊகித்தேன்!''

அந்த இளைஞன் மெதுவாகத் தனக்குள் சிரித்துக் கொண்டான். ''ஸார்! நீங்கள் அப்படி நினைக்கக்கூடாது. பணக்காரர்கள் தாங்கள் சந்தோஷமாக வாழ்வதாகப் பிறருக்குக் காண்பித்துக்கொள்ளும் ஒரு தந்திரம்.''

''அப்படியா?...'' அவர் தம்முடைய களங்கமற்ற கண்களை அகல விரித்துத் தம் ஆச்சர்யத்தை வெளிப்படுத்தினர்.

''ஏன், என்னையே எடுத்துக் கொள்ளுங்களேன். இப்பொழுது எதற்காகப் பட்டணம் வந்திருக்கிறேன் தெரியுமா?''

''ஏதாவது தொழில்,வியாபார விஷயமாக...''

''அதுதான் இல்லே. ஹைகோர்ட்டில் ஒரு வழக்கு. அதற்கு ஒரு பாரிஸ்டரை ஏற்பாடு செய்திருக்கிறேன். அவருக்குப் பீஸ் மட்டுமே இருபதினயிரம்!''

''அப்பா, அந்த வழக்கில் லட்சக்கணக்கில் பணம் புரளும் என்று சொல்லுங்கள்!''

''ஆமாம் ஸார், ....'' என்று கூறிப் பெருமூச்சு விட்டுக் கொண்டான். ''பணமிருந்து என்ன லாபம்? எனக்குச் சாதாரணமாக வாழ வேண்டும் என்ற ஆசை. துணி மணிகளில் கூட விருப்பமில்லே. ஆனல் அந்தப் பாழும் அந்தஸ்து, கௌரவம் என்றிருக்கிறதே. அதற்காக வேஷம்போட வேண்டியிருக்கிறது. அது மட்டுமா? சந்தோஷமாக இருப்பது போல எப்பொழுதும் சிரித்த முகத்துடன் இருக்க வேண்டும்.''

''நான் பணக்காரர்களின் டாம்பீக வாழ்க்கையைப் பற்றி, ஆவலுடன் நிறையக் கதைகளில் படித்திருக்கிறேன். சிலருடைய வாழ்க்கையில் பார்த்தும் இருக்கிறேன். அவர்களைப் போல வாழ வேண்டும் என்ற எண்ணமும் உண்டு. ஆனல் அந்த இன்பம்..''

''கானல் நீர் என்பதை இப்பொழுது புரிந்து கொண்டீர்களல்லவா? இக்கரைக்கு அக்கரை பச்சை என்பார்களே அதுதான். வாழ்க்கையிலே இன்பத்தை அனுபவிக்கப் பணமில்லேயே என ஏங்குகிறன் ஏழை. பணமிருந்தும், வாழ்க்கையிலே சந்தோஷமில்லேயே என்று துடிக்கிறன் பணக்காரன்.''

''இந்தச் சிறுவயதில் உங்களுக்கு உலக அனுபவம் நிறைய இருக்கிறதே! உங்களுக்கு இன்னும் மணமாகவில்லேயே!....''

''இல்லே. அதிலும் ஒரு பிரச்னே. நான் என்ன சாதாரணமானவனு? ஒரு பெண்ணைப் பார்த்தோம், மனத் திருப்தியுடன் அவளை மணந்து கொண்டோம் என்பதற்கு!''

''ஏன் உங்கள் தகப்பனர் உங்கள் மன விருப்பத்துக்குத் தடையாக இருக்கிறரா...?''

''அப்பாவுக்கு ஒரு தங்கை. அவளுக்கு லக்ஷ்மி என்கிற ஒரு பெண். என் அத்தை புருஷன் தன் சொத்துக்கள் எல்லாவற்றையும் அழித்து விட்டுத்தான் இறந்து போனர். லக்ஷ்மி என்றல் சாட்சாத் லக்ஷ்மி போலத் தான் இருப்பாள். பணமில்லாவிட்டாலும் நான் அவளேத்தான் மணந்து கொள்ள வேண்டும் என்று அப்பா விரும்புகிறர். ஆனல் என் அம்மாவுக்கு இது பிடிக்கவில்லே. அம்மாவுக்கு அண்ணு ஒருவர் கல்கத்தாவில் பெரிய உத்தியோகத்தில் இருக்கிறர். அவ

## பல்லாண்டு வாழ்க !



மார்ச்சு மாதம் 10 தேதி டாக்டர் ரங்கஸ்வாமி அவர்களின் சஷ்டியப்தபூர்த்தி காசி க்ஷேத்திரத்தில் புனித கங்கை நதிக் கரையிலே வெகு சிறப்பாக நடை பெற்றது. டாக்டர் ரங்கஸ்வாமி அவர்கள் சென்ற முப்பத்து நான்கு ஆண்டுகளாகக் காசி புனித நகரத்தில் வசித்து வைத்திய சேவை செய்து வருகிறர்கள். மிகுந்த தெய்வ பக்தியும் சீலமும் படைத்த டாக்டர் ரங்கஸ்வாமி அவர்கள், இருபத்திரண்டு ஆண்டுகளுக்கு முன் தந்போதையக் காஞ்சி காமகோடி பீடாதிபதி காசிக்கு விஜயம் செய்து தங்கியிருந்த போது, அவர்களிடம் சிறிது காலம் சங்கர பாஷ்யம் பயிலும் அரும் பேறும் பெற்றர்கள். அத்தகைய பாக்கியம் பெற்ற உத்தம தம்பதிகள் காசி விசுவநாதன் அருளால் பல்லாண்டு வாழ்வார்களாக!

**அருள் வாக்கு**

**வாக்கினுற் புண்ணியம் செய்ய வேண்டும். நித்தியம் ஆயிரம் பகவன் நாமாவையாவது சொல்ல வேண்டும். அது நமக்கு உபயோகப் படும். அன்றியும் உபத்திரவம் வராமல் காக்கும். வீணுக வம்பு பேசுவதனுல் பாபமும் அதனுல் உபத்திரவமும் உண்டாகிறது. பகவன் நாமாவைச் சொல்வதால் எந்த உபத்திரவமும் இல்லை. மேலே புண்ணியமும் உண்டாகிறது. பகவானுக்குப் பல நாமாக்கள் இருக்கின்றன. ''பேராயிரம் பரவி வானோரேத்தும் பெம்மானே'' என்று பெரியவர்கள் சொல்லியிருக்கிறுர்கள். அவனுடைய ஒரு நாமாவை ஆயிரம் தடவைகள் சொல்ல வேண்டும்.**

—ஸ்ரீ சங்கராச்சாரியார்

ருக்கு ஹேமா என்கிற பெண் இருக்கிறுள். அவள்தான் மருமகளாக வரவேண்டுமாம்.''

''சரி; உங்கள் அம்மா விருப்பப்படியே ஹேமாவை மணம் செய்து.....''

''ஹேமா! நாகரிகம் என்ற பெயரால் தன்னை அலங்கோல மாக்கிக் கொள்ளும் நாரீமணிகளில் ஒருத்தி அவள். விடுமுறை நாட்களில் எங்கள் வீட்டுக்கு வருவது வழக்கம். அப்பப்பா! அவள் வந்து தங்கும் இரண்டு மாதமும், 'டார்லிங், டியர்!' என்று கூப்பிட்டுக்கொண்டு சதா என்னைத் தொந்தரவு செய்வாள்...ஸார்! உண்மையைச் சொல்கிறேன். எனக்குக் கலியாணத்திலேயே வெறுப்பு ஏற்பட்டுவிட்டது. என்னைப் பற்றியே ஓயாமல் பேசிக் கொண்டிருக்கிறேனே, உங்களைப்பற்றி ஒன்றுமே சொல்லவில்லையே...ம்...நீங்கள் என்ன வேலையில் இருக்கிறீர்கள்?''

''சொல்லிக்கொள்ளும்படியான அவ்வளவு பிரமாதமான வேலையில்லை.''

''பரவாயில்லை. என்ன என்றுதான் சொல்லுங்களேன். கஷ்டப்பட்டு வேலை செய்து சம்பாதிக்கும் எந்தத் தொழிலும் கேவலமில்லை. மிக உயர்வானது.''

''நான் ஜவுளிக்கடையில் குமாஸ்தாவாக இருக்கிறேன்'' என்றுர் கதர்ச் சட்டைக் காரர், மிகவும் தாழ்மையாக.

''இதைச் சொல்ல நீங்கள் வெட்கப்பட வேண்டியதில்லை. உங்கள் வாழ்க்கை எப்படி?''

''அதையேன் கேட்கிறீங்க! உழைத்து உழைத்து இயந்திரம்போல் ஆகி விட்டேன். தினமும் இந்தக் கைகளினுலே கஜம் கணக்கிலே விதவிதமான துணிகளைக் கிழித்து எல்லோருக்கும் கொடுக்கிறேன். ஆனுல் என் ஒரே குழந்தை....தீபாவளிக்குப் பட்டுச் சட்டை வேண்டுமென்று அழுகிறுள். அவளுக்கு ஒரு கெஜம் துணி வாங்கப் பணமில்லை. வாங்குகிற சம்பளம் வயிற்றை நிரப்புவதற்கே போதவில்லை. நான் எங்கிருந்து குழந்தைக்குப் பட்டுத் துணி வாங்குவேன்!''

''சிரமம்தான் ஸார்! நீங்கள் இன்றைக்கு வேலைக்குப் போகவில்லையா?''

''தீபாவளியை முன்னிட்டு எங்கள் கடை இரவு பதினெரு மணி வரையில் திறந்திருக்கும். அதற்காக மாலை நாலு மணியிலிருந்து ஏழு மணி வரை எனக்கு ஓய்வு'' என்றுர் அந்தக் கதர்ச் சட்டைக்காரர்.

அந்த இளைஞன் தன் கையிலிருந்த கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டான்.

''மிஸ்டர்! உங்களை மறுபடியும் எப்போது எங்கே சந்திப்பது? வழக்கு முடிந்ததும் ஊருக்குப் போய்விடுவேன். அடடே! மணி ஆகிவிட்டது! நான் புறப்பட வேண்டும். டிரைவர் காத்துக் கொண்டிருப்பான்.''

''உங்கள் கார் எங்கே?''

''அதோ அந்த மரத்துக்குப் பக்கத்தில்!''

''அந்த நீலக் காரையா சொல்கிறீர்?''

''இல்லை. அந்தப் பெரிய கறுப்புக் கார். ஆறு மாதங்களுக்கு முன்புதான் பதினேழாயிரத்துச் சொச்சத்துக்கு வாங்கினேன். அதில் தான் நான் எங்கும் போவேன். ஊரிலிருந்து காரில்தான் வந்தேன். டிரைவரிடம் ஷாப்பிங் போவதாகச் சொல்லி விட்டு, இங்கு வந்து உட்கார்ந்து உங்களிடம் பேசிக் கொண்டிருக்கிறேன். அவனுக்கு என்ன தெரியும் என் மனநிலை? 'பொழுதைப் போக்க, சினிமாவுக்கு போகக் கூடாதா? பூங்காவுக்குத் தானு போக வேண்டும்' என்று இழிவாக நினைப்பான். எவ்வளவு பணமிருந்தும் அல்ப சந்தோஷத்துக்காக டிரைவரை ஏமாற்ற வேண்டி யிருக்கிறது! நீங்கள் வேலை செய்யும் கடை எங்கேயிருக்கிறது? அதை என்னிடம் சொல்லவே இல்லையே!''

அவர் பூங்காவைச் சுற்றிலும் ஒரு தடவை கண்ணேட்டம் விட்டார். பூங்காவின் வலது பக்கத்தில் நூறு கஜம் தள்ளியிருந்த ஒரு பெரிய கட்டடத்தில் 'கோபால்ராம்' ஜவுளி வியாபாரம் என்று நியான் விளக்குகள் எரிந்து கொண்டிருந்தது. அதைச் சுட்டிக் காட்டி 'அதோ அந்தக் கடைதான்' என்று கூறிஞர். அதைக் கேட்டதும் அந்த இளைஞரின்முகம் மாறியது. பிறகு ஒருவாறு சமாளித்துக் கொண்டு ''எனக்கு நேரமாகிறது. நான் வருகிறேன்! நமஸ்காரம்!'' என்று கூறிக்கொண்டே நகர்ந்தான்.

அவர் அந்த இளைஞன் போகும் திக்கையே சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு, அவனைப் பின் தொடர்ந்தார். அந்த வாலிபன் தெருவை அடைந்ததும் அந்தக் கறுப்பு நிறக் காரைப் பார்த்தான். ஆனுல் அதில் ஏறிக் கொள்ளவில்லை. தெருவின் எதிர்ப் பக்கத்துக்குச் சென்று வலது பக்கமாக நடக்க ஆரம்பித்தான். அவர் அவனையே ஆச்சரியத்துடன் பின் தொடர்ந்தார். அவன் சுற்று முற்றும் திரும்பிப் பார்த்து விட்டு, சட்டென்று அக் கோபால்ராம் ஜவுளிக்கடையில் நுழைந்து காஷியர் மேஜை முன் நின்று, ''முதலாளி! இராச் சாப்பாட்டுக்குப் பணமில்லே, அட்வான்ஸ் ஏதாகிலும்....'' என்று தலையைச் சொறிந்து கொண்டு நின்றுன்.

இதைக் கவனித்த அவர் தமக்குள் சிரித்துக் கொண்டார். வந்த வழியே நடக்க ஆரம்பித்தார். அந்த வாலிபன் சுட்டிக் காட்டிய கறுப்புக் கார் அருகில் வந்ததும் அதன் டிரைவர் பயபக்தியுடன் எழுந்து நின்று கதவைத் திறந்தான். கதர்ச்சட்டைக்காரர் அதில் ஏறிக்கொண்டே, 'நேரே வீட்டுக்குப் போ' என்று அவனுக்கு உத்தரவு கொடுத்தார்.



# மாலவல்லியின் தியாகம்





அத்தியாயம் 14

## புதிய விருந்தினன்

சோழ வள நாட்டில் கரிகாலனால் சமைக்கப்பட்ட பூம்புகார் நகருக்குச் சிறிது புகழ் குறைந்து விட்டது என்ற உண்மை தொண்டை நாட்டிலுள்ள காஞ்சி நகரைப் பார்க்கக் கொடுத்து வைத்தவர்களுக்குத்தான் தெரியும். ஒரு காலத்தில் பூம்புகாருக்கு எத்தகைய சிறப்பும் பெயரும் இருந்ததோ, அத்தகைய பெருமையும் சிறப்பும் காஞ்சிமா நகருக்கு இருந்தது.

அவனி நாராயணன் என்ற இயற் பெயரையும், நந்திவர்மன் என்ற குலப் பெயரையும் பெற்றுக் காவிரி நாடன் என்ற சிறப்புப் பெயரையும் தாங்கி நின்ற பல்லவப் பேரரசர் ஆளுகையில் அப்பொழுது தலைநகராக விளங்கிய காரணத்தால் மிகுந்த கர்வம் அடைந்ததுபோல் திகழ்ந்து கொண்டிருந்தது காஞ்சிமா நகரம். இதற்கு அடையாளமாக நந்தியைச் சின்னமாகப் பொறிக்கப்பட்ட வெண் கொடிகள் வெற்றியைப் பாடி வானளாவப் பறந்து கொண்டிருந்தன. அவனி நாராயணன் சைவ சமயத்தவராக இருப்பினும் எல்லாச் சமயங்களையும் ஆதரிக்கும் மனப்பண்பு உள்ளவராகத் திகழ்ந்ததால் காஞ்சிமா நகரில் வைஷ்ணவர்கள், சைவர்கள், ஜைன, புத்தசமயத்தைச் சேர்ந்தவர்கள் யாவருமே தங்கள் மத சம்பிரதாயங்களைப் பரப்பி மிக சுதந்திரத்துடன் வாழ்ந்து வந்தனர்.

அவனி நாராயணன் சிவபெருமானிடம் பக்தி கொண்டவராய் எப்பொழுதும் நெற்றியில் திருநீறு அணிந்து பெருமானைப் புகழ்ந்து பாடுவதிலும் பெருமானைப் பாடுவதைக் கேட்டுக் களிப்பதிலுமே சிந்தையைச் செலுத்துபவராய் இருந்தார். ஆனாலும் நகரில் வணிகப் பெரு மக்களின் பேராதரவு பெற்று வளர்ந்து நின்ற சமண சமயத்துக்கு எவ்விதத் தீங்கும் நினையாது பெருங் குணம் படைத்த புரவலராக வாழ்ந்து வந்தார். நாளுக்கு நாள் முன்னேற்றம் அடைந்து வந்த ஜைன சமயத்தின் காரணமாகக் காஞ்சி நகரின் ஒரு











பகுதியே ஜினகஞ்சி என்ற பெயர் பெற்றுத் திகழ்ந்தது.

அச் சமயம் புத்த சமயம் மிகச் சிறப்புள்ள நிலையிலே இல்லாவிடினும் காஞ்சிமா நகரில் சில குறிப்பிட்ட இடங்களில் பௌத்த விஹாரங்களும் பௌத்தமதப் பள்ளிகளும் மிக உன்னத நிலையில்தான் இருந்தன. அழகான வீதிகளில் துவராடை பூண்டு பிக்ஷா பாத்திரம் ஏந்திச் செல்லும் பௌத்த பிக்ஷுக்களையும், மயில் பீலி தாங்கித் திரியும் சமணத் துறவிகளையும், விபூதி ருத்திராட்சம் துலங்கக் காட்சி யளிக்கும் சிவனடியார்களையும், வைணவ பாகவதோத்தமர்களையும் நேச மனப்பான்மையுடன் கலந்திருக்கக் காண முடிந்தது. சைவமும் வைணவமும் மிகவும் முன்னேறி வந்த அக்காலத்திலும் புத்த மதத்தினரும், சைவ மதத்தினரும் தங்கள் மதப் பிரசாரத்தில் தீவிர நிலையைக் காட்டி வந்தனர் என்றால் அதை அனுமதித்து வந்த சைவ வைணவர்களின் பெருந் தன்மையையும், மன்னரின் சம நோக்கத்தையும் நாம் புகழாமலிருக்க முடியாது.

பௌத்த மதத்தினரைவிட ஜைன மதத்தின் பிரசார வேகமும் பலமும் தலை தூக்கி நின்றன. வணிகப் பெருமக்களின் பேராதரவும் மக்களின் மதிப்பும் பெற்று இருந்த அச் சமயத்தினர் மற்ற சமயத்தினரின் செல்வாக்கில் மிகுந்தே இருந்தனர். இந்தத் தருணத்தில் சமண சமயத்திலுள்ள சிலரிடையே வேற்றுமை மிகுந்திருந்தது. சிலர் மிகவும் செருக்குடையவர்களாக இருந்தனர். சிலர் அரசியலில் தங்கள் ஆதிக்கத்தைச் செலுத்தத் தொடங்கியிருந்தனர். வணிக மக்களிடம் பெரு மதிப்புப் பெற்றிருந்த சமணத் துறவிகள் தங்களிடம் அபிமானம் வைத்த குடும்பத்தினரிடமே தங்களுடைய அதிகாரங்களைப் பிரயோகிக்கத் தொடங்கினர். அதோடு நந்திவர்மனின் தம்பி முறையாக வேண்டிய சிம்ம வர்மன்



ஒரு தீவிர சமணவாதியாக இருந்தான். சிம்ம வர்மன் பல்லவ அரசன் நந்திவர்மனுக்குச் சொந்தத் தம்பியாய் இல்லாவிட்டாலும் அவனுக்கு அரசாங்கத்தில் பெரு மதிப்பும் கௌரவமும் இருந்தன. இதற்குக் காரணம் பல்லவ சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தியாக, சிம்ம வர்மனின் பாட்டனாகிய சித்திரமாயன் தான் அரசனாக வேண்டியவன். ஆனால் சித்திரமாயன் பட்டத்துக்கு வரும் சந்தர்ப்பத்தில் சாம்ராஜ்யத்தையே சிதைக்கக் கூடிய போர்க் குழப்பங்கள் ஏற்பட்டிருந்தபடியால் அவனுக்குச் சித்தப்பனான இரணிய வர்மனின் மேற்பார்வையில் அவன் மகன் இரண்டாம் நந்திவர்மன் பட்டம் சூட்டிக் கொண்டான். அதிலிருந்து ராஜ்ய பாரம்பர்யம் கைமாறி விட்டது. அவ்வழியில் வந்த வீரநாராயணன் என்னும் மூன்றும் நந்திவர்மன் அரச சிம்மாசனம் ஏறினான். முதற்கிளையில் உதித்த சிம்மவர்மனுக்குச் சிம்மாசனம் ஏறும் பாக்கியம் கிடைக்காவிட்டாலும், அவனுக்கு மிகுந்த மதிப்பும் மரியாதையும் செல்வாக்கும் அளித்திருந்தான் நந்தி வர்மன். என்னதான் தனக்கு மரியாதையும் செல்வாக்கும் இருந்தாலும் உலகையாளும் அரசன் என்ற புகழ் துர்ப்பாக்கியவசமாக வேறு கைக்கு மாறிவிட்டதே என்ற பொருமையில் சிம்மவர்மன் நந்திவர்மனின் அரசைக் கவிழ்க்கும் சில சூழ்ச்சிகளில் ஈடுபடத் தொடங்கினான். பாவம், அவனுடைய சூழ்ச்சிகளுக்குச் சமண சமயத்தைச் சேர்ந்த சில செல்வம் மிகுந்த வணிகர்களும் புகழ்பெற்ற சமயப் பிரசாரகர்கள் சிலரும் உதவி செய்ததுதான் மிகவும் பரிதாபகரமானது.

மாலை வேளை. தேவர்களின் அமராவதி பட்டினத்தையும் அழகில் மிஞ்சியதாக விளங்கும் காஞ்சிமா நகரின் வானளாவும் மாடங்கள் நிறைந்த மாளிகைகளின் சாளரங்களில் தீப அலங்காரங்கள்



செய்யப்பட்டு நகரையே ஒளி மயமாக்கின. அன்றுதான் அந்த ஊருக்கே புதிதாக வந்தவன் போலும், அந்த நகரின் பேரழகைக் கண்டு பெரு வியப்பில் ஆழ்ந்து விட்டவன் போலும் தோன்றிய வாலிபன் ஒருவன் விசித்திர விசித்திரமாகத் தோன்றும் அழகிய பெரிய மாளிகைகளையும் தேவாலயங்களையும் பார்த்துக் கொண்டே பல வீதிகளையும் கடந்து நடந்து வந்தான். பல தெருக்களையும் கடந்து நடந்துகொண்டிருக்கும் அவன் எந்த வீதியிலோ தனக்கு வேண்டிய யாரையோ தேடிக் கொண்டு போகிறான் என்பதைத் துருவித் துருவிப் பார்க்கும் அவன் கண் பார்வையிலிருந்து நன்கு தெரிந்து கொள்ள முடிந்தது.

அவன் ஒரு பெரிய வீதியை அடைந்ததும் ஒரு வீட்டிலிருந்து யாழின் ஒலியும், இன்னொரு வீட்டில் சதங்கை ஒலியும்,



மற்றொரு வீட்டிலிருந்து குழல் ஒலியும், பிறிதொரு வீட்டிலிருந்து இனிய குரலால் ஒரு பெண் பாடும் ஒலியும் வரிசையாகக் கேட்டுக்கொண்டிருந்தன. அவன் ஓர் இடத்தில் தயங்கி நின்றான். அவன் நாடி வந்த வீதி இதுதான் என்பதைப் பிறரைக் கேட்காமலேயே அறிந்து கொண்டு விட்டான். ஆனால் அவன் யாரை நாடி வந்தானோ அவர்கள் இருக்கும் மாளிகையை அறிந்து கொள்வது எப்படி என்றுதான் தயங்கி நின்றிருக்க வேண்டும். நல்ல வேளை, அவன் எதிரே ஒரு மனிதர் வந்து கொண்டிருந்தார். அந்த வாலிபன் மெதுவாக அந்த மனிதரிடம் நெருங்கி, ''ஐயனே! இங்கு சோழ நாட்டிலிருந்து வந்து குடி புகுந்திருக்கும் 'தேனார்மொழி' என்னும் இசைக் கணிகையின் மாளிகை எது?'' என்றான்.

அந்த வாலிபனின் கேள்விக்குப் பதில் அளிக்காமல் அந்த மனிதர் அலட்சியமாகச் சிரித்துக் கொண்டே, ''சோழ நாடு..அப்படி ஒரு நாடு கூட இருக்கிறதா? என்னையா பழைய புராண காலத்து நாடுகளை யெல்லாம் பற்றி இப்பொழுது பேச வந்துவிட்டீர்? இப்பொழுது நீர் குறிப்பிடும் அந்த நாடுகள் எல்லாம் பல்லவ நாடு என்பதை மறந்து, இந்தப் பல்லவ சாம்ராஜ்யத்தின் தலை நகரில் வந்தே 'சோழ நாடு' என்று பேசுகிறீரே?'' என்றார்.

அந்த வாலிபனும் சிறிது அலட்சியமாகச் சிரித்தான். ''உண்மைதான், தவறுதான். கடந்த முந்நூறு ஆண்டுகளுக்கு முன் இருந்த நிலையை நினைத்துப் பார்ப்பது கூட இப்பொழுது நீங்கள் சொல்வதுபோல் ஏதோ புராண காலத்தையோ புராதன காலத்தையோ நினைத்துப் பார்ப்பது போல்தான் இருக்கிறது. என்ன செய்வது? புராண காலத்திலோ புராதன காலத்திலோ ஏற்பட்டவைகளையெல்லாம் நம்முடைய நினைவுக்குக் கொண்டு வர இன்னும் காவியங்களும் ஓவியங்களும் அழியாமல் இருக்கின்றன அல்லவா? பெருமை பொருந்திய இந்தப் பல்லவ சாம்ராஜ்யத்தின் தலை நகரிலிருந்து, நான் சோழ நாடு என்று சொன்னதன் காரணமாகச் சோழ பரம்பரையை நினைவுப்படுத்தி விட்டது பிசகுதான். வேறு அடையாளம் சொல்லிக் கேட்க முடியாமையாலும் சோழ நாடு, சோழநாடு என்று சொல்லிப் பழக்கம் ஏற்பட்டு விட்டதாலும் அப்படிக் கேட்டேன். பல்லவர் கோனும் தன்னைத் ''தமிழ்த் தென்றல் புகுந்துலவும் தண் சோணாடன்'' என்று சொல்லிக் கொள்வதால் சோழநாடு என்று சொல்லுவதில் தவறு இல்லை என்று எண்ணி விட்டேன். போகட்டும். இப்பொழுது என் தவறை உணர்ந்து விட்டேன். குடந்தைக் கோட்டத்திலிருந்து இங்கு வந்து குடி புகுந்திருக்கும் தேனார்மொழியாள் என்ற அணங்கின் வீடு எது என்று கேட்கிறேன். தயைசெய்து தங்களுக்குத் தெரிந்தால் சொல்லுவீர்களா?'' என்று கேட்டான்.

அந்த மனிதர் அவ் வாலிபன் பேச்சிலிருந்து அவன் ஒரு சாதாரண வாலிபன் அல்ல, நன்கு படித்த பேரறிவாளன் என்பதை உணர்ந்து கொண்டு தம்முடைய மதிப்பையும் விட்டுக் கொடுக்காதவர் போல், ''பழக்கத்தினால் ஏற்பட்ட தவறை நான் பெருங் குற்றமாய்க் கருதவில்லை. இங்கிருந்து மேற்கே பொன்தகடு போர்த்தியது போல் துலங்கும் அதோ அந்த மஞ்சள் நிற மாளிகைதான் தேனார்மொழியாளின் மாளிகை'' என்று சொல்லி விட்டு நடந்தார். அந்த வாலிபனும் அலட்சியமாகப் புன்முறுவல் பூத்தபடியே அவ

# நிம்மதியான பிரயாணத்திற்கேற்ற டயர்

### வெடித்து விடாத பாதுகாப்பு

அபாயகரமாக வெடித்து விடுமோ என இனிமேல் அஞ்ச வேண்டாம். இந்த டயரில் காற்று புகாதபடி ஒரு பாதுகாப்பு உள் உறை பொருத்தப் பட்டிருக்கிறது. வெடிக்கவோ, கிழிக்கவோ, தேய்ந்து போகவோ எதுவும் இல்லை.

### துவாரமிட இயலாத பாதுகாப்பு

புதிய டிலக்ஸ் சாம்பியன் டயரின் பாதுகாப்பு உள் உறை, துவாரமிடும் பொருள்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, காற்று விரையில் போகாதபடி தடுக்கிறது. போக்குவரத்து அதிகம் உள்ள ரஸ்தாக்களில் டயர்களை மாற்ற வேண்டுமே எனக் கவலைப் பட வேண்டியதில்லை.

### அதிக கூடுதலான மைல்கள்

புதிய டிலக்ஸ சாம்பியன் டயர் அதிக மைல்கள் ஓடுகின்றன. மேல் பாகம் கெட்டியாக இருப்பதாலும், அதன் தட்டையான டிரெட்கள் சமமாகத் தேய்வதாலும் அதிக நாள் நீடித்து நன்கு உழைக்கிறது.




இப்பொழுது நவீன பாதுகாப்பு வசதிகளுடன் கூடிய—புதிய டிலக்ஸ் சாம்பியன் டியூப்லெஸ் டயரை பயர்ஸ்டோன் ஸ்தாபனம் அளிக்கிறது. எவ்விலையிலும் எந்த டயரும் இதற்குமுன் அளிக்காத பாதுகாப்பை உங்களுக்கும் உங்கள் குடும்பத்திற்கும் கொடுக்கிறது. முழு மன அமைதியுடன் பிரயாணம் செய்ய முதன் முறையாகத் தயாரிக்கப்பட்ட டயர் இது ஒன்றே.

**Firestone**
**பயர்ஸ்டோன்**

புதிய டிலெக்ஸ் சாம்பியன்
**ட்யூப்லெஸ் டயர்**


ஏப்ரல்
12உ
முதல்
சரவணபவா & யூனிட்டியின்
வணங்காமுடி
டைரக்ஷன்
P. புல்லையா, B.A.,
ஸ்டூடியோ: நெப்ட்யூன்

ருக்கு வணக்கம் செலுத்திவிட்டு நடந்தான். ஆனால் சில விநாடிகளே பேசிக்கொண்டிருந்தாலும் அந்த மனிதரின் முகத்தைத் தன் நினைவில் வைத்துக்கொள்ள நினைத்தான் அந்த வாலிபன்.

தேனார்மொழியாள் சோழ நாட்டிலுள்ள குடந்தைக் கோட்டத்திலிருந்து பல்லவரின் அரச சபையில் ஒரு இசைக் கணிகையாக ஊழியம் செய்ய வந்தவள். இசைக் கலையில் மிகவும் தேர்ந்தவள் என்பதோடு, பல்லவ அரசர்களில் மிகவும் சிறந்தவனாக விளங்கியவனும் இசைக் கலையில் லய வகைகளில் பல நடைகளைக் கண்டு சாஸ்திரம் வகுத்தவனுமான மகேந்திர பல்லவன் மீட்டிய பரிவாதினி என்னும் எட்டு பொன் நரம்புகளைக் கொண்ட அற்புத யாழை அவனுக்குப் பின் எடுத்து மிகவும் அழகாக வாசிக்கும் திறமையும் பெற்றிருந்தாள் தேனார்மொழியாள். குடந்தைக் கோட்டத்திலிருந்தஅவள் இசைத் திறனை அறிந்து வீரநாராயண நந்திவர்மன் மிகப் பெருமையோடு அவளைத் தன் சபையில் பிரதான இசைக் கணிகையாக அமர்த்திக்கொண்டான். அரசனின் அன்பும், நன்மதிப்பும் இசைக் கலையில் பிறரை வசீகரிக்கும் தேர்ச்சியும் பெற்று மக்களின் நன்மதிப்புக்கும் பாத்திரமான தேனார்மொழியாளின் பெருமையைப் பற்றி நாம் சொல்ல வேண்டுமா? உண்மையாக அவளுடைய பெரிய மாளிகை பளபளக்கும் மஞ்சள் வர்ணக் குழம்புகளால் பூசப்பட்டிருந்தாலும் பொன் தகட்டால் போர்த்தப்பட்டது போல் தானிருந்தது. உண்மையிலேயே தன் மாளிகையையே பொன் மாளிகையாக்கிக் கொள்ளும் செல்வச் செருக்கும் அவளுக்கு இருந்தது.

அந்த வாலிபன் அந்த மாளிகையின் வாசலில் வந்து சிறிதுநேரம் தயங்கிநின்றான். உள்ளிருந்து வந்த அந்த யாழின் ஒலி கேட்டு அவன் அப்படித் தயங்கினானோ அல்லது திடீரென்று அந்த மாளிகைக்குள்ளே போவது அவனுக்குச் சங்கோசத்தைக் கொடுத்ததோ தெரியாது. ஏதோ யோசனைசெய்தவண்ணமே தயங்கியபடியே மெதுவாகஉள்ளேசென்றான்.

அந்த மாளிகைதான் எவ்வளவு அழகு! வெளிப்புறத்தை விட உட்புறம் சித்திர வேலைப்பாடுகள் நிறைந்ததாக இருந்தது. வெளிப்புறத்தில் பார்வைக்குப் பொன் வண்ணமாகக் காட்சியளித்த அந்த மாளிகை உட்புறத்தில் பொன் மயமாகவே காட்சியளித்தது. வட்ட வடிவமான தாழ்வாரத்தைச் சுற்றிலும் அழகான பொன் தூண்கள் தாங்கி நின்றன. சுவர்களில் நீண்ட நிலைக் கண்ணாடிகளும் சிவபெருமானின் பல திருக்கோலங்களைக் காட்டும் அழகான ஓவியங்களும் பதிக்கப்பட்டிருந்தன.



தரையெங்கும் விலையுயர்ந்த இரத்தினக் கம்பளங்கள் விரிக்கப்பட்டிருந்தன. சீன நாட்டிலிருந்து வரவழைக்கப்பட்ட வர்ணக் கண்ணாடி தொங்கு விளக்குகள் தங்கள் வர்ண ஒளியால் அந்த அழகிய தாழ்வாரத்தைக் கற்பனைக்கு எட்டாத ஒரு ஒளி உலகத்தைக் கனவில் கொண்டு வந்து காட்டுவது போன்ற சூழ்நிலையையும் ஏற்படுத்தின. ஆம்! அந்த ஒளி உலகமே மன மயக்கத்தைக் கொடுப்பதாய்த் தானிருந்தது. அந்த ஒளி உலகத்தையே தனி அரசாட்சி செய்யும் பேரரசு போல் பொன்னாடை யணிந்து, பொன் மணி பூஷணங்கள் அணிந்து உலகை மறந்து இசையில் கலந்து இருக்கும் சுந்தரியையும் பார்த்த பின் இரும்பான மனசும் மெழுகாக உருகிவிடும் என்பது நிச்சயம். ஆம்! அவள்தான் தேனார்மொழி. அவளுடைய பேரெழில் தான் என்ன? அவள் இள நங்கையல்ல! அவளுக்கு வயது முப்பதுக்கு மேலிருக்கும். ஆயினும் அந்தப் பொன் மேனியின் அழகில் மாசுமறுவற்ற இளமை யெழில் தான் மிகுந்திருந்தது. உண்மையிலேயே அந்த வாலிபன் தட்டுத்தடுமாறி ஏதோ ஒரு உலகத்துக்கு வந்து விட்டவன் போல்தான் மயங்கி நின்றுகொண்டிருந்தான். அவனுடைய மயக்கம் தெளியச் சிறிதுநேரம் சென்றது. இசையில் மெய் மறந்து இருக்கும் அந்த அணங்கின் கவனத்தை எப்படித் திருப்புவது என்றுதான் அவனுக்குத் தெரியவில்லை. அவன் மெதுவாக நடந்து தேனார்மொழியாளுக்குச் சமீபமாகப் போடப்பட்டிருந்த ஒரு ஆசனத்தில் உட்காருபவன் போல உட்கார்ந்து, அதைச்சிறிது சத்தம் எழும்படி நகர்த்தி அவள் கவனத்தைக் கவர்ந்தான்.

உபாத்தியாயர் :— ஏன் மகாத்மா காந்தி இவ்வளவு புகழ் பெற்றார் சொல்லுடா, ராமு.

ராமு (கணக்கு வாத்தியார் மகன்) :—ஏனென்றால் அவர்தான் ஜனங்களை ஒன்றுகூட்டி, வாழ் நாட்களைச் சிறையில் கழித்து, சுதந்திர தாகத்தைப்பெருக்கி, வெள்ளையரை நீக்கிச் சுதந்திரம் வாங்கித் தந்து நம்முடைய நல்வாழ்வை வகுத்தவர்!



யாழின் சுருதியோடு இணைந்து அமைதியான இசை வெள்ளத்தில் மூழ்கியிருந்த தேனார்மொழியாளுக்கு இடையே களங்கத்தை ஏற்படுத்துவது போல் ஒரு சத்தம் எழவே சுய உணர்வு பெற்றவளாய்த் தன் அழகான விழிகளைத் திறந்து பார்த்தாள். தன் எதிரே ஆசனத்தில் கம்பீரமாக வீற்றிருக்கும் வாலிபனைக் கண்டதும் அவளுக்குச் சிறிது திகைப்பு ஏற்பட்டது. அவளுடைய அழகிய விழிகள் பரபரப்பு அடைந்து வியப்பில் சுழன்றன.

அவ்வேளையில் ஒருவரும் அறியா வண்ணம் தன் மாளிகையில் நுழைந்ததோடு எவரும் உபசரித்து 'உட்காரு' என்று சொல்லாதபோது தானே வந்து ஆசனத்தில் அமர்ந்திருக்கும் மனிதரைப் பற்றி அவள் என்ன நினைப்பது? உண்மையிலேயே அவ்வாலிபன் சிறிது அதிர்ஷ்டம் செய்தவனாகத்தானிருக்க வேண்டும்? இல்லா விட்டால் ஒரு வாலிபன் அந்த நிலையில் துணிவோடு வந்து தன் எதிரில் அமர்ந்திருப்பதைப் பார்த்ததும் தேனார்மொழியாள் பொறுமையோடு இருந்தாள் அல்லவா? பாவம்! இயற்கையிலேயே அந்த வாலிபனின் கம்பீரமான முகவொளி தேனார்மொழியாளின் மனோ வேகத்தையே அடக்கிப் பிடித்திருக்க வேண்டும். எத்தனையோ அரச குமாரர்களின் முகங்களையும், பிரபுக்களின் முகங்களையும் பார்த்திருக்கும் அவளுக்கு அந்தப் புதிய முக கம்பீரம், காணாத புது வசிகரமாகத்தான் இருந்தது. சில நிமிட நேரங்கள் அந்த வாலிபனின் ஒளி முகத்தை அவள் பார்க்க முடியாதபடி இனமறியாத நாணம் அவளைப் பிடித்துக் கொண்டு தலைகுனிய வைத்தது. அவள் தன் பெயருக்கு ஒத்த இனிய குரலில், "தாங்கள் யார்?" என்று கேட்டாள் மிகுந்த மரியாதையோடும் அடக்கத்தோடும்.

"நான் சோழ நாட்டைச் சேர்ந்தவன்...." என்று அவனும் சுருக்கமாகவே சொல்லி நிறுத்தினான். அவன் இவ்வளவு சுருக்கமான பதில் சொல்லி நிறுத்துவான் என்று அவள் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. அவனோடு பேசுவதற்கே வெட்கப்பட்ட அவளுக்கு இந்த நிலை மேலும் சற்றுத் தர்மசங்கடத்தைத்தான் உண்டாக்கியது.

"தங்கள் சொந்த ஊர் எதுவோ. நான் தெரிந்து கொள்ளலாமா??" என்று வினவினாள் பணிவான குரலில்.

"உங்கள் சொந்த ஊருக்குச் சமீபம் தான். குடந்தைக்குச் சமீபமாக உள்ள திருப்புறம்பியம்!" என்று சொல்லி நிறுத்திக் கொண்டான் அவன்.

'சோழ நாட்டைச் சேர்ந்தவன். அதிலும் தன்னுடைய சொந்த ஊருக்குச் சமீபத்தில் இருப்பவன்' என்பதைக் கேட்ட அவனிடம் அவளுக்கு ஒரு மதிப்பும் பரிவும் ஏற்பட்டன. இதன் காரணமாக அவனோடு இன்னும் கொஞ்சம் பேசத் தைரியமும் ஏற்பட்டிருக்க வேண்டும். அவன் முகத்தை அவள் மறுபடியும் உற்றுக் கவனித்து விட்டு, "தாங்கள் திருப்புறம்பியத்தைச் சேர்ந்தவர்களா? மிக்க மகிழ்ச்சி. சோழ நாட்டவர்கள் வந்தால் எத்தனை நாட்கள் வேண்டுமானாலும் என் வீட்டில் விருந்தினராகத் தங்கலாம். தாங்கள் என் வீட்டை நாடி வந்ததற்கு மிகவும் சந்தோஷம்" என்றாள் சிறிது வெட்கமும் பரிவும் நிறைந்த குரலில்.

அந்த வாலிபன் சிரித்தான். "தங்கள் உபசார வார்த்தைக்கு நன்றி. நான் இந்தக் காஞ்சிக்கு விருந்து சாப்பிடுவதற்காக வரவில்லை. சோழ நாட்டில் வாழும் ஒருவனுக்கு மற்ற எந்த நாட்டின் விருந்தும் மிக உன்னதமாக இருந்த தில்லை. நான் இந்தக் காஞ்சிக்கு வந்த காரணமே வேறு. அதுவும் உங்களைத் தேடி வந்த காரியம் மிக முக்கியமானது" என்றான்.

அந்த வாலிபனின் வார்த்தைகள் அவளுக்கு மிகுந்த வியப்பை அளித்தன. அவள் ஒருவிதமாகத் தன்னைச் சமாளித்துக் கொண்டு, "நீங்கள் எந்தக் காரியமாகவேனும் இந்த ஊருக்கு வந்திருக்கலாம். ஆனால் சோழ நாட்டிலிருந்து வந்திருக்கும் தங்களுக்கு உபசாரம் செய்ய வேண்டியது என்னுடைய கடமை. சோழ நாட்டைச் சேர்ந்தவர்கள் எவரும் எங்கே இருந்தாலும் அவர்களோடு ஒட்டிய இந்தப் பண்பாட்டிலிருந்து விலக முடியாதல்லவா? இருக்கட்டும்—தாங்கள் என்னிடம் எவ்

விஷயமாக வந்திருக்கிறீர்கள்? தெரியப் படுத்தினால் நன்மையாக இருக்கும். தங்களுக்கு அரசாங்கத்தில் ஏதேனும் உதவிகள் வேண்டுமாயின் செய்யச் சித்தமாய் இருக்கிறேன். தங்களுக்கு ஏதேனும் உத்தியோகம் அரண்மனையில் வேண்டுமாயினும்..'' என்று மெது வாகச் சொல்லி நிறுத்தினாள்.

அந்த வாலிபன் கொஞ்சம் ஏளன மாகச் சிரித்துக் கொண்டே, ''எனக்கு அரச சமூகத்தில் ஆக வேண்டியது ஒன்றுமில்லை. நான் சோழ அரச சபை யில் ஏதேனும் உத்தியோகம் கிடைத் தால் மிகவும் மகிழ்ச்சி அடைவேன். இந்தப் பல்லவ அரசர்களின் அரச சபை யில் உத்தியோகம் தேடிக் கொள்ளும் அளவுக்கு என் புத்தி சுய மதிப்பை இழந்துவிட வில்லை. அதுவும் இந்த அர சாங்கத்தில் ஒரு பெண்ணின் சிபாரி சினால் உத்தியோகம் பெற்றுக்கொள்ளும் அளவுக்கு என்னுடைய நிலை வந்துவிட வில்லை'' என்றான்.

அந்த வாலிபன் தன்னுடைய வார்த் தைகளுக்கு அத்தகைய முறையில் பதில் அளிப்பானென்று தேனார்மொழியாள் எதிர்பார்க்கவில்லை. தன் உள்ளத்தில் திடீரென்று ஏற்பட்ட பரிவும் உதவி செய்ய வேண்டும் என்ற உணர்ச்சியும் தனக்குப் பல்லவ அரசசபையில் உள்ள மதிப்பு காரணமாக ஏற்பட்ட மமதை யுமே தன் எதிரில் வந்து நிற்கும் ஒரு மனிதனின் மனநிலை, அந்தஸ்து இவை களை அறிந்து கொள்ளும் முன்னால் இப் படிப்பட்ட வார்த்தைகளைச் சொல்லும் படி செய்து விட்டன என்று அவள் நினைந்து மனம் வருந்தினாள். ''மன்னிக் கவும்—நான் தங்கள் மன நிலையைப்பற் றியும், தங்கள் யோக்கியதையைப்பற்றி யும், தாங்கள் வந்த காரியம் என்ன என்பதைப் பற்றியும் தெரிந்து கொள் ளும் முன்னால் இத்தகைய வார்த்தைகள் பேசியது தவறுதான். தாங்கள் யார்? தாங்கள் என்னிடம் வந்த காரியம் என்ன என்பதைத் தெரிந்து கொள்ள விரும்புகிறேன். தங்களுடைய காரியம் என்ன என்று தெரிந்து கொண்டபின் அக்காரியத்துக்கு என்னாலான உதவிகளை யெல்லாம் செய்யச் சித்தமாயிருக் கிறேன்'' என்றாள்.

''தங்களிடம் நான் வந்த காரியத் தைப் பளிச்சென்று சொல்லிவிட முடி யாது. அது மிகவும் அந்தரங்கமான விஷயம். இங்கு நீங்கள் தனித்திருக்கும் நிலையில் அந்த விஷயத்தைச் சொல்ல லாம்-ஆயினும் திடீரென்று யாரேனும் வந்து நம்முடைய வார்த்தைகளைக்



கேட்டுவிட்டால் மிகவும் விபரீதமாக முடியும்...'' என்று கூறினன்.

அவனுடைய வார்த்தைகள் தேனூர் மொழியாளுக்கு ஆச்சர்யத்துக்கு மேல் ஆச்சர்யத்தை யளித்தன. அவன் தன்னிடம் எத்தகைய அந்தரங்கமான காரியத்தை உத்தேசித்துப் பேச வந்திருக்கிறான் என்பதைப் புரிந்துகொள்ள முடியாதபடி குழப்பம் தான் அப்பொழுது அவளுக்கு ஏற்பட்டது. ''நீங்கள் பயப்படவேண்டாம் — நீங்கள் என்னோடு தாராளமாகப் பேசலாம். உங்களுக்கு எவ்வித இடையூறோ ஆபத்தோ ஏற்படாது. அப்படி ஏற்பட்டாலும் நான் பார்த்துக் கொள்கிறேன். எல்லாவற்றுக்கும் நான் வாயில் கதவை வேண்டுமானல் சாத்தித் தாழிட்டுவிட்டு வருகிறேன்...'' என்று சொல்லிச் சட்டென்று வாசற் பக்கம் சென்று கதவை மூடித் தாழிட்டு விட்டு உள்ளே வந்து அவள் எதிரில் நின்ருன்.

''நீங்கள் இவ்வளவு சகஜமான உள்ளமும் உபகாரசிந்தையும் உள்ளவர்களாக இருப்பீர்கள் என்று நான் நினைக்கவில்லை. அதுவரையில் மகிழ்ச்சி. முதலில் நான் இன்னரென்று தங்களுக்கு அறிமுகம் செய்துகொள்ள வேண்டாமா? என் பெயர் பூதுகன். நீங்கள் இந்தப் பெயரை இதற்குமுன் எங்கேயாவது கேள்விப்பட்டிருக்கலாம்...'' என்று சொல்லி விட்டு ஆர்வத்தோடு அவள் முகத்தைப் பார்த்தான் அவன். (தொடரும்)

# பொன் விழாக் காட்சிகள்

ஆதிசங்கரர் ஸ்தாபித்த காஞ்சி காமகோடி பீடத்தை இன்று அலங்கரிக்கும் ஜகத்குரு சந்திரசேகர சரஸ்வதி ஸ்ரீசங்கராச்சாரிய சுவாமிகள் 68 வது பீடாதிபதியாவார். ஆச்சாரிய சுவாமிகள் 50 ஆண்டுகளுக்கு முன் வட ஆற்காடு ஜில்லாவில் காஞ்சிபுரத்துக்கு அருகிலுள்ள கலவை என்னும் கிராமத்தில் பதின்மூன்று வயது பாலகனுக இருந்தபோது, பீடாதிபதியானுர்கள். அன்றிலிருந்து இன்று வரை ஆச்சாரிய சுவாமிகள் பாரதநாட்டுக்குப் புரிந்துள்ள சேவைகள் எண்ணற்றவை.

அல்லும் பகலும் ஆத்ம விசாரத்திலும் அனுஷ்டானங்களிலும், விரதங்களிலும் ஈடுபட்டு நேரத்தைச் செலவிட்டாலும், தம்மை நாடி வரும் அன்பர்களின் க்ஷேமலாபங்களை விசாரிக்கத் தவறுவதில்லை. அப்போது அவர்கள் காட்டும் பரிவும் அன்பும் பக்தர்களை மெய்யுருகச் செய்து விடுகிறது. இவ்வளவு லௌகிக ஞானம் இந்தக் கிராமத்தில் வாழும் ஆச்சாரிய சுவாமிகள் எப்படிப் பெற்ருர்கள் என்று பக்தர்கள் பெரிதும் வியந்து போவார்கள். அவர்கள் சமஸ்கிருதம், தமிழ், ஆங்கிலம், கன்னடம், ஹிந்தி, வங்காளி முதலிய பல பாஷைகள் அறிந்த விற்பன்னர். சென்ற ஐம்பதாண்டுகளாக ஆச்சாரிய சுவாமிகளைப் பார்த்தவர்கள், ''இவர்கள் ஆதிசங்கரரின் மறு அவதாரம்! நமது பாக்கியவசத்தால் இன்று காணக் கிடைத்திருக்கிருர்!'' என்று நெஞ்சு நெகிழ்ந்துருகப் பேசுவதைக் கேட்கிருேம். அப்படிப்பட்ட மகானுடைய உயரிய பண்பும் தூய தவ வாழ்க்கையும் ஆஸ்திகர்களை மட்டுமன்றி நாஸ்திகர்களையும் கவர்ந்திருப்பதில் வியப்பில்லை அல்லவா?

ஆச்சாரிய சுவாமிகள் பீடாரோஹண விழாவை மிகச் சிறப்பாகச் சென்னையில் நடத்த வேண்டும் என்று பக்த கோடிகள் வற்புறுத்தி அழைத்தபோது ஆச்சாரிய சுவாமிகள் பிடிவாதமாக வரமறுத்துவிட்டார்கள். தாம் எந்தக் கிராமத்தில் பீடத்துக்குவந்தார்களோ அந்தக் கிராமத்திலேயே அந்த நன்னாளைக் கழிக்க முடிவு செய்தார்கள். எனினும் அன்பர்கள் சென்னையிலும் மற்ற இடங்களிலும் பொன் விழா கொண்டாடத் தீர்மானித்தார்கள். அதன்படி மார்ச்சு 16-ம் தேதியன்று பக்தர்கள் பலர் ஆச்சாரிய சுவாமிகளைக் கலவை கிராமத்திலேயே சந்தித்துத் தமிழ்நாட்டுக்கு ஆசிச் செய்தியைப் பெற்று வந்தார்கள். அன்று மாலை சென்னை எழும்பூரில் ராஜாஜி அவர்கள் பொன் விழா நிகழ்ச்சிகளை ஆரம்பித்து வைத்தார். மறு நாள் ஞாயிற்றுக்கிழமை 17-ம் தேதி காலை சென்னை மயிலாப்பூர் ரஸிகரஞ்சனி சபா மண்டபத்தில் டாக்டர் ஸி. பி. ராமசுவாமி அய்யர் அவர்கள் தலைமையில் பொன் விழா வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. ஸ்ரீமதி எம். எஸ். அவர்களும் குமாரி ராதாவும் விழாத் தொடக்கத்தில் பிரார்த்தனை கீதங்கள் பாடினுர்கள். முடிவில் பஜகோவிந்தம் பாட விழா இனிது முடிந்தது. அந்த விழாவில் ஆச்சாரிய சுவாமிகளைப் பற்றி அவர் சகோதரர் ஸ்ரீ சாம்பமூர்த்தி சாஸ்திரிகள் எழுதிய வாழ்க்கை வரலாறு வெளியிடப்பட்டது.

எதிர்ப்பக்கத்தில் மேற்படி பொன் விழா நிகழ்ச்சிகளையும் அதில் பங்கெடுத்துக் கொண்டவர்களையும் காணலாம்.

1. சென்னை சாகேத நிலையத்தில் பொன் விழா நிகழ்ச்சிகளை ராஜாஜி துவக்கி வைத்தார். 2. மயிலை ரஸிகரஞ்சனி சபை மண்டபத்தில் நடந்த பொன்விழாக் காட்சிகள். ஸ்ரீ வாசுதேவாச்சார் துதிகீதங்களைப் பாடினுர். 3. அனந்தகிருஷ்ண சாஸ்திரிகள். 4. விழாத் தலைவர் டாக்டர் ஸி. பி. 5. டி. எம். நாராயணசாமிபிள்ளை. 6. கலவையில் ஆச்சாரியசுவாமிகள். 7. கே. பாலசுப்பிரமணியஅய்யர். 8. சாம்பமூர்த்திசாஸ்திரிகள். 9. ரகுநாதய்யர். 10. ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான். 11. திரளாகக் கூடியிருந்த மக்கள். 12. பேராசிரியர் சங்கரநாராயணன். 13. தெலுங்கில் முழங்கிய ஆந்திர அன்பர். 14. ஏ. ஜி. வெங்கடாச்சாரி.

# மக்ளீன்ஸ் *இப்போது* பற்களை முன்னைவிட அதிவெண்மையாக சுத்தம் செய்கிறது!




மகத்தான ஓர் செய்தி! மக்ளீன்ஸ் தயாரிப்பில் இப்போது வியக்கத்தக்கதோர் புதிய பொருள் சேர்க்கப்படுவதால் அதை உபயோகித்து பற்களைச் சுத்தம் செய்யும்பொழுது பற்கள் முன்னை விட அதிவெண்மையாகவும் சுத்தமாகவும் விளங்குவதுடன் நல்ல ஆரோக்கியத்தைக் குறிக்கின்றது. நீங்களும் மக்ளீன் பற்பசையை உபயோகித்து உங்கள் பற்கள் எவ்வளவு வெண்மையாக விளங்குகின்றன என்று கவனியுங்கள்.

..............................

## மக்ளீனுல் வெண்மையாக்கப்பட்ட பற்கள்

### ஆரோக்கியமானதுமட்டுமல்லாமல் பற் சிதைவினின்றும் காப்பாற்றப்படுகின்றன

மக்ளீன்ஸ் பற்பசையினுல் பற்களை சுத்தம் செய்யுங்கள். முதலில் குளுமையும் புதுமை மணம் கமழுவதையும் உணர்வீர்கள். பின்பு பற்கள் முன்னைவிட அதிவெண்மையாக சுத்தம் செய்யப்பட்டிருப்பதை குறிக்கின்றது. உங்களுடைய பற்களின்மேல் படர்ந்திருக்கும் வழுவழுப்பான அசுத்தத்தில் 'லேப்பாயிட்ஸ்' என்று கூறப்படும் அசுத்தம் கலந்திருக்கிறது இந்த 'லேப்பாயிட்ஸ்' முறையே சரிவர அகற்றப்படா விட்டால் அமிலங்கள் பற்களின் இனாமலை அரித்து, பற்கள் சிதைவடைகின்றன. 'லேப்பாயிட்ஸ்'ஸை அறவே அகற்ற, இதை கரையச் செய்வதுதான் சரியான வழி. மக்ளீன்ஸ் பற்பசை ஒன்றில் மட்டுமே 'லேப்பாயிட்'ஸை கரைக்கக்கூடிய விசேஷ பொருள் சேர்க்கப்பட்டிருக்கிறது. இது 'லேப்பாயிடஸை' மிருதுவாக, அபாயமின்றி. சீக்கிரத்தில் கரைத்து அப்புறப்படுத்துகிறது: இதுவே பற் சிதைவினின்றும் பற்களைத் தவிர்ப்பதற்கான சிறந்த மார்க்கம்.

சுத்தமான, வெண்ணிற, ஆரோக்கிய பற்களை அடைய தினந்தோறும் காலையிலும் இரவிலும் மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசையை உபயோகித்து பற்களைச் சுத்தம் செய்யுங்கள்.

மக்ளீன்ஸ் பிஃப்பி ரிம் ஜிம் —சினிமா உலகத்தில் சமீபத்திய செய்திகளும் சங்கீதமும் சேர்ந்த இந் நிகழ்ச்சியை பிரதி திங்கட்கிழமைதோறும் இரவு 8-30 முதல் 9 மணி வரை ரேடியோ ஸிலோன் 41 மீட்டர்களில் கேளுங்கள்.




மக்ளீன்ஸ் பற்களை அதிவெண்மையாக சுத்தம் செய்கிறது

MTY 43 TAM

# ஸ்ரீ குருபதி ராகவ

[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது.]

## 72

அன்பை உபாசிப்பவன், சத்தியமே பரம்பொருள் வடிவம் என்று கருதுகிற ஒருவன், நாளைக்கென்று பொருளைச் சேர்க்க மாட்டான். பகவானை நம்பிப் பிழைப்பதானால் நாளையைப் பற்றி நாம் ஏன் சந்தேகப்பட வேண்டும். அன்றாடம் வேண்டியதை பகவான் தருவான். அன்றாடம் வேண்டியதற்கு மேல் ஆண்டவனுடைய நியதியை மீறிப் பொருள் சேர்த்து வைக்கும் பழக்கத்தினால் உலகத்தில் ஏற்றத் தாழ்வுகள் ஏற்பட்டுச் சங்கடங்களை நாமே உண்டாக்கிக் கொண்டிருக்கிறோம். அளவுக்கு மிஞ்சிய பொருள் பணக்காரர்களிடம் சேர்ந்து அவர்களும் அந்தப் பொருளைச் சரிவரப் பராமரிக்காமல் வீணாக்கி வருகிறார்கள். கோடிக் கணக்கில் மக்கள் பசியிலும், குளிரில் உடையில்லாமலும் தவிக்கிறார்கள். அவனவனுக்கு வேண்டியதை மட்டும் அவனவன் வைத்துக் கொண்டு வாழ்ந்தால் யாருமே கஷ்டப்படமாட்டார்கள். எல்லோரும் திருப்தியுடன் வாழலாம். இப்போது என்ன நிலைமை? ஏழைகள் மட்டுமல்ல; பணக்காரர்களுக்கும் திருப்தி கிடையாது. ஏழைகள் பணக்காரர்களாக வேண்டும் என்று ஆசைப்படுகிறார்கள், லட்சாதிபதி கோடீசுவரனாக வேண்டுமென்று விரும்புகிறான். உணவுக்கு வேண்டியது இருப்பினும் அது போதாது என்று மக்கள் வருத்தப்படுகிறார்கள். இது உண்மையாயினும் உணவுக்கு வேண்டிய அளவாகிலும் எல்லாருக்கும் ஏற்பாடு செய்ய வேண்டியது நியாயம். அனைவரும் திருப்தியாக இருக்க வேண்டுமானால் பணக்காரர்கள் முதலில் ஆரம்பிக்க வேண்டும். தங்களுடைய ஆசையை அடக்கி லோப குணம் மிதமிஞ்சிச் செல்லாமல் பணக்காரர்கள் நடந்து கொண்டார்களானால் ஏழைகளுக்குப் பசியின்றி உணவு கிடைக்கும். திருப்தியாக வாழவும் பயில்வார்கள்.

பொருள் ஈட்டலை விட்டு விட்டுச் சரியானபடி துறவு விரதத்தைக் காக்க வேண்டுமானால் மனிதன் பறவைகளைப் போல் வாழவேண்டும்; தலைமேல் கூரையில்லாமலும் குளிரைக் காக்கும் ஆடைகள் இல்லாமலும் நாளைக்கென்று உணவு சேர்த்து வைத்துக் கொள்ளாமலும் பறவைகளைப் போல் பிழைக்க வேண்டும். அன்றைக்கு வேண்டிய உணவு ஆண்டவன் தருவான் என்று இருக்க வேண்டும். இப்படிச் சாதாரண மக்கள் இருக்க முடியாது. நாம் செய்யக் கூடியது என்னவென்றால், இந்தக் குறிக்கோளை மறவாமல் நினைவில் வைத்துக் கொண்டு அளவுக்கு மிஞ்சிய பொருளைச் சேர்க்காமலும் தினசரி ஒரளவேனும் குறைத்துக் கொள்ள முயற்சி செய்தும் வாழ வேண்டும்.

பண்பாடு அடைந்த மனிதன் 'இது வேண்டும், அது வேண்டும்' என்று தன்னுடைய வாழ்க்கையை மேலும் மேலும் சிக்கலாக்கிக் கொள்ள மாட்டான். தானாகவே யோசித்து வேண்டாததை நீக்கிக் கொண்டு வாழ்க்கையை எளிமையாக்கிக் கொள்வான். தேவைகளின் கணக்கை எவ்வளவு குறைக்க முடியுமோ அவ்வளவு குறைத்துக் கொண்டு எளிய வாழ்க்கை வாழ்ந்தால் உண்மையான சுகமும் சந்தோஷமும் அடைவோம். பிறருக்குப் பணிசெய்ய அவகாசமும் பெறுவோம். ஒவ்வொருவனும் முயற்சி செய்தால் தன் தேவைகளைக் குறைத்துக் கொள்ள முடியும். அப்படிக் குறைத்துக் கொண்டால்தான் சுகம், ஆரோக்கியம், சாந்தி இவற்றைப் பெறுவோம். ஆன்மாவானது உடலை ஒரு பாரமாகச் சுமந்து நிற்கிறது. ஆசைகளை அதிகப்படுத்திக் கொண்டோமானால் இந்த பாரம் வர வர அதிகமாகிறது. ஆசைகளைக் குறைத்துக் கொண்டாலே தான் சரீரபாரமும் குறையும். சம்சாரச் சுழலினின்று விடுபடுவோம். பரம் பொருளின் தன்மை பெற்றிருக்கும் ஆன்மாவுக்குச் சரீரம் என்கிற தடை என்னத்துக்கு? அது பறவையை அடைத்து வைக்கும் கூண்டைப் போலவே யாகும். அந்தக் கூண்டைக் காப்பாற்றிக் கொள்வதற்காகப் பாபங்களும் செய்கிறோம். உண்மையில் உயிரும் சரீரமும் கூடியிருக்கும் வரையில் அந்தச் சரீரத்தைச் சேவைக்கு மட்டும் பயன்படுத்தி வாழ வேண்டும். மனித வாழ்க்கைக்கு வேண்டியது உணவல்ல, சேவை. அந்த சேவைக்காகவே உணவு உண்பதும் நீர் அருந்துவதும் தூங்குவதும் விழிப்பதும். இகத்தில் சுகமும் பிறகு மோட்சமும் தரும்.

சொத்து படைத்தவர்கள் எல்லாம் இதை ஆராய வேண்டும். பொருளைப் பற்றிய அபிரம விரத மானது சொத்தைப்பற்றி மட்டுமல்ல, மூளையில் சேர்த்து வைக்கும் அறிவுக்கும் பொருந்தும். உபயோகமற்ற விஷயங்களை யெல்லாம் அறிந்து கொள்ள வேண்டுமென்று ஆசைப்பட லாகாது. அளவுக்கு மிஞ்சிய கல்வி ஆசையும் நம்முடைய துறவு விரதத்துக்கு மாறுபட்டது. பகவானை நோக்கிச் செல்லும் அறிவே அறிவு. அவனை விட்டு வேறு வழியில் செல்லும் கல்வி அறிவு ஆகாது. நமக்கு உதவாது. அது நம்முடைய முன்னேற்றத்துக்குத் தடையேயாகும். கீதை 13வது அத்தியாயத்தைப் பாருங்கள். எது உண்மையான ஞானம் என்று அதில் சரியாகச் சொல்லப்பட்டிருக்கிறது:

அமானித்வம் அதாவது அடக்கம், அதம்பித்வம் அதாவது ஆடம்பரமின்மை, அஹிம்சை, பொறுமை, சீலம் ஆசார்ய உபாசனம், சுத்தம், உறுதியான மனம், புலனடக்கம், வைராக்கியம், ஆணவமின்மை, பிறப்பு இறப்பு வயோதிகம் நோய் இவற்றிலுள்ள துன்பத்தை உணர்தல், மக்கள் மனைவி வீடு இவற்றிலும் பொருள்களிலும் பற்றில்லாதிருத்தல்—சித்தத்தில் அமைதி, வேண்டியதையும் வேண்டாததையும் ஒரேவிதமாக அனுபவித்தல், பகவானிடத்தில் பக்தி செலுத்தல், ஜனக் கூட்டத்தை விரும்பாமல் தனிப்பட்ட இடத்தில் வசிக்க மனம் செல்லுதல், ஆன்ம ஞானமே பெரிதாக மதித்து மெய்ப்பொருளைக் காணுதல்—இவை உண்மை அறிவு. மற்றவை யெல்லாம் அறியாமை.

இப்படி கீதையில் உபதேசித்திருப்பது. நாம் கல்வி, கல்வி என்று இப்போது தேடி அலையும் பல விஷயங்களில் துன்பமே யொழிய நன்மை யொன்றுமில்லை. அவை சுகம் தரமாட்டா. இங்குமங்கும் மனத்தை அலையச் செய்யும். ஏன், மூளைக் கோளாறும் உண்டாக்கும். பல பாபங்களிலும் மனிதனைச் செலுத்தும்.

இப்படியெல்லாம் நான் சொல்வதனால் சோம்பல் பிரசாரம் நான் செய்யவில்லை. சும்மா இருக்கவேண்டும் என்பது என்னுடைய நோக்கமல்ல. ஒவ்வொரு விநாடியையும் சுறுசுறுப்பாகப் பயன்படுத்தத்தான் வேண்டும். ஆனால் சாத்விக முறையில் பயன்படுத்த வேண்டும். சத்தியத்தை அனுகிச் செல்ல வேண்டும். சேவை செய்வதில் வாழ்நாளைச் செலுத்த வேண்டும். சும்மா இருக்கலாகாது. தீமையை விலக்கி நன்மை எது என்று அறிந்து அதில் ஈடுபட வேண்டும்.

[எரவாடா சிறையிலிருந்து எழுதியது]

அனைத்திலும் உன் உரிமையைத் துறந்து விட்டு அவற்றை ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்து விட்டு வாழ்க்கை நடத்துவாய். அவ்வாறு துறப்பதனாலேயே உயிருடன் வாழ்வதற்கு உரிமை ஏற்படுகிறது. மற்றவர்கள் தங்கள் தங்கள் கடமையைச் செய்த பின் நானும் அந்தப் பணியில் இறங்குவேன் என்று சொல்ல வேண்டாம். மற்றவர்கள் செய்தால் செய்யட்டும், அல்லது செய்யாமல் இருக்கட்டும், உன் பணியை முதலில் நீ செய். எஞ்சியதை ஆண்டவனுக்கு விட்டுவிடு.

[ஹரிஜன் 6—3—37]

இன்றைக்கு வேண்டியதை மட்டும் நாம் பார்த்துக் கொண்டோமானால் நாளை விஷயத்தைப் பற்றிக் கவலை இல்லை, பகவான் பார்த்துக்கொள்வான்.

[யங் இந்தியா 13—10—21]

பொருள் இருந்தால்தான் உலகத்துக்குப் பணி செய்ய முடியும் என்று எண்ண வேண்டாம். ஏசு கிறிஸ்து, நபி முகம்மது, புத்தர், நானக், கபீர், சைதன்யர், சங்கரர், தயானந்தர், ராமகிருஷ்ணர் உலகத்துக்குப் பணி செய்தார்கள் அல்லவா? எவ்வளவு பெரிய அளவில் செய்திருக்கிறார்கள். லட்சக்கணக்கான மக்களின் வாழ்க்கைக்கு வழிகாட்டியாக இருக்கிறார்கள். இவர்கள் தோன்றியதே பெரும் செல்வம் என்று உலகம் கருதுகிறது. இவர்கள் அனைவரும் செல்வத்தைத் துறந்து வறுமையையே நன்மையாகக் கருதி வாழ்ந்தார்கள். கட்டாயத்தில் அல்ல; சுயமாகவே அப்படிச் செய்தார்கள்.

கோடிக்கணக்கானவர்களுக்கு இல்லாததை நாமாகவே வேண்டாம் என்று துறந்துவிட வேண்டும். இதுதான் நியாயமும் தர்மமும். ஆனால் அப்படித் துறப்பது எளிதல்ல. அதற்கு வேண்டிய மன உறுதி திடீர் என்று ஒருவனுக்கு வந்து விடாது. பயிற்சி செய்து கொள்ள வேண்டும். முதலாக உள்ளத்தைப் பக்குவப்படுத்திக் கொள்ள வேண்டும். மற்றவர்கள் அனுபவிக்காத சௌகரியங்கள் எனக்கு என்னத்திற்காக? வேண்டாம் என்று மனத்தைப் பண்படுத்திக் கொள்ள வேண்டும். அது முடிந்த பின் கூடிய துரிதத்துடன் நம்முடைய வாழ்க்கையை அந்த சங்கற்பத்தை அனுசரித்து வரவர மாற்றிக் கொள்ள வேண்டும்.

[யங் இந்தியா 24—6—26]




சாட்சிகள் யாருமே வரவில்லை. விசாரணைத் தேதியை ஒத்திப் போடுமாறு விண்ணப்பத்தாளை நீட்டிவிட்டு வக்கீலுடன் பேசப் போய் விட்டான் வேதாசலம். ஆனால் அடுத்த சில கணங்களுக்குள்ளேயே அவனது காரியஸ்தன் அவனைத் தேடிக்கொண்டு பரபரப்போடு ஓடினான்.

"எசமான்! சாட்சிகளைக் கூப்பிட்டு விட்டார்கள் முனிசிப்புஐயா. 'சரங்கி'த் தேதியை ஒத்திப்போட முடியாது என்று சொல்லி விட்டாருங்க. சாட்சி வரவில்லை என்றால் வழக்கைத் தள்ளி'விடுவார்களாம்!"

காரியஸ்தன் போட்ட குண்டைக் கேட்டு வேதாசலம் அசந்து போய் விட்டான். உச்சந்தலையிலிருந்து உள்ளங்கால் வரையில் உலைநீர் பாய்ந்தது போலிருந்தது.

"எதற்கு இப்படிப் பதற்றப்படுகிறீர்கள்? வேண்டிய ஆட்கள் சாட்சி சொல்வதற்கு இங்கே இருக்கிறார்கள்!" என்று ஆறுதல் சொன்னார் வக்கீல். அதுமட்டும் அல்ல; அதைச் சொன்ன வாயோடு வாயாகச் சாட்சியம் சொல்லும் கலையில் அதி நிபுணன் என்று பெயர் வாங்கியிருந்த முத்துவைத் தருவித்தும் விட்டார். வேதாசலத்தின் பையிலிருந்து முத்துவின் கைக்கு ஐந்து ரூபாய் நோட்டு ஒன்று வக்கீலைச் சாட்சியாக வைத்துக் கொண்டு மாறியது.

அடுத்த சில விநாடிகளுக்கெல்லாம் முத்து சாட்சிக் கூண்டில் ஏறி நின்றான். வேதாசலத்துக்கு ஒரே வியப்பு! 'வழக்கின் தலைகால் கூடத் தெரியாத; முத்துவாவது, சாட்சியம் சொல்லவாவது? வாதி யார், பிரதிவாதி யார்? பெயர் என்ன, ஊர் என்ன? எத்தனை ரூபாய்க்கு வழக்கு? இந்த விவரம் எல்லாம் முத்துவுக்குச் சொல்லப்படவில்லை. சாட்சியத்தில் என்ன சொல்ல வேண்டும் என்பதாவது சொல்லிக் கொடுத்திருக்கலாம் அல்லவா? அதுவும் சொல்லிக் கொடுக்கப் படவில்லை. அப்படி இருக்கும் பொழுது என்ன சாட்சியத்தைச் சொல்லி அவன் புரண்டு வாழப் போகிறான்? இன்று நம் வழக்கு கோவிந்தாதான்! பணமும் என்னுத்தான்' என்று முடிவு கட்டிவிட்டான் வேதாசலம்.

எதிர்க்கட்சி வக்கீலுக்கு வேதாசலத்தின் சார்பில் யாருமே சாட்சி சொல்ல வரவில்லை என்பது முன்பே தெரிந்து விட்டது. முத்து சாட்சிக் கூண்டில் நிற்பதைக் கண்ட

னும், 'இந்த மண் குதிரை எதற்குப் பிரயோசனப்படப் போகிறது?' என்று எண்ணி மனத்துள் மட்டற்ற மகிழ்ச்சி கொண்டார்.

ஆனால் நீதிபதியின் கேள்விகளைக்கொண்டே வழக்கு இன்னதுதான், இப்படித்தான் இருக்க வேண்டும் என்பதை முத்து தன் ஊகமாகத் தெரிந்து கொண்டு விட்டான்.

கடன் வாங்கியிருந்த கண்ணையிரம் காலமாகி விட்டார் என்றும், அவரது வாரிசும் பிள்ளையுமான மருதநாயகத்தின் மீது வழக்குத் தொடரப்பட்டிருக்கிறது என்பதையும் புரிந்து கொள்ள முத்துவுக்கு அதிக நேரம் பிடிக்க வில்லை. ஆனால் ஒன்று; அவன் நோட்டு எழுதிக் கொடுத்த கண்ணையிரத்தைக் கண்டதில்லை. ஆள் எப்படி இருப்பார், என்ன வயது இருக்கும் என்பதுகூட அவனுக்குத் தெரியாது. என்ன செய்வது என்று யோசித்து அவன் ஒரு முடிவுக்கு வருவதற்குள்ளாகவே, எதிர்க் கட்சி வக்கீல் குறுக்குக் கேள்விகள் கேட்கத் தொடங்கிவிட்டார். முத்து ஒரு தடவை பொய்ச் சாட்சியம் சொன்னதற்காகக் கம்பி எண்ணியிருந்தான். அதனால் அதையே முதல் அம்பாகத் தொடுத்தார்.

"ஏன், முத்து அவர்களே! தாங்கள் எப்பொழுதாவது சிறைக்குச் சென்றது உண்டா?"

"இந்தக் காலத்தில் சிறை புகாத தேசத் தொண்டன்கூட இருக்கிறானா, என்ன?" என்று எதிர்க்கேள்வி போட்டான் முத்து.

"தேசத்துக்கு என்ன தொண்டு செய்ததனால் தங்களுக்கு இந்தப் பெருமையைப் பெறும் வாய்ப்புக் கிடைத்ததோ?" என்று கேட்டார் வக்கீல்.

"சட்டத்தை மீறிய குற்றம்தான். வேறு என்ன?" என்றான் முத்து.



"எந்தச்சட்டத்தைமீறும்தொண்டைத் தாங்கள் ஏற்றீர்கள்?"

"காந்தி அடிகள் உப்புச் சத்தியாக்கிரகம் செய்து சட்டத்தை மீறினார்கள். மற்றும் சில தலைவர்கள் வரிகொடா இயக்கம் நடத்திச் சட்டத்தை மீறினார்கள். நான் சாட்சிச் சட்டத்தில் திருத்தம் கொண்டு வர விரும்பினேன். அதனால் அதை மீறினேன்!" என்றான் முத்து.

வக்கீல் நீதிபதியின் பக்கம் திரும்பி, "கோர்ட்டார் அவர்களே! இவர் பொய்ச் சாட்சியம் சொல்லித் தண்டனையைப் பெற்றிருக்கிறார். ஆனால் அதைத் தம் வாய் மொழியாகக் கூற மறுக்கிறார்!" என்றார்.

"அந்தத் தீர்ப்பின் நகலைத் தாங்கள் தாக்கல் செய்யலாம். மேலே கேளுங்கள்!"—கோர்ட்டார் அவர்கள் உத்தரவு பிறப்பித்தார்கள்.

"முத்து அவர்களே! காலஞ் சென்ற கண்ணையிரத்தைத் தங்களுக்குத் தெரியுமா?"

"என்ன அப்படிக் கேட்டுவிட்டீர்கள், தெரியுமா என்று! நாங்கள் இருவரும் ஓர் உயிர் ஈருடலாக இருந்தவர்களாயிற்றே! அவரைப் பாராமல் எனக்குப் பொழுது போகாது, என்னைப் பாராமல் அவருக்கு இருப்புக் கொள்ளாது!"

"அவருக்கு வயது என்ன இருக்கும்?"

"முப்பதுக்கும் அறுபதுக்கும் இடையிலே இருக்கலாம்!"

"முப்பதுக்கும் அறுபதுக்கும் என்று சொல்லி விட்டால் ஆயிற்று? அவர் வயதானவரா, அல்லது இளைஞரா? அதைத் தெளிவாகச் சொல்லுங்கள்!"

"வயதைக் கொண்டு பார்த்தால், அவர் ஒன்றும் அப்படிக் கிழவர் இல்லை. ஆனால் அடிக்கடி நோய்வாய்ப்பட்டு விட்டதனால் கிழவராகத் தோற்றம் அளித்தார்!"

"தலைமயிர் வெளுப்பா, கறுப்பா?"

"உடல் நலக்குறைவு காரணமாகத் தலைமயிர் வெளுத்துத்தான் விட்டது. ஆனால்

சாயம் பூசும் பொழுதெல்லாம் நல்ல இளைஞராகவே காட்சி அளித்தார்!''

''அவர் உடல் நிறம் சிவப்பா, கறுப்பா?''

''நல்ல சிவப்பு. ஆனால் அடிக்கடி நோய் நொடி தொந்தரவு கொடுத்ததன் காரணமாகக் கொஞ்சம் மாநிறமாகி விட்டார்!''

''உயரமாயிருந்தாரா, குட்டையாயிருந்தாரா?''

''நல்ல உயரம்தான். ஆனால் கூன் விழுந்து விட்டதால் குட்டையாகக் காணப்பட்டார்!''

முத்துவின் இந்தப் பதில் வக்கீலின் ஆத்திரத்தைக் கிளறி விட்டது. ''கேட்ட கேள்விக்குப் பதில் சொல்வீர்களா? ஏதோ சுற்றி வளைத்துப் பேசுகிறீர்களே? இது ஒரு பதிலா? நெட்டையாகவும் இருப்பார், குட்டையாகவும் இருப்பார். சிவப்பாகவும் இருப்பார், கறுப்பாகவும் இருப்பார். தலைமயிர் வெளுத்தும் இருக்கும், கறுத்தும் இருக்கும். இப்படிப் பதில் சொன்னால் ஒருவரை எப்படி ஐயா அடையாளம் கண்டுகொள்ள முடியும்?'' என்று எரிந்து விழுந்தார்.

''ஐயா! கோபித்துக் கொள்ளாதீர்கள். ஒருநாளா, இரண்டுநாளா, நான் பார்த்துப் பழகியது? ஒருநாள் இரண்டு நாள் பழக்கமாயிருந்தால் ஒருவிதமாகச் சொல்லிவிடலாம். வருஷக்கணக்காக இரவும் பகலும் அல்லவா சேர்ந்து வாழ்ந்திருக்கிறோம். நான் எந்த எந்த நிலையில் பார்த்திருக்கிறேனோ, அந்த அந்த நிலையை அப்படி அப்படியே சொல்லி விட்டேன். இதைவிட நான் வேறு என்ன செய்ய முடியும்?'' என்றான் முத்து.

''இனி இப்படியெல்லாம் அநாவசியமாக இல்லாத கதைகள் அளக்க வேண்டாம்! கேட்கிற கேள்விக்கு 'உண்டு, இல்லை!' என்று ஒரே வார்த்தையில் பதில் சொன்னால் போதுமானது?''

''சரிங்க! இனி அப்படியே செய்கிறேன்!''

''கண்ணாயிரத்துக்குத் தாடி மீசை ஏதாவது உண்டா?''

''உண்டு, இல்லை!''

''இதுவும் ஒரு பதிலா?''

'நீங்கள்தானே இப்படிப் பதில் சொல்லணும் என்று சொன்னீர்கள்? சரி, மெய்யாகவே சொல்கிறேன், கேளுங்கள். கண்ணாயிரம் 'வைத்தால் குடுமி, எடுத்தால் மொட்டை' என்ற ரகத்தைச் சேர்ந்தவர். ஒருநாள் தாடி, மீசை எல்லாவற்றையும் எடுத்துவிட்டு வருவார். இன்னொரு நாள் பார்த்தால் தாடியும் மீசையுமாக வந்து நிற்பார். பல பெரியார்கள் ஏககாலத்திலே நம் கண்ணெதிரே காட்சி அளிப்பார்கள். சில சமயம் அப்படி அமைந்து விடும் தாடி, மீசை!''

''ஆமாம். கண்ணாயிரம் அதிகமாக எங்கே இருப்பார்?''

''தம் வீட்டில் இருப்பார்!''

''அட கடவுளே! உங்கள் மூளையே மூளை! நான் என்ன கேட்கிறேன் என்றால், அவர் நகர்ப்புறத்தில் வாழ்ந்தாரா, நாட்டுப்புறத்தில் வாழ்ந்தாரா என்பதுதான்!''

''இரண்டு இடத்திலும்தான் வாழ்ந்தார். எப்பொழுதாவது நகரத்தில் இருப்பார்; எப்பொழுதாவது நாட்டுப்புறத்தில் வந்தும் இருப்பார்!''

''நாட்டுப்புறத்திலே அவருடைய வீடு எந்தப் பக்கம் பார்த்திருக்கும்? நீங்கள் அடிக்கடி அவரோடு நாட்டுப்புறத்துக்குப் போயிருப்பீர்களே!''

''ஆமாம், ஆமாம்! அடிக்கடி அவரோடு நான் நாட்டுப்புறத்துக்குப் போவது உண்டு!''

''அட! எந்தக் கேள்விக்குப் பதில் முக்கியமோ, அதைச் சாப்பிட்டு விட்டீர்களே! நாட்டுப்புறத்துக்கு நீங்கள் அவரோடு போனதை நான் கேட்கவில்லை. அங்கே அவருடைய வீடு எந்தப் பக்கம் பார்த்திருக்கிறது என்று கேட்கிறேன்!''

இதற்குள் முத்துவுக்கு விடை கிடைத்து விட்டது. ''நகர்ப்புறத்தில் இருக்கிறவர்களுக்கு நாட்டுப்புறத்துக்குப் போனால் திசைத் தடுமாற்றம் ஏற்பட்டு விடுகிறது. எது எந்தத் திக்கு என்பது தெரியவில்லை. நான் இத்தனை தடவை போயிருக்கிறேனே! இன்றைக்கும் எனக்குத் திக்கு திசை சரியாகத் தெரியாது!'' என்றான்.

''சரி, அது போகட்டும். அவர் அந்தப் பணம் எதற்காக வாங்கினார்?''

''எதற்கு வாங்குவார்? செலவுக்குத்தான்!''

''அது தெரியும். என்ன செலவு என்று கேட்கிறேன்! அப்படி என்ன அவருக்கு முக்கியமான காரியம், கடன் வாங்கித்தான் செலவு செய்ய வேண்டும் என்று!''

''மனிதனுக்கு ஆயிரம் செலவு. அதிலேயும் அவர் ஒரு விசித்திரப் போக்கு. முக்கியம்-முக்கியம் இல்லை என்கிற பேச்சுக்கே இடம்

இல்லை. எதுவும் அவருக்கு முக்கியம்தான்; எதுவும் முக்கியமில்லைதான். எப்பொழுதும் கையிலே இரண்டாயிரம், மூவாயிரம் புரண்டு கொண்டே இருக்க வேண்டும் என்பது அவருடைய எண்ணம்!''

''எப்பொழுது அவர் பணம் வாங்கினார்?''

''தேவைப்பட்ட பொழுது!''

''அதில்லை. பணம் வாங்கி எத்தனை நாள் ஆயிற்று என்று கேட்கிறேன்!''

''ஒரு வருஷத்துக்கு முந்நூற்று அறுபத்தைந்து நாட்கள். கணக்குப் போட்டுக் கூட்டி எத்தனை நாளாயிற்று என்று சொல்வது கொஞ்சம் கஷ்டம்!''

''நாளைக் கூட்டி யார் சொல்லச் சொல்கிறார்கள்? எத்தனை வருஷமாயிற்று?''

''நோட்டிலே பார்த்தால், தானாகத் தெரியுமே! தேதி போட்டிருக்கிறதல்லவா? எண்ணிப் பார்த்தால், எத்தனை வருஷம் என்கிறது தெரிந்து போகிறது!''

''எதற்கு இந்த வீண் பேச்சு? எனக்கு நினைவு இல்லை என்று சொல்லிவிட்டுப் போங்களேன்!''

''உண்மைதான். எழுதப்படிக்கிறதைவிட்டு எத்தனையோ காலமாகிவிட்டது. அதனாலே கணக்கு எனக்குக்கொஞ்சங்கூட நினைவில்லை.''

''கணக்கு நினைவிருக்கட்டும், நினைவில்லாமல் போகட்டும். அந்தப் பிரச்னையே இங்கே எழவில்லை. நோட்டு எப்பொழுது எழுதினது? எந்தக் காலத்திலே எழுதியது? இது நினைவு இருக்கிறதா, இல்லையா?''

''ஓகோ! எந்தக் காலத்திலே எழுதியது என்று கேட்கிறீர்கள்? எனக்குத் தெரிந்த வரையில், அவர் ஜீவியவந்தராக இருந்த காலத்தில்தான் அந்தக் கடன் வாங்கினார்!''

அவன் சொன்ன பதில்களிலிருந்தே அவனுக்கு வழக்கைப் பற்றி ஒன்றும் தெரியாது. தெரிந்ததாகப் பாவனை செய்கிறான் என்பதை வக்கீல் புரிந்து கொண்டு விட்டார். ஆயினும் ஒரு வேடிக்கை என்னவென்றால், முத்து எந்தக் கேள்விக்கும் பிடி கொடாமல் தன்னைச் சமாளித்துக் கொண்டு வந்தான். ''வழக்கு என்ன, வாதி யார், பிரதிவாதி யார்?'' என்று ஒன்றுமே தெரியாதவன் வெகு சாமர்த்தியமாக வக்கீலையும் ஏமாற்றும் வகையில் பேசுகிறான் என்றால், வக்கீலுக்குக் கோபம் வராமல் என்ன செய்யும்? எப்படியும் அவனை வகையாக மாட்டி வைத்துவிட வேண்டும் என்ற வேகத்தில் அவனை ஒரு கேள்வி கேட்டார். அந்தக் கேள்வி அத்தனை ரகசியத்தையும் அம்பலமாக்கி அவனைக் காட்டிக் கொடுத்து விடும் என்ற நினைப்பு அவருக்கு. ஏனென்றால் கண்ணாயிரம் 'கிறல்' பேர்வழி; கட்டை விரல் அடையாளம் வைக்கும் பேர்வழி.

''முத்து அவர்களே! கண்ணாயிரத்துக்கும் தங்களுக்கும்தான் மிக நெருங்கிய நட்பாயிற்றே! அவரோடு வருஷக் கணக்கில் சேர்ந்து வாழும் வாய்ப்பும் தங்களுக்குக் கிடைத்திருக்கிறதே! அவருடைய எழுத்து தங்களுக்கு நன்றாகத் தெரியும் அல்லவா?''

முத்துவுக்கா பதில் சொல்லத் தெரியாது? ''அதை ஏன் கேட்கிறீர்கள், போங்கள்! அதுதானே அவரிடம் ஒரு விசேஷம்! அதைச் சொல்லி அவர் பெருமைப் பட்டுக் கொள்வார். அவர் எழுத்து ரொம்ப ரொம்ப அழகாக இருக்கும். கண்ணில் ஒற்றிக் கொள்ள வேண்டும். ஆனால் ஒரு விசேஷம் என்னவென்றால், ஒரு தடவை எழுதினாற்போல் இன்னொரு தடவை எழுதமாட்டார். ஒவ்வொரு தடவையும் அவர் எழுத்து ஒவ்வொரு விதமாக இருக்கும். பேனா அவர் சொன்னபடியெல்லாம் ஆடிக்கொண்டிருந்தது என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்! அதுமட்டுமா? சில சமயம் எழுதவே தெரியாதவர் போல நடிப்பார். கட்டை விரல் அடையாளம் வைப்பார்; கிறல் கையெழுத்தும் நாட்டுவார்'' என்று ஒரு போடு போட்டான் அவன்.

வக்கீல் அசந்து போய் விட்டார். 'தோற்றேன், தோற்றேன்!' என்று கூறித் தோல்வியை ஒப்புக் கொண்டு விடலாமா என்றே அவருக்குத்தோன்றிவிட்டது. இரண்டுமணிக்கு ஆரம்பித்த வழக்கு, மணி நான்கை நெருங்கியும் முடிந்தபாடில்லை. நீதிபதி புன்முறுவலுடன் வக்கீலைப் பார்த்து, ''இன்னும் ஏதாவது கேட்க வேண்டுமா?'' என்று கேட்டார்.

''இல்லை!'' என்று சொல்ல வாயைத் திறந்த வக்கீலுக்குத் திடீரென்று ஒன்று தோன்றியது. கடைசி முறையாக ஒரு தடவைதான் முயற்சித்துப் பார்த்து விடுவோமே என்று எண்ணி, ''ஒரே ஒரு கேள்வி கேட்டு என்னுடைய கேள்விகளை முடித்துக் கொள்கிறேன்!'' என்றார்.

வழக்குக்கட்டில் கண்ணாயிரத்தின் நோயைப் பற்றி ஒரு சிறு குறிப்பு காணப்பட்டது. அதை மனத்தில் வைத்துக் கொண்டு, ''முத்து அவர்களே! கண்ணாயிரம் அவர்கள் எந்த நோயினால் இறந்தார்கள் என்று கூற முடியுமா?'' என்று கேட்டார்.

முத்துவுக்கு அழுகையே வந்து விட்டது. ''எல்லாவற்றையும்விடத் துயரம் தரும் விஷயம் என்னவென்றால், அவருக்குச் செய்யாத வைத்தியம் இல்லை. சித்த வைத்தியம், ஆயுர்வேத வைத்தியம், யூனானி வைத்தியம், ஹோமியோபதி வைத்தியம்—இன்னும் என்ன என்ன வைத்தியங்கள் உண்டோ, அத்தனையும் செய்தும் பலன் இல்லை. எந்த வைத்தியனாலும் என்ன வியாதி என்று சொல்ல முடியவில்லை. அவனவன் அவனவனுக்குத் தோன்றியதைச் சொன்னான். கடைசி வரை உண்மை நோய் எது என்றே புலனாகவில்லை. உண்மையைக் கேட்டால் மரணம் என்னும் மாளாப் பிணிதான் அவரைப் பற்றிக் கொண்டுவிட்டது என்று சொல்வேன்!'' என்று கூறி ஒரு முத்தாய்ப்பு வைத்தான்.

மணி நான்கு அடித்தது. கோர்ட்டும் கலைந்தது. மறு நாள் சாட்சிகளை அழைத்து வருவதற்கு வேண்டிய அவகாசம் வேதாசலத்துக்குக் கிடைத்து விட்டது. அன்று முதல் ஒவ்வொருவன் உள்ளத்திலும் ஒரு நம்பிக்கை கூடப் பிறந்து விட்டது.

சாட்சிகள் உண்மை உரைப்பவர்களாக இருப்பதைக் காட்டிலும், புத்திசாலிகளாகவும் கேட்ட கேள்விக்குச் சிறிதும் யோசனைக்கு இடமின்றிச் சட்டென்று பதில் சொல்லக் கூடியவர்களாகவும் இருக்க வேண்டும் என்பதுதான் அந்த நம்பிக்கை.

**(ஆதாரம்: மான்புரியின் உருதுக் கதை)**




வசுமதி ராமசாமி

அன்புடைய சுஜாதா,

பெண்கள் ஒருவருக்கொருவர் ரசமான கடிதம் எழுதுவது எப்படி என்றும், கடிதங்களைப் பத்திரப்படுத்தி வைக்கும் அளவுக்கு அதை உயர்வாக அமைக்கும் நுட்பம் என்னவென்றும் கேட்டிருக்கிறாய்.

சில பெண்கள் கடிதம் எழுதவே சோம்பல் படுகிறார்கள். நேரில் கூட வந்து விடுவார்கள். எழுத என்ன விஷயம் இருக்கிறதென்று எளிதாகச் சொல்லுகிறார்கள். அந்த மனப்பான்மையுள்ள பெண்களுக்கு ரசமாகக் கடிதம் எழுத முடியாது.

நான் அடிக்கடி நினைத்துக் குறைப்படுவதுண்டு. நேருஜி கடிதங்கள், தாகூரின் கடிதங்கள், நமது அரவிந்தர் கடிதங்கள், தமிழ் நாட்டின் தீரர் சத்தியமூர்த்தியின் கடிதங்கள்-இவையெல்லாம் என்றும் அமரத்துவம் பெற்றவை. ஆனால் ஒரு பெண் மேதை எழுதிய கடிதங்கள் ஒன்று மில்லையே என்று நினைத்து ஏங்குவேன்.

பெண்களுக்கு அறிவு ஆற்றல் குறைவில்லை, கலையுணர்ச்சியில் குறைவில்லை. பெண்கள் மனப்பான்மை இன்னும் விசாலமாக இருக்க வேண்டும், அத்துடன் உயர்தர நகைச்சுவை மனப்பான்மையும் ரசமான கடிதங்கள் எழுதுவதற்கு வேண்டும். பெண்களிடையே மிகச் சிறந்த மேதைகள் இருக்கிறார்கள். பிறரை மதித்து அவர்கள் எழுதுவதுதான் குறைவு.

கடிதங்களுக்கு உடனடியாகப் பதில் எழுதும் வழக்கத்தை வளர்த்துக் கொள்ள வேண்டும். இரண்டு நாட்களுக்குப் பிறகு எழுதுவோமேயென நினைத்தால் சோம்பலில் தள்ளிப் போடத் தோன்றும். ஒரு வீட்டில் விருந்தாளியாக இருந்துவிட்டு வருகிறோம். திரும்பியவுடன் எழுதினால் அவர்கள் நம்மிடம் காட்டிய அன்பு பசுமையாக இருக்கும். அந்த உணர்ச்சியில் எழுதப்படும் கடிதங்களும் அழகாக அமையுமல்லவா? ஒரு விசேஷத்துக்குப் போக இயலவில்லையானால் கடிதம் எழுதுவது தான் மரியாதை. எழுதாமல் விட்டுப்போனால் பிறகு அவர்களை நேரில் பார்க்கும்போது திண்டாடித் திகைக்க வேண்டியிருக்கும். அந்தத் திண்டாட்டத்தை மறைப்பதற்காக "நான் கடிதம் எழுதினேனே வந்து சேரவில்லையா?" என்று பொய் சொல்லும் நிர்ப்பந்தம் சிலருக்கு உண்டாகி விடுகிறது.

கடிதம் கவர்ச்சிகரமாக இருக்க வேண்டுமானால் முதலாவது கையெழுத்து ஓரளவு நன்றாக இருக்க வேண்டும். தலையெழுத்து மாதிரி எழுதி விட்டால் விஷயம் எவ்வளவு நன்றாக இருந்தாலும், படிக்கிறவர்களுக்கு விருப்பமிராது. என் தோழி எப்பொழுது கடிதம் எழுதினாலும் ஒரு எண்ணெய்க் காகிதத்தில் கூர்மையற்ற பென்சிலால் எழுதி விடுவாள். ஒரு எழுத்துக் கூடப் பார்க்க முடியாது; படிக்க முடியாது.

தற்பெருமை உள்ளவர்கள் கடிதம் எழுதினால் கடிதம் ரஸமாக அமையாது. நாம் யாருக்குக் கடிதம் எழுதுகிறோமோ அவர்களுடைய சிறப்புகளைக் குறிக்கத் தவறக் கூடாது. அத்துடன் முக்கியமாக இருக்கும் விஷயங்களை நன்றாகப் பிரித்து எழுதுவதுதான் அழகு. ஒரு பாராவில் அவர்களைப் பற்றிய விஷயம் ஒரு வரி, நம்முடைய யோக க்ஷேமம் இன்னொரு வரி, இன்னும் வேண்டாத சமாசாரங்கள் சில வரிகள் — இப்படியாக விஷயத்தைக் குழப்ப வேண்டாம்.

அடுத்தபடியாக நாம் தினம் உட்காருவது எழுந்திருப்பது இத்தனை மணிக்கு, எந்த இடத்துக்குப் போகிறோம் என்றெல்லாம் எழுத வேண்டிய அவசியமில்லை. அந்தக் கால அட்டவணை எல்லாம் கடிதமாகாது. படிப்பவர்களுக்கு அலுப்பாக இருக்கும்.

பொதுவாக, பிறரைப் பற்றி நிந்தனை செய்வது மிகத் தவறு. அதைக் கடிதங்களில் எழுதுவது போன்ற அறிவுக் குறைவான காரியம் வேறு ஒன்றுமில்லை. அந்தமாதிரி கடிதங்களை யாராவது பார்க்க நேரிட்டால் நம்மைப் பற்றிய மதிப்பே குறையும்.

சிலர் குறைந்த வாக்கியங்களில் அநேக ரசமான குறிப்புகளை எழுதுவார்கள். என் உறவினர் பெண் ஒருத்தி வெளி நாட்டில் இருக்கிறாள். அவள் எழுதும் கடிதங்களைப் படிக்கும்போது நேரிலேயே அவளைப் பார்ப்பதுபோல் தோன்றும். நம்மைப் பற்றியும் மற்றும் நம்முடைய இதர உறவினர்கள், சிநேகிதர்கள் எல்லோரையும் பற்றியும் அன்புடன் விசாரித்து எழுதுவதுடன் உலக விஷயம், அந்த நாட்டின் நிலை, தங்களுடைய சொந்தக் குறிப்புகள் - இப்படி எல்லாவற்றையும் கதையாகவே எழுதி வருவாள். ஒவ்வொரு கடிதமும் பூரணத்துவமாக அமைந்திருக்கும். ஓய்ந்த நேரங்களில் அக் கடிதங்களை எடுத்துப் படிக்கத் தோன்றும்.

கடிதம் ரஸமான குறிப்புக்களோடு இலக்கிய மணம் கமழவும் அமைந்து விட்டால் அது படிக்கப்படிக்கத் தெவிட்டாத தேன் அமுதமாயிருக்கும் என்பதில் ஐயமில்லை.

சுஜாதா! கடிதம் எழுதுவது ஒரு அருமையான கலை. பரந்த மனப்பான்மை, சிறந்த அனுபவம் இவைகளெல்லாம் நம் கடிதங்களில் இடம் பெற்றால் வாசிக்கிறவர்களுக்கு இன்பமாக இருக்கும். —இப்படிக்கு,

பூமாதேவி.

---



# காதல் தந்த

அமாவாசை இருளைக் கிழித்துக்கொண்டு பயங்கரச் சத்தத்துடன் சென்று கொண்டிருந்தது கொழும்பு செல்லும் அந்தப் புகை வண்டி. சற்றுத் தூரத்தில் வரிசை வரிசையாக வெளிச்சம் தெரிந்தது. அது பொலன்னறுவை ரயிலடிதான். வண்டி அங்கு நின்றது.

ஜன்னல் வழியாக வெளியே பார்த்தேன். ஸ்டேஷன் காட்சியில் என் மனம் ஈடுபட்டது. வெகு நாட்களுக்கு முன்பு ஒரு தடவை இந்த வண்டியில் பிரயாணம் செய்தேன். அதற்குப் பிறகு இப்பொழுதுதான் பிரயாணம் செய்கிறேன். அதுவும் என் நண்பன் ஒருவனின் காதல் செய்த புண்ணியத்தால்.

சிறிது நேரத்தில் வண்டி புறப்படுவதற்கு அறிகுறியாக விசில் ஊதப்பட்டது.

வண்டி நகரத் தொடங்கியது. வர வர அதன் வேகம் கூடிக்கொண்டிருந்தது. திடீரென்று ஓடிக்கொண்டிருந்த வண்டியின் கதவைத் திறந்து கொண்டு ஒரு ஆசாமி வண்டிக்குள் நுழைந்து கதவைப் பூட்டினான். அவன் உடை கிழிந்து அழுக்கேறிப் போய்க் கந்தையாக இருந்தது. தலைமயிர் எண்ணெயில்லாமல் பரட்டையாக இருந்தது.

வந்தவன் எனக்கு எதிர்ப்புறமிருந்த பெஞ்சியில் வந்து உட்கார்ந்து கொண்டான். நான் முகத்தை வேறுபக்கம் திருப்பிக்கொண்டேன். சிறிது நேரம் மௌனம் நிலவியது. பிறகு தொண்டையைக் கனைத்துக்கொண்டு அந்த மனிதன் பேசினான்.

''நீங்கள் எதுவரையில் போகிறீர்கள் ?''

'' கொழும்புக்கு.''

'' என்ன விஷயத்துக்காகவோ ?''

'' சும்மாத்தான்.''

'' சும்மாவா ?''

'' ஆமாம்.''

''இந்தக் காலத்துப் பிள்ளைகளே இப்படித்தான், தம்பி. சொல்லுகிறது ஒன்று செய்கிறது மற்றொன்று. எல்லோரும் வெறும் வாய்ச் சொல்வீரர்களாக இருக்கிறார்களே தவிரச்செயலில் ஒன்றையும் காணோம்'' என்று அந்த மனிதன் ஒரு போடு போட்டான்.

அவன் பேச்சில் உண்மை இருந்ததால் என்னால் ஒன்றும் பேச முடியவில்லை. ஆனால் அவனுடைய நல்ல அபிப்பிராயத்தைப் பெற விரும்பி ஒரு பொய்யைச் சொன்னேன். ''அப்படி ஒன்றும் இல்லை. எனக்குச் சில மனக் கவலைகள்'' என்றேன்.

''ஏழைகள் படும் கஷ்டங்களுக்கு முன்னால் உங்கள் கஷ்டம் எம்மாத்திரம்? வசதிகள் படைத்தவர்களால் ஏழைகளுக்கு இழைக்கப் படும் அநீதிகள் உங்களுக்குத் தெரியாதா ? விதியின் பெயரால் துயர வாழ்க்கை நடத்தும் ஏழைகளின் சோகக் கதைகள் உங்களுக்குத் தெரியுமா?'' என்று கேட்டான் அவன்.

அவனைத் திருப்தி செய்வதற்காகவாவது அவன் கதையைக் கேட்க வேண்டுமென்று எண்ணி, '' நீங்கள் ஏதோ கணக்கில்லாத கஷ்டங்களை அனுபவித்திருக்கிறீர்கள் போல் தெரிகிறது. உங்கள் கதையை நான் அறிந்து கொள்ளலாமா ?'' என்றேன்.

'' ஓ ! தாராளமாக '' என்று கூறிவிட்டுத் தனது கதையை ஆரம்பித்தான் அவன்.

* ** **

மட்டக்களப்புக்கு அருகில் இருக்கும் கிராமங்களில் காரைத்தீவும் ஒன்று. அந்தக் கிராமத்திலே சின்னையா என்று ஒருவர் இருந்தார். அவர் மட்டக்களப்பு நகரில் உள்ள



கச்சேரியில் சாதாரண குமாஸ்தாவாகவேலைசெய்து கொண்டிருந்தார். மனுஷர் ரொம்பவும் நல்லவர்தான். ஆனால் விதி அவரைச் சோதனைக்குள்ளாக்கிவிட்டது.

சாதாரண குமாஸ்தாக்களின் நிலை உங்களுக்குத் தெரிந்ததுதானே? அதிலும் ஒருவனுக்கு நாலு குழந்தை குட்டிகளும் இருந்து விட்டால் எப்படியிருக்கும்? சின்னையாவின் மனைவி பொன்னம்மாளது திறமையால் குடும்பத்தின் அவல நிலை வெளியே தெரியாமல் காலம் போய்க் கொண்டிருந்தது.

சின்னையாவுக்கு இன்னொரு சிறு உதவியும் இருந்தது.

# செல்வம்

அதாவது அவருடைய தகப்பனார் அவருக்குக் கொடுத்திருந்த நன்செய் பூமி நான்கு ஏக்கர் இருந்தது. அதிலிருந்தும் ஏதோ சில நாட்களுக்குச் சாப்பாட்டுக்காவது உணவு கிடைத்துக் கொண்டிருந்தது. இந்த வசதியினால் சின்னையா தம் பிள்ளைகளைப் படிப்பிக்கவும் முடிந்தது.

அவருடைய மூத்த மகன் சங்கரன் சர்வ கலாசாலை பிரவேச வகுப்பில் படித்துக்கொண்டிருந்தான். அவனுடைய தம்பி கோபாலன் எஸ். எஸ். எல். ஸி. பாஸ் செய்திருந்தான். மற்றவர்கள் உள்ளூர்ப் பாடசாலையில் படித்துக் கொண்டிருந்தார்கள்.

கோபாலன் படிப்பில் கெட்டிக்காரன் என்று பெயர் எடுத்திருந்தான். அதனால் அவன் மேலும் படிக்க விரும்பினான். ஆனால் அவன் தகப்பனாரோ இருவரையும் மேல் படிப்பு படிக்க வைப்பது சிரமமாக இருக்குமென்றும் கோபாலன் ஏதாவது உத்தியோகம் பார்க்க வேண்டுமென்றும் விரும்பினார். கோபாலன் அப்படியானால் தான் ஆசிரியப் பயிற்சிக் கலாசாலையில் பயின்று ஒரு ஆசிரியனாகவாவது வர வேண்டுமென்று கேட்டுக் கொண்டான். சின்னையாவும் அதற்கு ஒப்புக் கொண்டார்.

சின்னையா குடியிருந்த அதே நகரில் செல்லப்பா என்று ஒருவர் இருந்தார். அவருக்கு ஏராளமான வயல்கள் இருந்-

விஜயா.

அன்புமணி

தன. அத்துடன் யுத்த காலத்திலே கொஞ்சம் பணம் சம்பாதித்திருந்தார். அவருடைய ஒரே மகள் எங்கோ வெளியூரில் ஆசிரியையாக இருப்பதாகச் சொல்லிக் கொண்டார்கள்.

செல்லப்பா கொஞ்சம் தடபுடல் பேர்வழி. தம்மைப் பிறர் மதிக்க வேண்டுமென்பதற்காகக் கோயில் விசேஷங்களில் அடிக்கடி பங்கு பற்றித் தம்மைத் தாமே விளம்பரப்படுத்திக் கொள்ளுவார். தாம் அந்த ஊரின் சக்கரவர்த்தி போலவும் அங்குள்ளவர்கள் தமது பிரஜைகள் போலவும் கற்பனை பண்ணிக் கொண்டு நடத்து வந்தார்.

ஆனால் செல்லப்பாவை அந்த ஊர் மக்கள் எவ்வளவு மதித்தாலும் சின்னையா மட்டும் அவரைத் துரும்பாக மதித்து வந்தார்.

சின்னையாவின் நடத்தை செல்லப்பாவுக்கு ஆத்திரத்தை மூட்டியிருந்தது. அத்துடன் அந்த ஊரில் சிலர் சின்னையாவின் படிப்புக்காக அவரை மதித்து வந்தது செல்லப்பாவுடைய உள்ளத்தில் தாங்க முடியாத வேதனையைக் கிளப்பி விட்டிருந்தது.

சின்னையாவை அவமானப்படுத்தித் தம் ஆத்திரத்தைத் தீர்த்துக் கொள்ள அவர் சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். அதுவும் விரைவிலேயே வந்தது. அவரும் சரியானபடி சின்னையாவின் மேல் வஞ்சம் தீர்த்துக் கொண்டார். சின்னையாவை மட்டுமல்லாமல் அவருடைய மகனையும் அதில் சேர்த்துக் கொண்டார்.

தம்முடைய பணத்தினால் எதையும் சாதிக்க முடியும் என்ற தைரியத்தில் செல்லப்பா, சின்னையாவினுடைய நன்செய் பூமி தம்முடையதென்றும், அதில் சின்னையா முறையில்லாமல் விளைச்சல் செய்தாரென்றும் அது சம்பந்தமாகக் கோவிலில் வைத்துச் சாந்தமாக அவரிடம் கேட்டதற்கு அவர் தம்மைத் தாக்கினாரென்றும் வழக்கு போட்டிருந்தார். அதற்கு வேண்டிய பொய் தஸ்தாவேஜுகளெல்லாம் தயாரித்து, அதற்கேற்பப் பிரபல வக்கீல்களையும் அமர்த்தி, கோர்ட்டார் நம்பும்படி செய்து விட்டார். பாவம்! சின்னையாவிடம் அந்தப் பூமி சம்பந்தமாக உயில் ஒன்றும் இருக்கவில்லை.

கோர்ட்டில் செல்லப்பாவுக்குச் சாதகமாகத் தீர்ப்பாகியது. சின்னையா இரண்டாயிரம் ரூபாய் கட்ட வேண்டும் என்று அபராதமும் விதித்தார்கள்.

கோர்ட் கலைந்தது. சின்னையா பிரமை பிடித்தவர்போலிருந்தார். கோர்ட் விவகாரம் அறிந்த சிலர் அவரை ஹை கோர்ட்டுக்கு அப்பீல் பண்ணச் சொன்னார்கள். குடும்பச் செலவுக்கே போதிய பணமில்லாமல் திண்டாடும் அவர் வழக்கு நடத்தப் பணத்துக்கு எங்கே போவார்? ஆயினும் நண்பர்களின் ஆலோசனையின் பேரில் கடனும் உடனும் பட்டு வழக்கை நடத்தினார்.

அவரது வெள்ளை உள்ளத்தில் சிறுகச் சிறுக விஷத்தையும் ஏற்றிக்கொண்டு வழக்கு நடந்தது. கடைசியில் அப்பீல் தள்ளுபடியாகிச் சின்னையாவின் மேல் சுமத்தப்பட்ட குற்றம் உறுதியாகிய பொழுது அவருக்குப் பைத்தியமே பிடித்துவிடும் போலிருந்தது. அப்பீல் செய்ததால் அவருக்குக் கிடைத்த பலன் வீடு, வளவு அடகு வைக்கப்பட்டது தான். இனிமேல் எப்படி அவற்றை மீட்பது?

போதும் போதாததற்கு இன்னொரு பேரிடியும் விழுந்தது. அவருடைய மூத்த புதல்வன் சங்கரன், மேற் படிப்புக்காகக் கொழும்புக்குச் சென்றிருந்தவன், யாரோ ஒரு பெண்ணுடைய மோக வலையில் விழுந்து, படிப்பையெல்லாம் உதறித் தள்ளிவிட்டு, தானும் ஒரு குமாஸ்தாவாகித் திரிகோணமலையிலேயே தங்கி விட்டான்.

சின்னையா தமது குடும்பக் கஷ்டத்தைக் குறைப்பதற்கு அவனையே நம்பியிருந்தார். இந்த நிலையில் சங்கரனுடைய செயல் அவரை எவ்வளவு பாதித்திருக்கும் என்று சொல்ல வேண்டியதில்லை.

தொடர்ந்து இத்தனை கஷ்டங்களும் வந்தபடியால் சின்னையா பைத்தியம் பிடிக்கும் நிலையை அடைந்தார். யந்திரம்போல தம் காரியங்களைச் செய்து கொண்டு இரிந்தார். எதைப் பார்த்தாலும் அவருக்குக் கோபம் கோபமாக வந்தது. தமக்கு இழைக்கப்பட்ட அநீதிக்கு அவர் பழி வாங்கத் துடித்தார். ஆனால் நிதானமாக யோசித்ததில் அந்த எண்ணத்தைக் கைவிட்டார். நியாயமாகப் பார்த்தால் செல்லப்பா மட்டும் அவருக்கு அநீதி இழைக்கவில்லை. நீதி மன்றம், சட்டம், சமூகம் எல்லாமே அவரை வஞ்சித்து விட்டன. யாரைப் பழி வாங்குவது?

துயரத்தின் எல்லைக்கு இழுத்துக் கொண்டு போகப்படும்போது ஒரு மனிதன் என்ன செய்வான், என்ன செய்ய மாட்டான் என்று சொல்ல முடியாது. எப்படிப்பட்டவனுடைய மனமும் கற்பனைக்கு எட்டாத அளவு மாறிப் போய்விடும் அல்லவா?



திடீரென்று ஒரு நாள் சின்னையாவைக் காணவில்லை. மாயமாய் மறைந்து விட்டார். அத்துடன் அவர் வேலை பார்த்து வந்த காரியாலயத்திலிருந்து பத்தாயிரம் ரூபாய் பணமும் மறைந்து விட்டதாகச் செய்தி வந்தது. பணத்தைச் சின்னையா திருடிக் கொண்டு போய் விட்டதாகச் செய்தி அடிபட்டது.

ஆனால் அவருடைய மனைவி பிள்ளைகளுக்கு இது ஒரு பேரதிர்ச்சியாக இருந்தது. அந்த அதிர்ச்சி நீங்குவதற்குள்ளாகவே மற்றொரு பேரிடியும் அவர்கள் மேல் விழுந்தது.

பணத்திருட்டில் கோபாலனும் சம்பந்தப்படுத்தப் பட்டான். அவன் மேல் அக்குற்றம் சுமத்தியதற்குக் காரணம் அவனிடம் அவன் தகப்பனார் அனுப்பிய கடிதம் ஒன்று இருந்ததுதான். எதிர்பார்த்தபடி ஒரு நாள் கோபாலனையும் கைது செய்து விட்டார்கள்.

தன்னுடைய தந்தைக்காகத் தண்டனையைத் தானே ஏற்றுக் கொள்ளவும் கோபாலன் தயாராக இருந்தான். ஆனால் தாயாரை மனத்துயர் அடையாமல் பார்ப்பதற்காகவே அவன் விடுதலையை விரும்பினான்.

மட்டக்களப்புச் சிறையிலுள்ள கைதிகளை வெளி வேலை செய்வதற்காகப் பகல் நேரங்களில் வெளியே கொண்டுபோவார்கள். வயல்களில் வேலைசெய்வது, விறகுபிளப்பது இப்படியாக ஏதாவது ஒரு வேலையில் அவர்களை ஈடுபடுத்தி மாலையானதும் மீண்டும் சிறைக்குக் கொண்டு போவார்கள். இந்தச் சந்தர்ப்பத்தில் கைதிகள் தப்பிச் செல்ல முடியும். ஆனால், அதனால் தங்களுக்கே கேடு என்று அறிந்து அவர்கள் அப்படிச் செய்ய முயற்சி செய்வதில்லை. ஆனால் தாய்ப் பாசத்தினால் உந்தப்பட்ட கோபாலன் இதைப் பற்றிச் சிந்திக்கவில்லை. தப்பி ஓடி விட்டான்.

சிறையிலிருந்து தப்பியதால் அவனும் சின்னையாவைப் போல் மறைந்து வாழவேண்டிய நிலை ஏற்பட்டது.

ஒருவரிடம் போய் இரந்து கேட்பதென்றால் கோபாலனுக்கு உயிர் போய்விடும். தொலை தூரம் தன் ஊரைவிட்டு வந்த பின் ஒருவன் கையில் காசில்லாமல் எப்படி வாழ முடியும்? பசியும் பட்டினியும் கோரத்தாண்டவமாடி அவனை நிலைகுலைய வைத்தன. அப்போதிருந்த நிலைமையில் அவன் வெட்கத்தையும் பொருட்படுத்தாமல் இரண்டொருவரிடம் உதவி கேட்ட பொழுது அவர்கள் அவனைக் கேலி செய்து அவமானப்படுத்தி விட்டார்கள்.

அதிகம் வளர்த்துவானேன்? பசியும், பட்டினியும் வாழ்க்கையில் ஏற்பட்ட வெறுப்பும் அவனை ஒரு ஜேப்படித் திருடனாக மாற்றி விட்டன. பஸ்ஸிலும், ரயிலிலும் உள்ள பிரயாணிகள் முன்பு பிச்சைக்காரன் போல் நடித்து அவர்களிடம் அகப்பட்டதைச் சுருட்டிக் கொண்டு அவன் காலம் கழித்து வந்தான். இப்பொழுதும் அப்படியேதான் வாழ்ந்து வருகிறான்.

இவ்வாறு கூறி நிறுத்தினான் அந்த மனிதன். எனக்கு நெஞ்சு திக்கென்றது. ஏனெனில் இந்தப் பிச்சைக்காரன்தான் அந்தக் கோபாலனாயிருக்க வேண்டுமென்று நான் எப்போதோ தீர்மானித்து விட்டேன்.



''காரை மோதிக் கொண்டதற்கு என்ன ஐயா என்னைப் பாராட்டி ஆச்சர்யப் படுகிறீர்கள்?''

''ஆமாம்! இவ்வளவு பெரிய மைதானத்திலே ஒரு மரத்தைத் தேடிப் பிடித்து மோதினீர்களே! அதற்குத்தான்!''

---

நான் திரு திரு வென்று விழித்துக்கொண்டிருக்கும்போதே அந்த மனிதன் சொன்னான்:- ''அந்தக் கோபாலன் யாரென்று நினைக்கிறீர்கள்? சாட்சாத் நானே தான். நான்தான் அந்தக் கோபாலன் என்று இதற்குள் நீங்கள் யூகித்திருப்பீர்கள் என்று நினைக்கிறேன். உங்களிடமுள்ள மணி பர்ஸ், சிறிய தோல்பெட்டி எல்லாம் பத்திரமாக இருக்கின்றனவா?'' என்று விஷமமாகக் கேட்டுவிட்டு ''ஹஹ்...ஹஹ்...ஹா...ஹா'' என்று பயங்கரமாகச் சிரித்தான்.

நான் பயத்தினால் நடுங்கியவாறே என்னுடைய பெட்டி படுக்கைகளைப் பார்த்தேன். எல்லாம் சரியாக இருந்தன. ஆ! இங்கேயிருந்த சிறிய தோல் பை எங்கே? பெட்டி படுக்கைகளைப் புரட்டிப் பார்த்தேன். தோல் பையைக் காணவில்லை. பையை முன்பே திருடிவிட்டானா? எப்படித் திருடினான்? எங்கே வைத்திருக்கிறான்?

கால் சட்டைப் பைக்குள் கையைவிட்டேன். மணிபர்ஸைக் காணவில்லை. ஐயையோ! அதையும் ஏற்கனவே திருடி விட்டானா?

அடுத்த ஸ்டேஷன் வரும் வரையில் அவனுடன் சமாதானமாகப் பேசி அவனைத் தந்திரமாகப் போலீஸில் பிடித்துக் கொடுக்க வேண்டியதுதான்.

இப்படி எண்ணிக் கொண்டு திருடுவதால் உள்ள பாவங்களையும் திருட்டுக் கொடுப்பவர்கள் அடையும் மன வேதனையையும் பற்றி அவனிடம் உபன்யாசம் செய்தேன். அவன் கூறிய பதில் என்னைத் தூக்கிவாரிப்போட்டது.

''நான் திருடனில்லை. உண்மைத் திருடன் யாரென்று எனக்குத் தெரியும்.''

அவன் பேச்சில் எனக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. எந்தத் திருடன், தான் திருடினதாக ஒப்புக் கொண்டான்? எனவே அவன்

பேச்சைக் கேட்டு ஆச்சரியப்பட்டவன் போல் நடித்து விட்டு அடுத்த ஸ்டேஷனை எதிர் பார்த்துக் கொண்டிருந்தேன்.

** ** **

**வ**ண்டி நடக்கென்று நின்றது. பெரிய ஆரவாரமாக இருந்தது. வெளியே எட்டிப் பார்த்தேன். அது 'மாகோ' ஸ்டேஷன்தான்.

"வண்டியில் இருந்தபடியே, "போலீஸ்! போலீஸ்!" என்று கத்தினேன்.

அப்போதுதான் எனக்கு ஒரு சந்தேகம் தோன்றியது. போலீஸ் வருவதற்குள் அவன் ஜன்னல் வழியாகக் குதித்து ஓடி விட்டால் என்ன செய்வது? நமக்கல்லவா அசட்டுப் பட்டம் கிடைக்கும்? கடைக்கண்ணால் அவனைத் திரும்பிப் பார்த்தேன். அவன் மலர்ந்த முகத்துடன் சிரித்துக் கொண்டிருந்தான். எனக்கு என்னவோ போல் இருந்தது. இதற்குள் எதிர்பாராத ஒரு சம்பவம் நடந்தது.

"வேண்டாம், வேண்டாம்! போலீஸைக் கூப்பிடாதீர்கள், போலீஸைக் கூப்பிடாதீர்கள்!" என்று ஒரு குரல் கேட்டது. திரும்பிப் பார்த்தேன். கோபாலன்-இனி அந்த மனிதனைக் கோபாலன் என்று அழைக்கலாமல்லவா? — அவன் இன்னமும் சிரித்துக் கொண்டேயிருந்தான். அப்படியானால் அந்தக் குரல் எங்கிருந்து வருகிறது?

நான் இருந்த இடத்துக்குப் பின்புறமிருந்த மற்றொரு சீட்டின் அடியிலிருந்து ஒரு மனிதன் வெளிப்பட்டான். அவன் கையில் என்னுடைய தோல் பையும் மணிபர்ஸும் இருந்தன.

அவன்தான், "போலீஸைக் கூப்பிடாதீர்கள்!" என்று சத்தம் போட்டிருக்கவேண்டும்.

நான் திகைத்து நின்றேன். வந்த மனிதன், "கோபால்! நீகூடத் திருடனாக மாறி விட்டாயா? விதியின் கொடுமையைப் பார். இவ்வளவு கேவலமாக நம்மை ஆக்குவதற்கு நாம் யாருக்கு என்ன தீங்கு செய்தோம்? கோபால்! நீ இனிமேல் திருட வேண்டாம். நானும் திருடவில்லை, மகனே! இனிமேலாவது எங்கேயாவது கண்காணாத இடத்துக்கு ஓடிப் போய் ஏதாவது வேலை செய்து யோக்கியமாக வாழ்க்கையை நடத்து. நான் நேரே போலீஸில் சென்று என்னை ஒப்படைத்து விடுகிறேன்" என்றான்.

கோபாலன் ஒன்றும் பேசாமல் தலைகுனிந்த வண்ணம் நின்று கொண்டிருந்தான். பின்பு என்னைப் பார்த்து, "தம்பி! இதோ இருக்கிறது உன் பொருள்கள். நீங்கள் கோபாலனைப் பற்றி எண்ணியது எவ்வளவு தவறானதென்று தெரிகிறதல்லவா? போலீஸிலிருந்து என்னால் தப்ப முடியும். ஆனால் இன்று நான் அப்படிச் செய்ய விரும்பவில்லை. போலீஸிடம் என்னைப் பிடித்துக் கொடுப்பதற்காக உங்களுக்கு நன்றியே கூறுகிறேன்" என்றான்.

எனக்கு விஷயங்கள் விளங்கிவிட்டன. கோபாலனின் தந்தை எப்படியோ எனக்கு முன் வண்டியில் ஏறி, என் தோல் பையையும் மணிபர்ஸையும் திருடிக் கொண்டு சீட்டுக்கு அடியில் ஒளிந்து கொண்டிருக்கிறார்.

சீட்டுக்கு அடியில் இருந்தபடியே கோபாலனின் கதையை அவரும் கேட்டுக் கொண்டு வந்திருக்கிறார். அவன் கதை அவருக்கு மிகுந்த மனக் கஷ்டத்தைக்கொடுத்திருக்கிறது. தமது மகன் பட்ட கஷ்டங்களைக் கேட்கும் எந்தத் தந்தையும் மனம் வருந்துவது இயல்பேயல்லவா? நான் கோபாலனைப் பார்த்தேன். அவன் மௌனமாக நின்று கொண்டிருந்தான். அவன் கண்களில் நீர் துளித்திருந்தது.

"வருத்தப்படாதே, கோபால்! எத்தனை நாளைக்குத்தான் இந்தக் கேவலமான வாழ்வு வாழ்வது? இன்னும் கொஞ்சம் நாளில் நான் ஒரு புது மனிதனாகி உங்களையெல்லாம் சந்திக்க வருவேன்" என்று கூறினார்.

இதுவரை மௌனமாக இருந்த கோபாலன் கூறினான்: "மன்னிக்க வேண்டும் பெரியவரே! நான் உங்கள் மகன் கோபால் அல்ல. நான் சி. ஐ. டி. சிவானந்தம்! மட்டக்களப்பு கச்சேரியில் நடந்த பணத்திருட்டு சம்பந்தமாக உங்களைப் பிடிப்பதற்கு இந்த வேஷம் போட்டேன். இப்போதுதான் ஏன் இந்த வேஷம் போட்டுக் கொண்டோம் என்று வருத்தமாயிருக்கிறது. பேசாமல் போய்விடலாமா என்று பார்க்கிறேன்."

இதனால் எனக்கு ஏற்பட்ட பேராச்சரியத்தையெல்லாம் தூக்கி அடிப்பதாக இருந்தது சின்னையா கூறிய பதில்.

"அப்படியா? நீ என் மகன் இல்லையா? தம்பி! இதைவிடச் சந்தோஷமான செய்தி வேறு எனக்குக் கிடைக்க முடியாது. என்னை இப்பொழுதே போலீஸில் பிடித்துக்கொடுத்து விடுங்கள். இது தவறினால் திருந்துவதற்கு வேறு சந்தர்ப்பம் கிடைப்பது துர்லபம்!"

இப்படி அவர் சொல்லி முடித்தாரோ இல்லையோ, எங்கள் வண்டியை நோக்கி ஒரு போலீஸ் இன்ஸ்பெக்டரும் இரண்டு கான்ஸ்டேபிள்களும் வந்து கொண்டிருந்தார்கள்.

அவர்கள் நேரே நாங்கள் இருந்த வண்டியில் ஏறி சி. ஐ. டி.யை ஒரு தடவை பார்த்து விட்டுச் சின்னையாவைப் பிடித்துக்கொண்டு போனார்கள்.

இதுவரையில் நடந்த சம்பவங்களினால் திகைத்து வாயடைத்து நின்ற நான் ஒருவாறு சமாளித்துக் கொண்டு சி. ஐ. டி.யைப் பார்த்து, "ஸார், உங்கள் திறமையே திறமை. எவ்வளவு சாதுரியமாக அவரே வலிய வந்து குற்றத்தை ஒப்புக் கொள்ளச் செய்து விட்டீர்கள். நல்ல வேளையாக இடையில் யாரும் ஏறிக் காரியத்தைக் கெடுத்து விடவில்லை" என்றேன்.

சி. ஐ. டி. யோசனையில் ஆழ்ந்தவாறே 'ஊம்' கொட்டினார்.

நல்லவேளையாக நான் ஒரு தவறைச் செய்யாமல் விட்டேன். கதை சொல்லி வந்தவன் கோபாலன் என்றும் ஒளிந்திருந்தவர் சின்னையா என்றும் அறிந்தபொழுது எனது நண்பன் சங்கரன்தான் அவருடைய மூத்த புதல்வன் என்று எனக்கு நிச்சயமாகத் தெரிந்து விட்டது. இதை அவரிடம் சொல்ல வாயெடுத்தேன். அதற்குள் சி. ஐ. டி. சமாசாரம் வந்து குறுக்கிட்டது.

மீண்டும் சி.ஐ.டி.யைப் பார்த்து, "அப்படியானால் நீங்கள் கோபாலனைப்பற்றிக் கூறிய கதை..." என்று திகைப்போடு வினவினேன்.

"அதெல்லாம் வெறும் கதை. கோபாலனைக் கைது செய்யவுமில்லை. சிறையில் அடைக்கவும் இல்லை. அவையெல்லாம் கற்பனை. சின்னையா

எங்கள் புதிய தயாரிப்பு

உகந்த முறையில் உன்னத சுகந்தம்

**TSR**

# கோகுல் மாலா பத்திகள்




## டி.எஸ்.ஆர் & கம்பெனி, கும்பகோணம்.

சென்னை நகருக்கு டிஸ்ட்ரிப்யூட்டர்கள்: சுராஜ் ஏஜன்ஸீஸ், 18, ராயப்பேட்டை ஹைரோடு. கோயமுத்தூர் பாலக்காடு, நீலகிரிக்கு சோல் ஏஜண்டு: B. பாலபட்டாபி (ஸ்தாபிதம் 1932) வைசியாள் தெரு, கோயமுத்தூர். மதுரை ஏஜண்டு: மெஸர்ஸ் மீனாக்ஷி என்டர் பிரைஸஸ், 4, கூட்ஸ் ஷெட் தெரு, மதுரை

---

# பாதத்திலுள்ள புண்கள் நான்கு நாட்களிலேயே குணமாகின்றன

### குத்து வலியும் நமைச்சலும் 7 நிமிஷங்களில் நிறுத்தப்படுகிறது

வெடிப்பு தரும்படி பாதங்களில் அரிப்பு ஏற்படுகிறதா. பாதங்களில் ஏற்படும் வெடிப்பு களினால் தோல் உரிகிறதா. பாதங்களிலும், கால் விரல்களுக்கு இடையிலும் கொப்ப ளங்கள் உண்டாகி, அவைகள் உடைவதினால் வரும் அசுத்த நீரினால் புதிய கொப்பளங்கள் உண்டாகின்றனவா. பாதங்களின் புண்களி லிருந்து ரத்தக் கசிவு ஏற்படுகிறதா. இந்த உபாதைகளுக்கு மூலகாரணம் சருமத்திலுள்ள வியாதிக் கிருமிகளே. அவைகளை அடியோடு அழிக்காவிடில் உபாதைகளினின்று விடுதலை யடைய முடியாது.

சாதாரண களிம்புகளும், தைலங்களும் அதிக பலனை அளிப்பதில்லை. ஏனெனில் அவை உபாதைக்கு மூல காரணத்தை அழிப்பதில்லை. அதிர்ஷ்ட வசமாக இந்த உபாதைகளிலிருந்து விடுதலையடைய, ஒரு பிரபல ஆங்கில சரும வைத்திய நிபுணரால் கண்டுபிடிக்கப்பட்ட நிக்ஸோடெர்ம் (Nixoderm) உள்ளது. இது மூன்று நிச்சயமான வழிகளில் குணமளிக் கிறது. (1) பாதங்களில் உபாதைக்குக் காரணமான கிருமிகளை அழிக்கிறது. (2) ஏழுநிமிஷத்தில் நமைச்சலைத் தடுத்து, சருமத் துக்குக் குளுமை தருகிறது. (3) சருமத்தைச் சுத்தமாக்கி, பட்டுப்போல் வழவழப்பாகச் செய்கிறது.



### பரிசோதனைக்கு உத்தரவாதம்

மருந்து வியாபாரியிடமிருந்து நிக்ஸோ டெர்ம் (Nixoderm) வாங்கி இன்று இரவு உபயோகித்து, அதன் அற்புத குணங்களை மறு நாள் காலை கவனியுங்கள். நான்கு தினங் களிலேயே உபாதைகளுக்குக் காரணமான வியாதிக் கிருமிகளை அழித்துச் சருமத்தைச் சுத்தமாகவும் ஆரோக்கியமுள்ளதாகவும் செய்கிறது. சரும உபாதைகளிலிருந்து பூரண பலனை அடைந்து திருப்தி பெற, தொடர்ந்து மூன்று நாட்கள் மருந்தை உபயோகிக்கவும். அந்த ஒரு வார முடிவில் உங்களுக்கு முழு திருப்தி ஏற்படாவிடில் அதன் காலி பாக்கெட் டைத் திருப்பி அனுப்பினால் அதன் விலை வாபஸ் செய்யப்படும். அதற்கு அளிக்கப்படும் உத்தரவாதமே உங்களுக்குப் பாதுகாப்பு அளிக்கிறது.

வின் மனத்தைக் கவருவதற்கு இப்படி ஒரு வழி பண்ணினேன்'' என்றார் சி. ஐ. டி.

**வ**ண்டி புறப்பட்டு விட்டது. மறுநாள் நான் வீட்டுக்குச் சென்ற பொழுதும் இந்த ரயில் அனுபவமே என் மனத்தில் திரும்பத் திரும்ப வந்து கொண்டிருந்தது. அதற்குத் தூபும் போட்டது அதற்கு அடுத்த நாள் தினசரியில் வந்த செய்தி. '' கணக்கில் ஏற்பட்ட தவறினால் நேர்ந்த விபரீதம் : — மட்டக்களப்பு கச்சேரி பணத்திருட்டு '' என்ற தலைப்பின் கீழ் சின்னையாவின் பணத் திருட்டைப் பற்றிய செய்தி விவரமாக வெளியிடப்பட்டிருந்தது.

அதிலும் ஒரு வேடிக்கை என்னவென்றால், உண்மையில் பணத் திருட்டு நடக்கவேயில்லை யென்றும், கணக்கில் ஏற்பட்ட ஒரு சிறு தவறினாலேயே இவ்வளவு காபராவும் ஏற்பட்டதென்றும் குறிப்பிடப்பட்டிருந்தது. சின்னையா தம் வாக்குமூலத்தில் கணக்கில் தவறு ஏற்பட்டால் தம்மேல் பழி விழுந்து விடுமே என்ற அச்சத்தினால்தான் ஊரைவிட்டு ஓடியதாகக் கூறினராம். அடகு வைக்கப்பட்ட விடு மீட்கப்பட்டது; அவரது மகன் சங்கரனின் பணத்திலிருந்துதான் என்றும் வெளிப்பட்டதாம்.

இந்த விஷயங்களைப் பற்றி நான் யோசித்துக் கொண்டிருக்கும் பொழுது திடுதிப்பென்று என் நண்பன் சங்கரன் வந்து குதித்தான்.



'' பிரிட்டன் மீது இந்தியர்களுக்கு ரொம்பவும் வெறுப்பு ஏற்பட்டிருக்கிறதாமே !''-'' வெறுப்பு அல்ல; அதிருப்தி!'' மேற்கண்ட சம்பாஷணை மார்ச்சுமாதம் 7-ம்தேதி புதுதில்லி ராஜ பவனத்தில் டென்மார்க் தேசப் பிரதம மந்திரிக்குப் பாரத சர்க்கார் அளித்த விருந்துபசாரத்தின் போது டென்மார்க் பிரதம மந்திரிக்கும் ராஜாஜிக்கு மிடையே நடைபெற்றது !

நான் என் வியப்பைச் சமாளித்துக்கொண்டு, ''என்னப்பா சங்கர்? திடீர் விஜயம்? என்ன விசேஷம்?'' என்று கேட்டேன்.

'' எல்லாம் சொல்கிறேன். அவசரப்படாதே'' என்று கூறிவிட்டு எனக்கு முன் ஒரு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டான்.

''அது கிடக்கட்டும். இந்த மட்டக்களப்புக் கச்சேரி பணத் திருட்டில் சம்பந்தப்பட்டவர்களை உனக்குத் தெரியுமா? எனக்கு ஒரு சந்தேகம் !......'' என்று இழுத்தேன்.

''தெரியாமல் என்ன? சின்னையா என் தகப்பனார். கோபாலன் என் தம்பி.''

''அடாடா! நீ தானா அந்த சங்கரன்? நான் சந்தேகித்தது சரிதான். டேய்! நான் உனக்கு ஒரு விஷயம் சொல்லப் போகிறேன். மூர்ச்சை போட்டு விழுந்து விடாதே!'' என்று கூறிவிட்டு அன்று ரயில் பிரயாணத்தில் நான் வந்த வண்டியிலேயே அவன் தந்தை சின்னையா ஒளிந்து கொண்டு வந்ததையும், அதே வண்டியில் சி. ஐ. டி. சிவானந்தம் கோபாலன் போல் நடித்து அவரைப் பிடித்ததையும், அவரிடமிருந்தே இவர்கள் கதையை நான் அறிந்து கொண்டதையும் கூறினேன்.

என்ன ஆச்சரியம்! அவன் மூர்ச்சை போட்டு விழவில்லை. சாவதானமாக, ''எனக்கு ஏற்கனவே தெரியும், அப்பா !'' என்றான்.

'' நல்ல ஆள் அப்பா நீ! தந்தை போலீஸுக்குப் பயந்து மறைந்து வாழ்ந்து கஷ்டப்படுகிறார். தாயாரும் ஆதரவின்றிக் கஷ்டப்படுகிறார்கள். அப்போதெல்லாம் நீ உன் காதல் வாழ்வே பெரிதென்று இருந்து விட்டாயே?'' என்றேன்.

''அதற்கு நான் ஜவாப்தாரியல்ல அப்பா. என் தந்தைதான் காரணம்!''

''என்ன? கொஞ்சம் விவரமாகச் சொல்.''

''ஆமாம். எத்தனையோ தடவை அவரைச் சந்தித்து, திருடப்பட்ட பணத்தை நான் அவர் காரியாலயத்தில் கட்டிவிடுவதாகவும், அவரை ஊருக்கு வரும்படியும் வேண்டினேன். ஆனால் அவரோ ஊர் மக்கள் முகத்தில் இனி விழிக்க முடியாதென்றும், இனிமேல் அங்கு வரமுடியாதென்றும் கூறிவிட்டார். இந்தச் சமயத்தில் காரியாலயத்தின் தலைமைக் குமாஸ்தாவும் 'பணம் திருடப்படவில்லை, அது கணக்கில் ஒரு பிழையினால் ஏற்பட்டது' என்று கூறினார். அதனால் அவர்மேல் பிறப்பித்திருந்த வாரண்டும் ரத்தாகிவிட்டது.

''எங்கள் கண்ணில் படாமல் தந்திரமாகத் தப்பிக் கொண்டிருந்த எங்கள் தந்தையைக் கண்டு பிடித்து அவர் மனத்தை மாற்றி வீட்டுக்கு வரச் செய்வதற்கு ஒரு சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தோம். இப்படி



**பாரத சர்க்கார் கர்நாடக சங்கீதத்தின் வளர்ச்சிக்கெனப் பல திட்டங்கள் வகுத்து அக் கலையில் ஈடுபட்டவர்களை மேலும் உற்சாகப் படுத்தி வருகிறார்கள். வயலின் வாசிப்பதில் தேர்ச்சி பெற்ற குமாரி டி. ருக்மணி பி.எஸ்ஸி. அவர்களுக்கு இக்கலையில் இன்னும் பயிற்சி பெற இரண்டு ஆண்டுகள் உபகாரச் சம்பளம் வழங்க முடிவு செய்திருக்கிறார்கள்.**

யிருக்கையில் அன்று அவர் மட்டக்களப்பு—கொழும்பு மாலை வண்டிக்கு டிக்கட் எடுத்திருப்பதாக ஸ்டேஷனில் வேலை பார்க்கும் என் நண்பன் ஒருவனிடமிருந்து செய்தி கிடைத்தது. உடனே எனக்கு அவர் மனத்தை மாற்ற யோசனை தோன்றியது. எனவே அதற்கு வேண்டிய ஆயத்தங்களுடன் நான் ஸ்டேஷனுக்கு வந்தேன். என் தந்தை ஏறியதாக ஒரு பெட்டியை என் நண்பன் சுட்டிக் காட்டினன். ஆனல் உள்ளே பார்த்தபோது அவரைக் காணவில்லை. அவர் உள்ளே பதுங்கியிருக்கிறார் என்பதும் அதில் ஏறும் பிரயாணிகள் இருட்டுக் கொடுக்கப் போகிறார்கள் என்பதும் எனக்குத் தெரியும்.''

''அது சரி. அதற்கு இவ்வளவு சிரமம் எதற்கு? அவர் மேல்தான் குற்றமில்லையே!''

''சரிதான். அன்றையச் சம்பவம் நிகழா விட்டால் அவர் மனத்தையும் மாற்றியிருக்க முடியாதே! மாகோ ஸ்டேஷனில் எப்படி அவர் திடீரென்று ஞானிபோல் பேசினர் என்பது தெரியுமல்லவா?''

''தெரிகிறது. தெரிகிறது. அப்படியானல் வாரண்ட் ரத்துச் செய்யப்பட்டிருக்கும்போது போலீசார் எப்படி அவரைக் கைது செய்து கொண்டுபோக முடியும்?''

''அவரைக் கைது செய்த பின்புதானே கச்சேரியிலிருந்து போலீஸுக்குச் செய்தி கிடைத்து அவர் விடுதலை செய்யப்பட்டார்!''

''சரிதான். இந்த வேலைக்கு சி. ஐ. டி. சிவானந்தமும் இணங்கியிருக்கிறாரே என்பதை நினைக்கும்போது ஆச்சரியமாயிருக்கிறது.''

''அதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. ஏனென்றால் சின்னையாவுக்கும் அவருக்கும் நெருங்கிய தொடர்பு இருக்கிறது.''

''என்ன? என்ன? அது எப்படி?''

''இப்பொழுது நீ மூர்ச்சை போட்டு விழாமல் இருக்க வேண்டும். நான்தான் அந்த சி. ஐ. டி.'' என்றான் சங்கரன்.

இப்பொழுது ஆச்சரியம் என்னவென்றால் நான் மூர்ச்சை போடாமல் இருந்ததுதான்!

''பலே ஆளடா நீ! சாமர்த்தியமாகக் காரியத்தைச் சாதித்துவிட்டாய். அது சரி, அப்புறம் பொய் வழக்குப் போட்ட செல்லப்பா மீது ஒரு நடவடிக்கையும் எடுக்கவில்லையா?''

''அதற்கென்ன செய்வது? அவர் அப்படிச் செய்தார் என்பதற்காக நாமும் அவருக்கெதிராக ஒரு பொய் வழக்கு போட்டுவிடுவதா?''

''ஏன் கூடாது?''

''ஒரு மனிதன் எப்போதும் தவறு செய்வதில்லை. என்றாவது ஒரு நாள் தன் தவறுகளை உணர்ந்ததும் திருந்தி விடுகிறான்.''

''வீண் வேதாந்தம் பேசாதே. அவர் திருந்திவிட்டார் என்று எப்படித் தெரியும்?''

''என் தந்தையின் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்.''

''உண்மையாகவா? அப்படியானல் உங்களுடைய நிலத்தை நீங்கள் திரும்பி எடுத்துக் கொண்டீர்களா?''

''அதுதானே முடியாது!''

''ஏன்?''

''ஏனென்றால் அவர் எங்கள் நிலத்தை மட்டுமல்லாமல் அவர் நிலத்தையுங்கூட அல்லவா எங்களுக்கு எழுதிக் கொடுத்து விட்டார்?''

''என்னப்பா இது? ரொம்ப ஆச்சரியமாயிருக்கிறதே! தம்முடைய நிலம் முழுவதையுமே எப்படிக் கொடுத்தார்?''

''ஏன் கொடுக்க மாட்டார்? தம்முடைய ஒரே மகளுக்கு மாப்பிள்ளையாக வாய்த்த பாக்கியசாலிக்கு அவர் தம்முடைய ஆஸ்தி முழுவதையுமே கொடுத்திருந்தாலும் ஆச்சரியப் படுவதற்கு என்ன இருக்கிறது.''

''என்ன? என்ன? என்ன?''

''ஆமாம், நான்தான் அவருடைய மருமகன்! என்னுடைய சகதர்மிணிதான் அவருடைய அருமைப் புதல்வி கமலா!''

மீண்டும் பிரமை நீங்கிப் பேசும் சக்தி பெறுவதற்கு எனக்குஇரண்டுநிமிஷங்கள்பிடித்தன.

''அதுதானே பார்த்தேன், ஏதடா திடீரென்று சி. ஐ. டி. வாயிலிருந்து வேதாந்தம் பிறக்கிறது என்று. அது சரி, இதற்குச் செல்லப்பா எப்படிச் சம்மதித்தார்? சின்னையா எப்படிச் சம்மதித்தார்?''

''அதற்கென்ன செய்வது? இதுதான் எற்கெனவே முடிந்துபோன விஷயமாயிற்றே; தவிரவும், யாரோ ஜோசியர் ஒருவர் செல்லப்பாவிடம் கமலாவுக்கு விவாகம் ஆகிவிட்டால் தகப்பனுக்கு எதிர்பாராத ஆபத்துக்கள் வரும் என்று பயமுறுத்தியிருந்தார். அவரும் அதை உண்மை என்று நம்பி அவளை வெறுக்கத் தொடங்கினர். தகப்பனைத் திருப்திப் படுத்துவதற்காகக் கமலா வீட்டை விட்டு வெளியேறினள். பின்பு திருகோண மலையிலுள்ள ராமகிருஷ்ண மிஷன் பள்ளிக்கூடம் ஒன்றில் ஆசிரியையாகச் சேர்ந்தாள். அதிர்ஷ்ட வசமாக நான் அவளைச் சந்தித்தேன். அதுடன் எங்கள் உள்ளங்களும் சந்தித்ததால் நான் அவளை மனைவியாக அடையும் பாக்கியம் பெற்றேன். நாங்கள் மட்டக்களப்புக்கு வந்தோம். செல்லப்பா விஷயத்தை அறிந்ததும் முதலில் திகைத்தாலும் பிறகு ஆனந்தக் கடலில் மூழ்கினர். ஜோசியர் சொன்னபடி ஆபத்துக்கள் ஒன்றும் வராமல் நான் காப்பாற்றி விட்டேனல்லவா?''

''இப்பொழுதுதான் செல்லப்பா நல்லவரானதின் காரணம் புரிகிறது'' என்றேன்.

# குட்டிக் கதை

## பாலர் மலர்







### விலை உயர்ந்த மோதிரம்!

தமிழ் நாட்டு அரசன் ஒருவனிடம் ஒரு வைர வியாபாரி ஒரு அபூர்வக் கல் பதிக்கப்பட்ட மோதிரம் ஒன்றை எடுத்து வந்தான். மோதிரத்தை அரசனிடம் கொடுத்து அதற்குத் தகுந்த மதிப்புப் போடும்படி சொன்னான். அரசன் அதை வாங்கி அதனுடைய பிரகாசத்தையும் பளபளப்பையும் பார்த்துச் சிறிது நேரம் திகைத்து விட்டான். மந்திரிகளை அழைத்து அதற்கு மதிப்பிடச் சொன்னான் அரசன்.

மந்திரிகள் அனைவரும், "மோதிரக் கல் அபாரம், விலை மதிப்பில்லாதது. அதற்கு எவ்வளவு வேண்டுமானாலும் கொடுக்கலாம்" என்று பலவாறு பாராட்டிச் சொன்னார்கள். அரசன் அவர்களிடமிருந்து அந்த மோதிரத்தை வாங்கி ஒரு பாத்திரத்தில் உள்ள தண்ணீரில் போட்டுச் சிறிது நேரம் கழித்து எடுத்தான். என்ன ஆச்சரியம்! மோதிரத்திலுள்ள கல்லைக் காணவில்லை! தண்ணீரில் கரைந்து விட்டது.

அரசன், "பார்த்தீர்களா! மோதிரத்திலிருந்தது கல் அல்ல, கற்கண்டு. அதை வெகு சாதுர்யமாக வெட்டித் தேய்த்து மெருகிட்டு மோதிரத்தில் பதித்திருக்கிறார்கள்" என்றான்.

அதைக் கேட்டு மந்திரிகளும் வியாபாரியும் அசந்தே போனார்கள்.

"ஆமாம்! அது கற்கண்டுக் கட்டி என்பதைத் தாங்கள் எவ்வாறு கண்டு பிடித்தீர்கள்?" என்று மிகுந்த வியப்புடன் அரசனைக் கேட்டார் அங்கிருந்த மந்திரிகளில் ஒருவர்.

"நான் மோதிரத்தைப் பரிசோதனைசெய்ய எடுத்த போது ஒரு ஈ அடிக்கடி கல்லைச் சுற்றி வட்டமிட்டு அதன் மீது உட்கார்ந்தது. அதிலிருந்து சந்தேகப்பட்டுத் தான் தண்ணீரில் மோதிரத்தைப் போட்டேன்!" என்றார் அரசர். அதைக் கேட்டு எல்லோரும் மூக்கின் மேல் விரலை வைத்து அதிசயித்து நின்றனர்!



ஒட்டுப் படம் செய்வதற்கு உங்களுக்குத் தெரியுமா? ஒரு வெள்ளைக் காகிதத்தை எடுத்து அதன் ஒரு பக்கத்தில் கொஞ்சம் மெழுகு வர்த்தியின் பின் பக்கத்தால் நன்றாகத் தேய்த்து விடுங்கள். தேய்த்த பக்கத்தின் பேரில் நமக்கு வேண்டிய படத்தை வைத்து, படத்தின் பின் பக்கத்தில் ஒரு கூழாங்கல்லை வைத்துத் தேய்த்தால் நமக்கு வேண்டிய படம் அந்த மெழுகு தடவிய பக்கத்தில் பதிந்து விடுவதைக் காணலாம்.



உபாத்தியாயர் :— பொய் சொல்லிக் கொண்டிருக்கிறீர்கள்? இது என்ன காலம்? சொல், பார்க்கலாம்!

பையன் :— தேர்தல் காலம், சார்!



# மிருங்காவதி

## சித்திரத் தொடர்கதை

10

1) பொழுது விடிந்தபின் தேவிதத்தன் எப்படியோ ஒருவிதமாக இளவரசி இருந்த இடத்துக்கே வந்து சேர்ந்தான். அவன் குதிரை அங்கே இறந்து கிடந்தது. ஆனால் இளவரசியை அங்கே காணவில்லை. அவனுக்குத் திக்கென்றது. மறுபடியும் இளவரசிக்கு ஆபத்தா?



2) இந்தப் பக்கத்திலேயே எங்கே யாவது போயிருக்கலாம் என்ற எண்ணம் ஏற்படவே, தனது வாளை மரத்தின் அடியில் வைத்துவிட்டு அதன் உச்சியில் ஏறி நாற்புறமும் ஒருமுறை சுற்றிப் பார்த்தான்.



3) அப்பொழுது அவ்வழியே வந்த மலைப் பளிஞன் ஒருவன் மரத்தின் அடியில் கிடக்கும் வாளை எடுத்துக்கொண்டான். அதைக் கண்ட தேவிதத்தனுக்கு உயிரே போய்விடும் போலாகிவிட்டது.



4) கீழே இறங்கிவந்து அவனோடு பேச்சுக் கொடுத்துத் தன் வாளைத் திரும்பப் பெற எண்ணினான்.

5)




6) பளிஞன் தேவிதத்தனைத் தலையிலிருந்து கால்வரை வியப்போடு ஒருமுறை ஏறஇறங்கப் பார்த்தான். பிறகு ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவனாகக் கூறினான்.




சரி. இந்த வாள் என்னுடையது.
என்னோடு கிராமத்துக்கு வா. தருகிறேன்!


(10) கிராமத்துக்குச் சென்றதும் பரிஜன் தேவதத்தனை உபசரித்துப் பானம் பருகக் கொடுத்தான். அதைப் பருகிய சிறிது நேரத்துக்கெல்லாம் தேவிதத்தன் தூங்கி வழியலானான். பரிஜன் அவனுக்குப் பருகக் கொடுத்து உறங்கச் செய்தான்.


(11) தூங்கி விழித்துப் பார்த்தபொழுது தேவிதத்தனது கைகளிலும் கால்களிலும் விலங்குகள் மாட்டப்பட்டிருந்தன. தனக்கு நேர்ந்த ஆபத்தைக் காட்டிலும் மிருங்காவதியின் நினைவுதான் அவனை வாட்டியது. அவள் என்ன ஆனாளோ என்று ஏங்கினான். அவனுக்குத் தன்னை விடுவித்துக் கொள்ளும் வகை தெரியவில்லை.


(12) சிறையில் அடைபட்டிருந்த போதிலும் அவனுக்கு நல்ல நல்ல உடைகள் கொடுக்கப்பட்டு வந்தன. அவனுக்கு உணவு கொண்டு வரும் வனமாலை என்ற பணிப்பெண் அவன் மீது இரக்கம் கொண்டு கூறினாள்.
(13) ஐயா! நீங்கள் உங்களை யறியாமலேயே மரணத்தை நெருங்கிக் கொண்டிருக்கிறீர்கள்!
என்ன, அப்படிச் (14) சொல்லிவிட்டாய்?


(15) ஆம். எங்கள் தளபதி அவசர காரியமாக வெளியூர் சென்றிருக்கிறார். அவர் வந்ததும் சண்டிகைக்குப் பூசை போட்டுப் பலியிடுவதாகத் திட்டம்!
வனமாலை
ஆ! என் மிருங்காவதி!
(தொடரும்)

# குட்டி யானை

தேனருவி பாயும் திருக்குற்றாலத்து மலையிலே பல அடர்ந்த காடுகள் உண்டு. அந்தக் காடுகளில் யானை கூட்டம் கூட்டமாக வந்து நீர் அருந்தும் காட்சி கண்கொள்ளாக் காட்சியாயிருக்கும். யானைகளைத் தந்திரமாகப் பிடித்து வசப்படுத்தி அவைகளை வேலை வாங்கும் பணியில் ஈடுபட்டிருந்தான் தீரன். அவனுக்கு வீரன் என்று ஒரு மகனும் வள்ளி என்ற ஒரு பெண்ணும் இருந்தனர். வீரனையும் வள்ளியையும் தன் இரு கண்மணிகளைப் போல் காத்து வந்தான் தீரன்.

காட்டில் உயரமான இடத்தில் அவர்கள் மூங்கில் கூரை வேய்ந்த வீட்டில் குடியிருந்தார்கள். துஷ்ட மிருகங்கள் வீட்டைத் தாக்காமலிருக்க வேண்டும் என்பதற்காக வீட்டைச் சுற்றிலும் முள்வேலி எடுத்திருந்தான் தீரன். அது தவிர அவனிடம் 'மும்பா' என்று ஒரு பெரிய யானையும் அதன் குட்டியும் இருந்தன.

வீரனுக்கும் வள்ளிக்கும் குட்டி யானையிடம் அளவற்ற அன்பு. அந்த யானைக் குட்டி குடுகுடுவென்று ஓடிப்பெரிய யானை 'மும்பா' வைச் சுற்றிச் சுற்றி வருவதைப் பார்த்து அவர்களுக்கு ஆனந்தம் நிலை கொள்ளாது. வீரன் எப்பொழுதும் குட்டி யானையின் அருகிலேயே நின்று விளையாடுவான். ஆனால் தன் தங்கை வள்ளி யானைக் குட்டியோடு வந்து விளையாடுவது அவனுக்குப் பிடிக்கவில்லை. ஆம்! அவனுக்குப் பொறாமைக் குணம் கொழுந்து விட்டு எரிந்தது.

ஒருநாள் வீரன் வள்ளியிடம், "இந்தா, வள்ளி! நீ இந்த யானைக் குட்டியின் அருகில் வரக்கூடாது. பெண்கள் யானையோடு விளையாடுவது கூடாது. தெரியுமா?" என்று எச்சரித்தான்.

"அப்படியா! நீ பெரிய ஆண்பிள்ளை சிங்கமானால் பெரிய யானை 'மும்பா' வோடு விளையாடேன், பார்க்கலாம்! யானைக்குட்டியோடு நீ விளையாடலாமா?" என்று ஏளனம் செய்தாள் வள்ளி.

"பெரிய யானை அப்பாவுடையது. அவர் தான் மரங்களைத் தூக்கிச் செல்ல அதைக் கொண்டு போய் விடுவாரே! நான் அதோடு எப்படி விளையாட முடியும்? யானைக்குட்டிதான் எனக்குச் சிநேகிதன். அதோடுதான் நான் விளையாடுவேன்" என்று அடித்துக் கூறினான் வீரன்.

"நானும்தான் அதனோடு விளையாடலாம் என்று அப்பா சொல்லியிருக்கிறாரே!" என்று கூறிக்கொண்டே வள்ளி யானைக்குட்டியின் அருகில் சென்று அதன் முதுகில் தட்டிக் கொடுத்தாள். வீரனுக்குப் பொறாமையினால் ஆத்திரமும் கோபமும் பொங்கி எழுந்தன.

யானைக்குட்டி அழகாக உருண்டு திரண்டு குட்டையான தும்பிக்கையோடு விளங்கியது. பார்க்கப் பார்க்க அதன் அழகு மனத்தையும் கண்ணையும் கவர்ந்தது.

"வீரா! நம்ம யானைக்குட்டிக்கு அழகான பெயர் சூட்டப் போகிறேன். 'அழகன்' என்று வைத்தால் என்ன?" என்று கேட்டுக் கொண்டே, யானைக் குட்டியின் காதருகில் போய், "உன் பெயர் அழகன். உனக்குப் பிடித்திருக்கிறதா?" என்று கூறினாள் வள்ளி.

வீரன் இதைச் சிறிதும் விரும்பவில்லை. தன்னுடைய உடைமைப் பொருளில் மற்றொருத்தி உரிமை கொண்டாடலாமா? அவனுக்குச்





சினத்தினால் கண்கள் சிவந்தன; கோபத்தினால் உதடுகள் துடி துடித்தன.

"அதற்கு நீ ஒன்றும் பெயர் வைக்கவேண்டாம். நீ இனிமேல் அதை 'அழகன்' என்று அழைத்தால் எனக்குக் கெட்ட கோபம் வரும். நம் அப்பா பெரிய யானையின்மீது சவாரி செய்வதுபோல் நான் அதன் மீது ஏறிச் செல்வேன். பிறகு நான்தான் அதற்கு நல்ல பெயர் வைப்பேன்!"

யானைக்குட்டியின் காதுகளில் மொய்க்கும் ஈக்களை விரட்டியபடியே வள்ளி, "அழகா!" என்று பல தடவைகள் கூப்பிட்டாள். அதுதான் யானைக் குட்டிக்குச் சரியான பெயர் என்று வள்ளி கருதினாள். ஆனால் வீரனோ பொறாமையினால் உள்ளம் கொதித்துப் போய் நின்றான்.

வள்ளிக்கு வீரனைப்போல் எப்பொழுதும் யானைக் குட்டியோடு விளையாடுவதற்கு இயலவில்லை. வீட்டு வேலைகளில் தன் தாயாருக்கு வள்ளி ஒத்தாசை செய்ய வேண்டி இருந்தது. தண்ணீர் மொண்டு வந்து கொடுப்பதும், வீட்டை மெழுகுவதும் அவளுக்குத் தாயார் இட்ட பணிகள். ஆனால் வீரனோ சாப்பிடும் நேரம் தவிர, பகல் வேளைகளில் எப்பொழுதும் யானைக் குட்டியோடு குதித்துக் கும்மாளம் அடித்து விளையாடுவான்; அதன் வாலைப் பிடித்து இழுத்து ஓடுவான். வீரனைத் தொடர்ந்து சில சமயம் யானைக்குட்டி ஓடும்.

பெரிய யானை 'மும்பா' அவர்கள் இருவரும் மகிழ்ச்சியோடு விளையாடுவதைக் கண்டு களிக்கும். ஆனால் அடர்ந்த காட்டில் எங்கேயாவது தொலை தூரத்துக்குக் குட்டியானை ஓடிப்போய் விடக் கூடாதென்பதற்காகத் தன் கழுத்திலுள்ள மணியை அசைக்கும். அடுத்த கணம் மணியின் சத்தத்தைக் கேட்டதும், குட்டி யானை விளையாட்டைவிட்டுப்பாய்ந்தோடி தாயின் அருகில் வந்துவிடும்.

வெகுநேரம் வீரன் யானைக் குட்டியோடு பழகியதற்குக் காரணம், தன்னோடு பழகி

விட்டால் குட்டியானை வள்ளியை மறந்து விடும் என்பதற்காகத்தான்! ஆனால் குட்டி யானை மனிதனைப் போல் பாரபட்ச குணம் படைத்ததில்லையே? அது வீரனைப் போல வள்ளியிடம் தன் அன்பைக் காட்டி வந்தது.

ஒரு நாள் மத்தியானம் வீரன் பெரிய யானையோடும் குட்டி யானையோடும் விளையாடும் இடத்துக்கு வள்ளி வந்தாள். வள்ளியைக் கண்டதும் வீரனுக்கு அருவை மிகுந்தது. "நீ எதற்காக நாங்கள் விளையாடுமிடத்துக்கு வந்தாய்? நீ வந்தால் நான் எப்படிக் குட்டியானையைப் பழக்க முடியும்?" என்றான் கோபத்துடன்.

"உன்னை அம்மா சாப்பிட அழைத்து வரச் சொன்னாள். அதற்காக வந்தேன்!" என்று பதிலளித்தாள் வள்ளி.

"எனக்குச் சாப்பாடு வேண்டாம். நான் மரங்களிலுள்ள மாம்பழங்களைப் பறித்துச் சாப்பிட்டுக் கொள்வேன். நீ போய்விடு!"

"சரி! இந்தா அழகா! உனக்கு வாழைப் பழம் கொண்டு வந்திருக்கிறேன். சாப்பிடு!" என்று குட்டி யானையிடம் நெருங்கி அதன் வாயில் கொடுத்தாள் வள்ளி.

"ஏய், வள்ளி! உன்னை 'அழகா' என்று கூப்பிடாதே என்று சொன்னேனே! நீ இனி அப்படி அழைத்தால் யானைக் குட்டியை உன் கண்ணில் படாமல் வேறுஇடத்துக்கு அழைத்துச் சென்று விடுவேன்."

வள்ளி சிரித்துக் கொண்டே பெரிய யானையின் கழுத்திலுள்ள மணியைச் சுட்டிக் காட்டி, "நீ குட்டி யானையை எங்கும் மறைத்து வைக்க முடியாது. மணிச் சத்தத்தைக் கேட்டால் அது ஓடி வந்துவிடும்!" என்றாள்.

வள்ளி வீட்டுக்குப் போய் விட்டாள். ஆனால் வீரனின் மனம் யானையை ஒளித்து வைக்கும் யோசனையில் தீவிரமாக ஈடுபட்டது. கடைசியில் அவன் ஒரு முடிவுக்கு வந்தான். எப்படியாவது யானைக் குட்டியை வள்ளிக்குத் தெரியாமல் பிரித்து வைக்க வேண்டுமென்று. தேங்காய்களைக் கண்டால் யானைக்குப் பிரியம் அதிகமாயிற்றே! அவற்றைக் கொடுத்தால் அது தன்னைப் பின்தொடர்ந்து வரும் என்று எண்ணினான்.

ஒருநாள் அவன் எண்ணம் நிறைவேற வழி கிடைத்தது. அன்று அவன் தகப்பனார் வள்ளியோடு பெரிய யானையில் ஏறி நதிக்கரைக்குக் குளிக்கச் சென்றிருந்தார்.

அன்று மெதுவாக வீரன் யானைக் குட்டியோடு புறப்பட்டு விட்டான் காட்டுக்குள் அதை அவன் அழைத்துச் சென்றான். அடிக்கடி அந்த யானைக்குத் தேங்காய்களைத் தின்பதற்குக்கொடுத்தான். கடைசியில் அவன் அதோடு நதியின் கரைக்கே வந்துவிட்டான். நதியில் இறங்கி யானைக் குட்டியோடு குதித்து விளையாட வேண்டுமென்ற ஆசை அவனுக்கு ஏற்பட்டது. அவனும் நதியில் இறங்கி யானைக் குட்டியையும் தன்னோடு வருமாறு அழைத்தான்.

திடீரென்று தண்ணீரில் மிதந்து வந்த கட்டையைக் கண்டு யானைக்குட்டி பயந்து தண்ணீரில் பாய்ந்தது. அது ஆழத்தில் மூங்கிப் போய்விட்டது. இதைக் கண்டு வீரன் நீந்தி அதைப் பிடிக்கச் சென்றான். ஆற்றில் சுழிப்பும் வேகமும் அதிகமாக இருந்தன. கடைசியில் ஆற்றிலுள்ள வேகத்தினால் அடித்துச் செல்லப்பட்டார்கள். வீரன் பயத்தினால் அலறித் துடித்தான். அவனால் எதிர்த்து நீந்த முடியவில்லை. யானைக்குட்டியும் தாயைக் கதறி அழைத்தது. 'பெரிய யானையின் காதில் அதன் குரல் எட்டிவிடக் கூடாதா!' என்று வேண்டிக் கொண்டான் வீரன். தன் முழு நம்பிக்கையையும் இழந்து நிற்கும்பொழுது தன் அருகில் ஒரு பெரிய உருவம் வருவதைக் கண்டான் அவன்.

ஆம்! அது பெரிய யானை 'மும்'பாவே தான்! அது தன்னுடைய குட்டியானையைத் தன் தும்பிக்கையினால் கட்டி அணைத்துக் கொண்டது. வீரன் யானையின் காதுகளைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான். பெரிய யானை நீந்திக் கரை சேர்ந்தது.

வீரனின் தகப்பனாரும், சகோதரி வள்ளியும் கரையில் கலங்கிப் போய் நின்றார்கள். வீரன் நீண்ட பெருமூச்சு விட்டுக் கொண்டே நடந்தவற்றை விவரித்தான்.

"உன்னுடைய ஆசைக்காக அதற்குத் தேங்காயைக் காட்டிப் பேராபத்தில் சிக்க வைத்து விட்டாய். அதற்கு உணவும் பாதுகாப்பும் அதன் தாயாகிய பெரிய யானைதான் தர இயலும்! வெறும் தேங்காயினால் அந்த யானைக்குட்டியை ஏமாற்றினாய்; அதற்குரிய தண்டனையை அனுபவித்து விட்டாய்!" என்றார் அவர் தந்தை.

வீரன் அவமானத்தினால் தலையைக் குனிந்து கொண்டான். கண்கள் கண்ணீரைப் பெருக்கின. தன்னுடைய சுயநலத்தினால் அந்தச் சிறிய மிருகத்தின் உயிருக்கே ஆபத்து வந்து விட்டதை எண்ணி வருந்தினான்.

பயத்தோடு உடலைச் சிலிர்த்துக் கொண்ட குட்டி யானையை வள்ளி கண்ணீர் பெருக்கியபடி தட்டிக் கொடுத்தாள். வீரன் தன்னைப் போலவே தன் சகோதரியும் குட்டி யானையை விரும்புவதை எண்ணி மகிழ்ந்தான். வள்ளியும் அதனோடு வந்து விளையாட வேண்டும் என்று வீரன் விரும்பினான்.

"யானைக் குட்டியின் பெயர் அழகன் தான். உனக்கு அந்தப் பெயர் தோன்றியதற்கு நன்றி செலுத்துகிறேன்!" என்றான் வீரன். இருவர் உள்ளத்திலும் ஆனந்தம் கரை புரண்டோடியது.

— நண்டுமணி.

# மின்னுவதெல்லாம் பொன்னல்ல!

சிறந்த கடிகாரங்களெல்லாம் கவர்ச்சிகரமாக இருக்கின்றன. ஆனால் கவர்ச்சியுள்ள கடிகாரங்களெல்லாம் சிறந்தவையாக இருப்பதில்லை. உலகில் உபயோகமற்றவைகளை மறைப்பது மிகவும் எளிது. கடிகாரத் தொழிலிலும் இது கையாளப்படுகிறது. சிறந்த வெளிப்புற உறையோடுகூடிய மட்ட ரக கடிகாரத்தில் கவர்ச்சிகரமான மணி பார்க்கும் முகப்பு பதிக்கப்பட்டு, வெளிப்பார்வையில் மயங்கும் மக்களுக்கு விற்கப்படுகிறது. தோற்றம் ஒரு பாகமே என்பது நினைவிருக்கட்டும். கடிகாரத்தின் செயல் தயாரிப்பாளர்களின் அனுபவம், திறமை இவைகள் முக்கியமாக கவனத்தில் வைக்கப்படவேண்டிய விஷயங்கள். ஒரு கௌரவமான கடிகார வியாபாரியின் நேர்மை, அறிவு இவை உங்களுக்குப் பாதுகாப்பு. நீங்கள் கௌரவமான வியாபாரியிடமிருந்து கடிகாரம் வாங்கும்போது நல்ல தோற்றமுள்ளதை வாங்குகிறீர்கள். மேலும் அது வெகுநாட்களுக்கு உங்களுக்கு திருப்தி அளித்து உழைக்கக்கூடிய நம்பகமான கடிகாரமும் கூட. உங்கள் கடிகார வியாபாரியின் அனுபவம் உங்களுக்கு ஆதரவளிக்கிறது.

**ஜுவெல்கள் பொருத்தப்பட்ட ஸ்விஸ்—லிவர் கடிகாரம் ஒரு அவசியமான தேவை பொருளேயன்றி ஆடம்பரத்திற்கல்ல**



**ஸ்விட்ஸர்லாந்து கடிகார தயாரிப்பாளர்கள்**

FH.13 TAM




அத்தியாயம் 5.

## எரிந்த கடிதம்

மறுநாள் காலை ஸ்ரீனிவாசமூர்த்தி சிவசங்கரனின் அறைக்கு வந்தபோது அவர் ஸ்நானம் செய்துவிட்டுப் பத்திரிகையைப் பார்த்துக் கொண்டிருந்தார். அவரைப் பார்த்ததும் ஸ்ரீனிவாசமூர்த்தியின் மனம் சற்று அமைதியடைந்தது. சிவசங்கரன் அவரைப் பார்த்துப் புன்னகையுடன், "குட் மார்னிங்!" என்று சொன்னதும் அவருக்குச் சந்தோஷமளித்தது.

"காப்பி சாப்பிடுவதற்குக் கீழே போகலாமா?" என்று வினயத்துடன் கேட்டார் ஸ்ரீனிவாசமூர்த்தி.

காலைப் பத்திரிகையைக் கட்டிலின் மீது போட்டு விட்டு எழுந்து நின்றார் சிவசங்கரன். பிறகு இருவரும் கீழே இறங்கிச் சென்றார்கள்.

விஸ்தாரமான ஒரு அறையில் மேஜையும் நாற்காலிகளும் ஒழுங்காகப் போடப்பட்டிருந்தன. ஜன்னல்களில் தொங்க விடப்பட்டிருந்த பூப்போட்ட மஞ்சள் நிறமான திரைகள் காற்றில் படபடவென்று அடித்துக் கொண்டன.

சிவசங்கரன், ஸ்ரீனிவாசமூர்த்தி இருவரும் மேஜையின் அருகில் சென்று உட்கார்ந்தார்கள். சுபாஷிணி காப்பியை எடுத்துக் கொண்டு வந்தாள்.

காப்பி சாப்பிடும் வரையில் அங்கு மௌனம் நிலவியது. சிவசங்கரன் கோப்பையை வைத்ததும் சுபாஷிணி தன் கணவரைப் பார்த்து, "காலைப் பத்திரிகைக்கு அருகில் ஒரு கடிதமும் கிடந்தது" என்று கூறினாள்

"என்ன கடிதம்?"

"அந்தக் கடிதத்தில் இவரைப் பற்றி எழுதியிருந்தது."

சிவசங்கரனின் புருவங்கள் ஒருமுறை நெற்றியில் ஏறின

ஸ்ரீனிவாச மூர்த்தி சுபாஷிணியைப் பார்த்து முறைத்தார். அதைக் கவ



யும் கூறிவிடுவதே சரி'' என்று கூறிவிட்டு ஒரு நீண்ட பெரு மூச்சு விட்டார் சிவசங்கரன்.

சுபாஷிணி சட்டென்று எழுந்தாள். ''நான் போகிறேன். நீங்கள் மனம் விட்டுப் பேசுங்கள்'' என்றாள்.

''இல்லை, இல்லை! நீங்கள் கட்டாயம் இருந்து விஷயத்தைக் கேட்க வேண்டும். இல்லாவிட்டால் எனக்கு மன நிம்மதி ஏற்படாது. இந்தக் கடிதத்தினால் உங்கள் மனத்தில் ஏற்பட்ட குழப்பம் நீங்கினால் தான் எனக்குச் சற்று அமைதி உண்டாகும்.''

''அந்தக் கடிதம் என் மனத்



வித்த சிவசங்கரன் ''அதில் என்ன எழுதியிருந்தது என்பதை நானும் தெரிந்து கொள்ள வேண்டியதுதானே, மூர்த்தி! அதை மறைப்பதனால் என்ன லாபம்? நீங்கள் சொல்லுங்கள்'' என்றார்.

''அந்தக் கடிதம் எங்கே?'' என்று கேட்டார் மூர்த்தி.

''அதை அடுப்பில் போட்டு விட்டேன்'' என்றாள் சுபாஷிணி.

''எரித்து விடவேண்டுமென்று தோன்றும்படியாக அப்படி என்ன அந்தக் கடிதத்தில் எழுதியிருந்தது?''

''அவதூறு கூறியிருக்கும் கடிதங்களை வைத்துக கொள்ளலாமா? இவர் ரொம்பப் பொல்லாதவர் என்றும், பெரிய குற்றம் ஒன்றைச் செய்துவிட்டு இங்கே வந்து விட்டார் என்றும், அவரை வீட்டில் வைத்துக் கொண்டிருப்பதால் நமக்கும் பல கஷ்டங்களெல்லாம் உண்டாகுமென்றும் எழுதியிருந்தது.''

''உண்மையாகவா?''

''இதில் அதிசயம் ஒன்றுமில்லை, மூர்த்தி! கடிதத்தில் எழுதியிருப்பது ஒரு அளவுக்கு உண்மைதான். நான் செய்த காரியம் சரியா இல்லையா என்பதைப் பற்றி நானே மிகவும் குழம்பிக் கொண்டிருக்கிறேன். உன்னிடம் சொல்லி யோசனை கேட்க வேண்டும் என்பதற்காகவே இங்கு வந்தேன். ஆனால் அதைக் கூறுவதற்கு எனக்குத் தைரியம் வரவில்லை. அந்த விஷயம் யாருக்குமே தெரியாதென்று நினைத்துக் கொண்டிருந்தேன். இன்னும் இரண்டு பேருக்கு எப்படியோ தெரிந்திருக்கிறது. இவ்வளவு தூரம் விஷயம் உங்களுக்குத் தெரிந்தபிறகு நான் முழுவதை

தில் எந்தவிதக் குழப்பத்தையும் ஏற்படுத்தவில்லை. அதைப்பற்றி நீங்கள் சிறிதும் கவலைப்படவேண்டாம். வக்கீலிடம் கட்சிக்காரர்கள் யோசனை கேட்கும்போது, கூட யாரும் இருக்கக் கூடாது அல்லவா?'' என்று இன்முகத்துடன் கூறினாள் சுபாஷிணி.

''இப்போது நான் சீனிவாசனிடம் வக்கீல் என்ற முறையில் யோசனை கேட்கப் போகவில்லை. நானும் ஒரு மாஜிஸ்திரேட் ஆனபடியால் வக்கீல்களைப் பற்றி அறிந்திருக்கிறேன். அவர்களுடைய கடமையையும் உணர்ந்துகொண்டிருக்கிறேன். ஒரு கட்சிக்காரன் குற்றவாளியாக இருந்தாலும் இல்லா விட்டாலும் அவர்களுக்கு அதைடபற்றி அக்கறை இல்லை. வழக்கை நன்றாகவும், பலமாகவும் ஜோடிக்க வேண்டியது அவர்கள் பொறுப்பு. நீதி வழங்க வேண்டியது வேறொருவர் பொறுப்பு. அதனால் நான் இப்போது சீனிவாசமூர்த்தியையும் உங்களையும் சாதாரண மனிதர்களாக எண்ணிப் பேசுகிறேன். தங்களுடைய வக்கீலிடம் பலர் உண்மையைச் சொல்லாமல் மறைத்துவிடுவார்கள். நான் அவ்வாறு செய்யப் போவதில்லை. என்னுடைய கதை முழுவதையும் கூறிவிடப் போகிறேன். அதற்குச் சாட்சியாக நீங்களும் அவசியம் இங்கே இருக்க வேண்டும்'' என்றார் சிவசங்கரன்.

''நான் இருந்தால் உங்களுக்கு மனம் விட்டுப் பேசக் கூச்சமாக இருக்குமென்றுதான் நினைத்தேன். மற்றப்படி ஆட்சேபணையே கிடையாது. உங்களுடைய கதையைக் கேட்க வேண்டுமென்றுதான் எனக்கும் ஆசை'' என்றாள் சுபாஷிணி.

''ஆமாம்! இந்தக் கடிதம் யாரிடமிருந்து வந்திருக்கும்?'' என்று கேட்டார் சீனிவாசமூர்த்தி.

"எல்லாம் பாலகோபால்தான் எழுதிப் போட்டிருப்பான். வேறு யார் இப்படிச் செய்யப் போகிறார்கள்?"

"அவனுக்கு இதனால் என்ன லாபம்?"

"அதைச் சொல்ல வேண்டுமானால் என் கதையை அடியிலிருந்து சொல்ல வேண்டும். நான் ஆரம்பித்தால் சீக்கிரம் முடிக்க முடியாது. ஆகவே உங்களுக்கு ஏதாவது காரியம் இருந்தால் முடித்துக் கொண்டு வந்துவிடுங்கள்" என்றார் சிவசங்கரன்.

"இந்த விஷயத்தை இங்கே பேசுவது எனக்கு உசிதமாகப்படவில்லை, மாடிக்குப் போய் வராண்டாவில் உட்கார்ந்து பேசலாம் வாருங்கள்" என்று கூறிவிட்டு எழுந்து மாடிப் படி ஏறினார் சீனிவாசமூர்த்தி. சுபாஷிணியும், சிவசங்கரனும் பின்தொடர்ந்தார்கள்.

சீனிவாசமூர்த்தி வேலையாளைக் கூப்பிட்டு, "யார் வந்தாலும் நான் வீட்டுக்குள் இல்லை என்று சொல்லி அனுப்பிவிடு" என்று உத்தரவு போட்டார். அவருக்குச் சிவசங்கரனின் கதையைக் கேட்கும்போது யாரும் நடுவில் வந்து கலைத்துவிடக் கூடாதென்று கவலை.

சிவசங்கரன் தலையைத் தொங்கவிட்டுக் கொண்டு ஒரு ஸோபாவில் உட்கார்ந்திருந்தார். சுபாஷிணியும், சீனிவாசமூர்த்தியும் மிகுந்த ஆவலுடன் அவர் கூறும் ஒவ்வொரு வார்த்தையையும் கவனித்துக் கேட்கத்தயாரானார்கள்.

சிவசங்கரன் சிறிது நேரம் பேசாமல் இருந்தார். மேலேயும், கீழேயும் இரண்டு மூன்று தடவைகள் பார்த்தார்.

பிறகு, "எல்லோரும் கதையை எப்படி ஆரம்பிப்பது என்று தெரியவில்லை என்று சொல்லிக் கொண்டே கதையை ஆரம்பிப்பார்கள். எனக்கு அந்தக் கஷ்டம் இல்லை. கதையை எங்கே ஆரம்பிக்க வேண்டும் என்று எனக்குத் தெரியும். முடிவு தான் எப்படி இருக்கப் போகிறதென்று தெரியவில்லை. விஷயத்தை முழுவதும் சொல்வதற்கு எனக்குப் பயமாகவும் அவமானமாகவும் இருக்கிறது. நான் சொல்வது உங்களுக்கு உண்மை யென்று தோன்றாமல் இருக்கலாம் அல்லவா? அதனால் தான் எனக்குப் பயமாக இருக்கிறது. ஆனால் நான் அதற்காகச் சொல்லாமல் இருக்கப் போவதுமில்லை. நான் சொல்வதையெல்லாம் பொறுமையாகக் கேட்டு அதற்குப்பின் அதைப் பற்றி நீங்கள் அபிப்பிராயம் சொல்ல வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்" என்றார் சிவசங்கரன்.

"உங்களைப் பற்றி எங்கள் அபிப்பிராயம் ஒருநாளும் மாறப் போவதில்லை. நீங்கள் ஏன் இவ்வாறு அநாவசியமாகக் கலக்கமடைகிறீர்கள்?" என்று கேட்டாள் சுபாஷிணி

"அறியாமல் ஒருவன் தவறு செய்துவிட்டால் அதற்கு எத்தனையோ பிராயச்சித்தங்கள் உண்டு என்று கேள்விப்பட்டிருக்கிறேன். நானும் ஒரு மகாபாதகம் செய்துவிட்டேன். அது நிவர்த்திக்க முடியாத பாபமாக இருப்பதால் எனக்கு மன அமைதியே குலைந்து போய் விட்டது. என் நிலை மிகவும் பரிதாபகரமானது. நான் வேண்டுமென்று குற்றம் செய்யவில்லை. அசந்தர்ப்பமாக நேர்ந்துவிட்டது. ஆனால் அதை நான் நிரூபிக்க முடியாது. சந்தர்ப்பங்கள் எல்லாம் எனக்கு விரோதமாக இருக்கின்றன. உங்களிடம்தான் நான் உண்மையைச் சொல்ல முடியும். ஆகவே அடியிலிருந்து ஆரம்பிக்கிறேன்" என்று கூறி விட்டுத் தம்முடைய கதையை ஆரம்பித்தார் சிவசங்கரன்.

## அத்தியாயம் 6.

# மாதவிக் கொடி

சிவசங்கரன் விளையாட்டுக்களில் மிகவும் ஆசை உள்ளவர். சிறு வயதிலேயே மூங்கிலினால் வில்லும், பிரம்பினால் அம்பும் தாமாகவே செய்து வைத்துக் கொண்டு குறி பார்த்து எய்யக் கற்றுக் கொண்டார். பிறகு 'உண்டி வில்' எறியப் பழக்கம் செய்து கொண்டார். இரண்டாகப் பிரியும் எந்தக் குச்சியைப் பார்த்தாலும் அதில் ஒரு ரப்பரைக் கட்டி "காடா புல்ட்" செய்து விடுவார். பன்னிரண்டு வயதிலேயே குறி தவறாமல் எய்வதில் மிகவும் கெட்டிக்காரர் என்று பெயர் வாங்கினார். மாங்காய் அடிப்பதோ, புளியங்காய் அடிப்பதோ, விளாம்பழம் பறிப்பதோ எதுவும் சிவசங்கரன் இல்லாமல் நடைபெறாது.

கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த போது, கல்லூரி மாணவர்களுக்கு அளிக்கப்படும் ராணுவப் பயிற்சியாகிய யூ. டி. ஸி. யில் சேர்ந்திருந்தார். அப்போது பெரிய துப்பாக்கியால் சுடப் பழக்கம் உண்டாயிற்று.

அவர் யூ. டி. ஸி. யிலிருந்து விலகிய பிறகு தம்முடைய திறமை இப்படி



உங்கள் குழந்தைக்கு டுமெக்ஸ்
கொடுக்கும்பொழுது அவன் வளர்ச்சி
யைப்பற்றி கவலைப்பட வேண்
டியதில்லை. மிகவும் நேர்த்தியானதும்,
புதுமை கெடாமலும், நிறைய விட
மின் அடங்கியுள்ள இந்தப் பால் உணவு
காற்றும் புகாமல் சீலிடப்பட்ட
டின்களில் கிடைக்கின்றன.
ஆகவே குழந்தைகளுக்குச் சிறந்ததும்,
பாதுகாப்பு அளிக்கும்
பால் உணவு டுமெக்ஸைக் காட்டிலும்
வேறொன்றும் இல்லை.



உங்கள் குழந்தைகளுக்கு

# டுமெக்ஸ்

பால் உணவைக்

கொடுத்து அவர்களின் வளர்ச்சியைக் கவனியுங்கள்

மங்கிப் போகிறதே என்று வருத்தப் பட்டார். ஆயிரத்தில் ஒருவருக்கே இருக்கக்கூடிய திறமை தம்மிடம் இருந்தும் அதைப் பயன்படுத்தாமலிருப்பது அவருக்கு வேதனையாக இருந்தது.

வேலையில் சேர்ந்த பிறகு ஒருநாள் ஆங்கில சினிமா பார்க்கச் சென்றிருந்தார். அதில் முதலில் ஒரு ''டாகுமென்டரி'' படம் வந்தது. வேட்டையாடும் முறைகளைப் பற்றியும், வேட்டையாடுவதால் விளையக் கூடிய நன்மைகளைப் பற்றியும் அதில் காட்டியிருந்தார்கள். அதுமுதல் சிவசங்கரனுக்குத் தம்முடைய திறமை மங்கிப் போகாமலிருப்பதற்கு வேட்டையாடுவதுதான் சிறந்த வழி என்று தோன்றி விட்டது.

அதிர்ஷ்டவசமாக, அப்போது அவர் இருந்த இடமும் காட்டுப் பிரதேசமாக இருந்தது. ஆகவே நினைத்ததை உடனே செய்ய அவரால் முடிந்தது. மறுநாளே சில நண்பர்களுடன் சேர்ந்து வேட்டையாடச் சென்றார். முதல் நாள் எதுவுமே அவர் கையில் சிக்கவில்லை. ஆனால் அவர் உறுதி இழந்து விடவில்லை. காடுகளில் சஞ்சரிப்பது நல்ல பொழுது போக்காக இருந்தது.

மரத்தில் பொருத்தியிருக்கும் குறியில் சுடுவதற்கும், காட்டில் ஓடும் மிருகங்களை வேட்டையாடுவதற்கும் எத்தனையோ வித்தியாசம் இருக்கிறதென்பதை அனுபவத்தில் அறிந்து கொண்டார் சிவசங்கரன். அதிலும் அவர் சீக்கிரம் தேர்ச்சி பெற்று விட்டார்.

முதலில் பொழுது போவதற்காகவும், தம் திறமையை இழந்து விடாமலிருப்பதற்காகவும் வேட்டையாடத் தொடங்கியவர், இரண்டு வருடங்களுக்குப்பிறகு அதைக் குறைத்துக் கொண்டார். எங்கேயாவது கிராமத்தில் 'புலி வந்தது', 'சிறுத்தை கன்றுக் குட்டியைத் தூக்கிக் கொண்டு போய் விட்டது' என்றுசெய்திவரும். உடனேவேட்டைத் துப்பாக்கி சகிதம் கிளம்பி விடுவார் சிவசங்கரன். அவர் இருந்த பிரதேசத்தைச் சுற்றிக் காடு இருந்தது. காட்டின் ஓரமாகப் பல கிராமங்கள் இருந்தன. ஒரு வாரத்துக்கு ஒரு முறையாவது இத்தமாதிரி ஏதாவது ஒரு செய்தி வரும். அப்போதெல்லாம் அவருக்குப் பெருமிதம் பொங்கும். தம்முடைய திறமையால் கிராமாந்திரத்து மக்களையெல்லாம் பாதுகாப்பதாக எண்ணிக் கொண்டு சந்தோஷப்படுவார்.

இவ்வாறு வேட்டையில் புலி என்று கிராமத்து ஜனங்களிடம் பெயர் வாங்கினார். அவரிடம் பொறாமை கொண்ட சிலர் ''இவர் இப்படிக் கவலை இல்லாமல் காட்டில் திரிந்தால் ஒருநாள் இவரையே புலி வேட்டையாடி விடும்'' என்று சொல்லிக் கொள்வார்கள்.

அவர் விவாகம் செய்து கொள்ளாமல் இருந்தபடியால் சிலர் ''மனிதனுக்கு ஒரு கால்கட்டு இருந்தால் இப்படிக்காட்டில் அலைந்துதிரிவானா?'' என்றும்பேசிக் கொள்வார்கள். சிவசங்கரன் வாழ்க்கையில் உள்ள வெறுப்பினால் இப்படிக் காட்டில் திரிகிறார் என்றும் சிலர் சொன்னார்கள். வாழ்க்கைமீதுவெறுப்பு ஏற்படுவதற்குக் காரணங்களையும் கற்பிக்க வேண்டுமல்லவா? அதற்காக அவரை ஒரு காதலி கைவிட்டு விட்டதாகக் கூறினார்கள்.

அவருடைய அத்யந்த நண்பர்கள் சிலருக்குத்தான் அவருடைய மனோபாவம் ஒரு சிறிது தெரியும். அவர்களாலும் அவர் மனத்தை முழுதும் புரிந்து கொள்ள முடியவில்லை.

சிவசங்கரனுக்குப் பெண் இனம் என்றாலே வெறுப்பு. அவர் கைக்குழந்தையாக இருந்தபோதே இந்த வெறுப்பு வெளிப்பட்டது என்று அவருடைய தாயார் கூறுவார். தம்முடைய அன்னை ஒருவரைத் தவிர வேறு எந்தப் பெண்மணி அவரைத் தூக்கிக் கொண்டாலும் அழத் தொடங்கி விடுவாராம். கொஞ்சம் வளர்ந்து விளையாடும் பருவத்தில் கூடப் பெண் குழந்தைகள் யாரோடும் சேரமாட்டாராம். தம்முடைய சொந்தத் தமக்கையையும், தங்கையையும் கூட அவர் ஹிம்சை செய்துகொண்டே இருப்பாராம். ''பொட்டைக் குட்டிகள்'' என்று பரிகாசம் செய்து அழவிட்டுக் கொண்டே இருப்பாராம்.

இதெல்லாம் எவ்வாறு அவருடைய மனத்தில் புகுந்தது என்பது யாருக்கும் புரியவில்லை. அதை மனோதத்துவ நிபுணர்கள்தான் ஆராய்ந்து கூறவேண்டும். வயதாக ஆக அவருக்கு இந்த எண்ணம் ஊர்ஜிதமாகி வந்தது. தம்முடைய தாயார் ஒருவரிடம்தான் அவர் சிறிதளவு மரியாதை காட்டி வந்தார்.

யாராவது கல்யாணப் பேச்சை எடுத்து விட்டால் தொலைந்தது. அன்று முழுவதும் பட்டினிதான். இதற்குப் பயந்து கொண்டு அவருடைய தாயார் கல்யாணப் பேச்சையே எடுப்பதில்லை.

தம் கணவர் இருந்தால் பிள்ளையின் மனத்தை மாற்றி விவாகம் செய்துவைத்திருப்பார் என்று எண்ணி அவர் தாயார் மிகவும் வருத்தப்படுவார். இரண்டு பெண்களுக்கும் கல்யாணமாகிக் குழந்தைகள் இருந்தபோதிலும், தம் கணவரின் வம்சம் வளர வழியில்லாமல் இருக்கிறதே என்று வருந்துவார். ஆயினும் சிவசங்கரனிடம் விவாக பேச்சை ஆரம்பிக்கவே அவருக்குத் துணிவு வரவில்லை.

எல்லாருமே தம்மிடம் கல்யாணப் பேச்சை ஆரம்பிக்கப் பயப்படுவதைக் கண்ட சிவசங்கரனுக்குத் தாம் ஒரு அற்புதப் பிறவி என்று தோன்றியிருந்தது. தம்முடைய பெயரும் "காமனை எரித்த சிவபெருமானின் பெயராக இருப்பதை எண்ணி அவர் மிகவும் சந்தோஷப்படுவார். தம் நண்பர்களிடம் ''என் பெயரும் சிவபெருமானின் பெயராக இருக்கிறது. சடகோப ஆழ்வார் என்பவர் குழந்தையாக இருந்தபோதே வாயு பகவானிடம் கோபித்துக் கொண்டு மூச்சு விடாமலிருந்து விட்டாராமே! அப்படி ஒரு கதை கேள்விப்பட்டேன். அந்தமாதிரி நானும் குழந்தைப் பருவத்திலிருந்தே காமனைக் கோபித்தவனுக்கும்'' என்று கூறிப் பெருமை அடித்துக் கொள்வார்.

தம்முடைய நண்பர்கள் விவாகம் செய்து கொள்ளும் போதெல்லாம் காதல் என்னும் மாயையைப் பற்றிப் பிரமாதமாகப் பிரசங்கம் செய்து அவர்களைக் கலங்க அடித்து விடுவார்.

சீனிவாசமூர்த்திகூட இந்தப் பிரசங்கங்களையெல்லாம் கேட்டவர்தான்.

சிவசங்கரனுக்கும் அவரது நண்பர்களுக்கும் இதைப்பற்றிக் காரசாரமான விவாதங்கள் நடக்கும்.

நண்பர்கள் விவாகம் செய்து கொள்வதன் அவசியத்தையும், காதலின் மேன்மையைப் பற்றியும் பேசினால் சிவசங்கரனுக்கு ஆங்காரம் பொங்கும்.

''என்ன வேண்டுமானாலும் சொல்லுங்கள். மனித இயல்பை நான் தெரிந்து கொண்டிருப்பது போல நீங்கள் யாரும் தெரிந்து கொள்ள வில்லை. காதல் என்ற ஒரு வார்த்தையே கிடையாது என்றோ, அப்படி ஒரு உணர்ச்சி கிடையாது என்றோ நான் சொல்லவில்லை. ஒரு மனிதன் தன்னிடத்தில் நிறைவைக் காண முடியாத போதுதான் காதல் என்ற உணர்ச்சியின் வசப்படுகிறான். தன்னிடத்தில் பூரணத்துவம் காண முடியாத மனிதனுக்குத்தான் பெண்ணின் துணை வேண்டியிருக்கிறது. என்னைப் பாருங்கள். எனக்குத் தன்னம்பிக்கை இருக்கிறது, என் மனம் நிறைவு பெற்றிருக்கிறது. காட்டில் போய்க்கூட நான் சந்தோஷமாக இருப்பேன்'' என்பார். அவருடைய தூய்மையான வாழ்க்கையும் அவர் கூறுவதற்குச் சான்றாக இருந்தபடியால் அவரிடம் எல்லாருக்கும் அளவு கடந்த மதிப்பு உண்டு.

சீனிவாசமூர்த்தி தம்முடைய காதலைப் பற்றியும் எத்தனையோ பேரைத் தாம் விரோதித்துக் கொண்டு சுபாஷிணியை மணந்து கொண்டது பற்றியும், தாங்கள் இருவரும் அளவில்லாத சந்தோஷத்துடன் வாழ்க்கை நடத்துவது பற்றியும் கூறியபோதுதான் அவருக்குத் தம்முடைய கொள்கையில் சிறிது குழப்பம் ஏற்பட்டது. ஆனால் அதை அவர் வெளியே சொல்லிக் கொள்ளவில்லை.

எப்படியிருந்தாலும் தம்முடைய கொள்கை இப்படித் திடீரென்று தம்மைக் கைவிட்டு விட்டு ஓடிவிடும் என்று அவர் எதிர்பார்க்கவே இல்லை.

கழுக மலைப் பிரதேசத்துக்கு ஜில்லா மாஜிஸ்திரேட்டாக நியமித்திருப்பதாகச் செய்தி வந்ததும் அவர் குதூகலமாகத் தம் தாயாருடன் கிளம்பினார். அந்த உத்தரவு வருவதற்கு முன்பு ஒரு வருஷமாக அவர் இருந்தது நன்செய் வயல்கள் சூழ்ந்த நதிக்கரைப் பிரதேசமாதலால் வேட்டையாடுவதற்கு வசதியே இல்லாமல் இருந்தது. ஆகவே இப்போது மறுபடியும் மலைப்பிரதேசத்துக்குப் போவதில் அவருக்கு அளவிலாத உற்சாகம் ஏற்பட்டதில் அதிசயமில்லை அல்லவா?

அதிலும் அவர் மலையாள நாட்டைச் சேர்ந்தவராக இருந்தும் அந்தப் பிரதேசத்துக்கு அதிகமாகப் போனதில்லை. அவர் பிறந்தது, வளர்ந்தது, படித்தது எல்லாம் கிழக்குக் கடற்கரைப் பிரதேசத்தில்தான். மேற்குக் கடற்கரையின் அழகைப் பற்றியும், மேற்குத் தொடர்ச்சி மலைகளில் பொதிந்துகிடக்கும் அற்புதங்களைப் பற்றியும் அவர் நிறையக் கேள்விப்பட்டிருந்தார். ஆகவே தம் சொந்தப் பிரதேசத்துக்குச் செல்கிறோம் என்று அறிந்ததும் அவருக்கு மகிழ்ச்சி உண்டாகியிருந்தது.

கழுக மலையின் அடிவாரத்தில் அமைந்திருந்த ஊரைப் பார்த்ததும் அவருடைய மகிழ்ச்சி மும்மடங்காகப் பெருகியது. அந்த ஊரின் அழகும், கழுக மலையில் உள்ள துஷ்ட மிருகங்கள் நிறைந்த காடும் அவரைப் பரவசத்தில் ஆழ்த்தி விட்டன.

எல்லாவற்றுக்கும் மேலாக மாதவி என்னும் கொடி ஒன்று அங்கே செழித்து வளர்ந்திருப்பதைப் பார்த்துத் தம்முடைய மனத்தைப் பறிகொடுத்து விட்டார்.

கழுக மலைக்கு வந்தது முதல் அவருக்கு வீட்டிலோ, கோர்ட்டிலோ இருப்புக் கொள்ளவே இல்லை. எப்போது மலைமேல் ஏறிச் சுற்றிப் பார்க்கலாம்? எப்போது துப்பாக்கியுடன் வேட்டைக்குப் போகலாம் என்று அவர் துடித்துக் கொண்டிருந்தார்.

ஆகவே முதல் விடுமுறை தினம் வந்த உடனே ஆவலோடு துப்பாக்கி சகிதம்

வேட்டைக்குக் கிளம்பினார். அவர் கிளம்புவதைப் பார்த்த அவரது அன்னை, "சங்கரா! தனியே போகிறாயா அப்பா?" என்று கேட்டார்.

"ஏன் தனியே போனால் மோகினி பிடித்துக் கொண்டு விடுமோ?" என்று பரிகாசமாகக் கூறிவிட்டுச் சிரித்தார் சிவசங்கரன்.

"உன்னைப் பிடிக்கிற திறமை எந்த மோகினிக்கும் இல்லையே என்றுதான் எனக்கு வருத்தமாக இருக்கிறது. போகட்டும். நீ ஜாக்கிரதையாகப் போய்விட்டுச் சீக்கிரம் வந்து விட்டால் தேவலை. சமையல்காரன் கேசவனை அழைத்துக் கொண்டு போனாயானால் எனக்குச் சமாதானமாக இருக்கும்" என்றார் அந்த மூதாட்டி.

"கேசவனும் வேண்டாம். மாதவனும் வேண்டாம். நான் சீக்கிரம் வந்து விடுகிறேன்" என்று கூறிவிட்டு ஒரு 'பிஸ்கட்' பொட்டலத்துடன் கிளம்பினார் சிவசங்கரன்.

நாலைந்து பர்லாங் தூரம் ஊரிலுள்ள தெருக்களின் வழியாகச் சென்றதும் மலைமீது ஏறும் பாதை தெரிந்தது. மலைப்பாதை ஆரம்பிக்கும் இடத்துக்குப் பக்கத்தில் ஒரு சிறிய வீடு அவருடைய கவனத்தைக் கவர்ந்தது. நான்கு புறத்திலும் வேறு எந்த வீடும் இல்லாமல் தனித்து நின்றபடியாலும் பார்க்க அழகாக இருந்தபடியாலும் அது பிரத்தியேகமாகச் சிவசங்கரனின் கவனத்தை இழுத்தது. அருகில் செல்லச் செல்ல வீட்டின் ஜன்னல்கள் திறந்திருப்பதும் வாசற் கதவு சாத்தியிருப்பதும் தெரிந்தன.

மலைமீது ஏறிச் சிறிது தூரம் சென்றதும் தம் வாழ்நாளில் என்றுமே கண்டிராத ஒரு அற்புதக் காட்சியைக் கண்டார் சிவசங்கரன்.

வேறு யாருக்கும் அது அவ்வளவு அற்புதமாகத் தோன்றியிருக்காது. சிவசங்கரனின் கண்களுக்கு மட்டும்தான் அப்படித் தோன்றியது.

மலையருவியில் ஸ்நானம் செய்து விட்டு ஒரு இளம் பெண் இறங்கி வந்து கொண்டிருந்தாள். முழங்கால் வரை விரிந்து தொங்கிய அவளுடைய நீண்ட கூந்தலை ஒரு கையால் கோதிய வண்ணம் வந்து கொண்டிருந்தாள். அவளுடைய தோள் மீது பிழிந்த ஈரத் துணிகள் இருந்தன. அவள் நடந்து வந்த அழகும், அந்தச் சூழ்நிலையும் சேர்ந்து சிவசங்கரனுடைய மனத்தில், சௌந்தர்ய தேவதையே தன்னை நோக்கி வருகிறாளோ என்ற பிரமையை ஏற்படுத்தி விட்டது. (தொடரும்)

மூந்நூறு வருஷப் புராதனப் பெருமையை உடைய மேல் நாட்டுப் பெருங் குழு நடனம் பாலே என்பது. அந்த நடனத்தைப் பற்றி அறிந்து கொள்ளுவதற்கு முன்பு சில விஷயங்களைச் சிந்தித்துப் பார்க்கலாம். மலையிலிருந்து அருவி 'சோ'வென்று விழுகிறது. வானத்திலிருந்து, அடை மழை பொழிகிறது. 'கிடு கிடு' என்று மெயில் வண்டி ஓடுகிறது. 'பளீர் பளீர்' என்று மின்னல் மின்னுகிறது. இவற்றை யெல்லாம் பார்த்து ரஸிக்க நாம் எந்த விதமான பிரத்தியேகக் கலை நுணுக்க உதவியையும் நாடுவதில்லை. அது போலவே, மேல் நாட்டு அழகிகள் (ஆண் மணிகள், பெண் மணிகள் உள்பட) மேடையில் தோன்றிப் பலவிதச் சைகைகளுடன், உட்கருத்துக்களுடன் நடனமாடுகின்றனர்; அந்தச் சைகைகளும் கருத்துக்களும் நமக்குச் சரியாய் விளங்கா விட்டாலும், மின்னல் வேகத்தில் அவர்கள் ஆடும் நடனம் அற்புதமாயிருக்கிறது. தந்தப் பதுமைகள் மேடையில் தோன்றி, மெழுகுப் பதுமைகளைப் போல் நெகிழ்ந்து, ஒடிந்து, வளைந்து அசைந்து, குலுங்கி, நிமிர்ந்து, ஓடி, ஆடும் விதம் உண்மையில் பிரமாதம்தான்!

அமெரிக்காவைச் சேர்ந்த ஸான் பிரான்ஸிஸ்கோ நாட்டிலிருந்து நம் ஆசியா நாடுகளில் சுற்றுப் பிரயாணம் செய்துவரும் ஸான் பிரான்ஸிஸ்கோ பாலே நடனக் குழு பம்பாய்க்கு வந்தது. மார்ச்சு 6, 8, 9 தேதிகளில் பம்பாய் நகரில் 'ரங்கபவன்' திறந்த வெளி அரங்கில் மேற்படி நடனக் குழுவினரின் நடன நிகழ்ச்சிகள் நடைபெற்றன. இந்த நடன நிகழ்ச்சிகளைப் பார்வையிட விமானம் மூலம் பம்பாய் செல்லும் அரிய வாய்ப்பு எனக்குத் திடீரென்று கிடைத்தது. அமெரிக்கச் செய்தி இலாகாவினர் அழைப்பு அனுப்பியிருந்தனர்.

இருபத்து நான்கு ஆண்டுகளுக்கு முன்பு நிறுவப்பட்ட மேற்படி நடனக் குழு, அகில உலகமும் உடைகள், காட்சி ஜோடனைக் கருவிகள், திரைகள், ஒளி விளக்குகள், மின்சார உற்பத்தி இயந்திரம் ஆகிய 15,000 பவுண்டு நிறையுள்ள பொருள்களுடன் செல்லுகிறது!

மேற்படி கருவிகளை அரங்கத்தில் பொருத்திக் கணநேரத்தில் அழகு காட்டுவது போலவே, மாய ஜாலமோ என ஐயுறும் வண்ணம் கணப் பொழுதில் அவைகளைக் கலைத்துப் பிரித்தெடுத்துப் பிரயாணத்துக்கு மூட்டை கட்டும் காட்சியும் வியப்பா யிருக்கிறது.

எல்லாவற்றையும் விட முக்கியமான விஷயம், மேற்படி நடன நிகழ்ச்சிகள் இந்திய செஞ்சிலுவைச் சங்கம், புற்று நோய் நிவாரணச் சங்கம், ஊனமுற்ற குழந்தைகள் உதவி நிதி முதலிய தர்ம கைங்கரியத்துக்கு உதவியாக அளிக்கப்பட்டன என்பதுதான்.

சென்னை நகரத்தைவிடப் பல மடங்கு சுறுசுறுப்பும், நெருக்கடியும், ஜனப் பெருக்கமும், போக்குவரவு நெரிசலும் உள்ள பம்பாய் நகரின் அழகை ஆறுவது மாடியிலிருந்து பார்த்து ரஸிப்பது போலவே எதிர்ப் பக்கத்தில் வெளியாகியுள்ள சில பாலே நடனக் காட்சிகளையும் நேயர்கள் பார்த்து ரஸிக்கலாம். —ஸோமாஸ்



உங்கள் அழகுக்கு
அழகு செய்வது...
பட்டுப்போன்ற மென்மையான
நறுமணமுள்ள
ஹிமாலயா
புக்கே
டாய்லெட்
பவுடர்
Himalaya Bouquet




# கவிதை ஒளி

பேராசிரியர் அ. சீநிவாச ராகவன்

இராமனுடைய ஆணையைத் தன் அன்பினாலோ அறிவினாலோ தன் வேதனையினாற்கூடத் தடுக்க மாட்டாதவனாய், அதை ஏற்றுக் கொண்ட சுமந்திரன், 'அங்கே போய் நான் சொல்ல வேண்டியதை இராமன் சொல்லி விட்டான்; உனக்கு நீ அனுப்புகின்ற செய்தி ஏதேனும் உண்டா?' என்ற குறிப்போடு சீதையைப் பார்க்கிறான். அவள் சொல்லுகிறாள்:

**அரசர்க்கு அந்தையர்க்கு**
**என்னுடை வணக்கம் முன் இயம்பி யானுடை**
**பொன்னிறப் பூவையும் கிளியும் போற்று**
**கென்(று)**
**என்னுடை எங்கையர்க்கு உணர்த்துவாய்**

*[இயம்பி - சொல்லி; யானுடை - என்னுடைய; பொன்னிறப் பூவை - பொன்னிறம் கொண்ட மைனாப் பறவை; போற்று கென்று - காப்பாற்றுங்கள் என்று; எங்கையர்க்கு - என் தங்கைமாருக்கு.]*

தெரிகிறதல்லவா சீதையின் மனம்? பேரரசு ஒன்று வேதனையில் அழுந்தித் துடிக்கிறது; உலக அனுபவம் மிக மிக உடைய சுமந்திரனும் 'இராமனைக் காட்டில் விட்டுச் செல்வதா' என்று கலங்கி அழுகிறான். சீதையோ இதில் ஒன்றிலும் தொடர்பு கொண்டிருப்பதாகக் காணவில்லை. அவளுடைய உலகம் முழுவதும் இராமன்தான். இந்த உலகம் அருகிலே இருக்கிறது. அவள் அதற்குள்ளே நிற்கிறாள். அவளுக்குக் கவலை ஏது, துயரம் ஏது? தாயின் மடியிலே உள்ள குழந்தையைப் போல, களங்கமற்ற நிறைவோடு, கவலையற்ற சிந்தையோடு அவள் பேசுகிறாள். அரசு போய் விட்டதே, காட்டுக்கு வந்துவிட்டோமே, காயும் கிழங்கும் உண்டு, வறுமை மிகுந்த கடின வாழ்க்கை வாழ வேண்டுமே, இவை ஒன்றையும் பற்றி அவள் எண்ணவில்லை. 'ஊருக்குப் போகிறாயா சுமந்திரா? நல்லது. அங்கே நான் வளர்த்த பூவையும் கிளியும் இருக்கின்றன. அவற்றைக் கவனமாய்ப் பார்த்துக் கொள்ளும்படி என் தங்கைமாரிடம் சொல், என்ன?' என்று அவள் பேசும் போது, சுமந்திரனுக்கு நெஞ்சு வெடித்து விடும்போலிருக்கிறது. கண்களில் ஆறாக நீர் பெருக விம்முகிறான். பிறகு லக்ஷ்மணனைப் பார்த்து. 'ஏதாவது செய்தி உண்டா உனக்கு?' என்று கேட்டு வைத்து விடுகிறான்.

அவ்வளவுதான். எரிமலை வெடித்ததோ என்று எண்ணும்படியாக 'உள்ளத்திலே உள்ள கனலைக் கொட்டுகிறான் லக்ஷ்மணன்.

'செய்தியா? இருக்கிறது. இருக்கிறது. அரசனுக்குத் தானே தசரத சக்கரவர்த்திக்குத்தானே? சொல்ல வேண்டியது நிறைய இருக்கிறது. சத்தியம் தவறாத புண்ணியவான் அல்லவா அவர், அதனால்தான் முதலில் என்னுடைய அரசனை இராமனுக்கு (ஆமாம், இராமன் என் அரசன், தசரத சக்கரவர்த்தி இல்லை) முதலில் இராமனுக்கு அரசு தருவதாக வாக்களித்துத் தந்து விட்டு, பிறகு மணம் பொருந்திய கூந்தல் உடைய ஒருத்திக்கு அதே அரசை அளித்தாரே வாக்குத் தவறாத சத்தியசந்தர். மெய்யர் என்றால் அவரை அல்லவா சொல்ல வேண்டும்? அவரிடம் ஒன்று சொல்.

உரைசெய்து எம்கோமகற்கு உதவிப்போக்கிய
தரைசெறி செல்வத்தைத் தவிர, மற்றொரு
விரைசெறி குழலிமாட்டு அவித்த மெய்யனை
அரசன் என்று இன்னம் ஒன்று உணர்த்த
வாருமோ?

[எம்கோமகற்கு - என் அரசனாகிய இராமனுக்கு; உதவிப் போக்கிய - தருவதாகச் சொல்லி, தந்துவிட்ட; தரைசெறி - பூமி நிறைந்த; தவிர - (இராமன்) இழக்கும்படி; விரைசெறி குழலி மாட்டு - வாசனை நிரம்பிய கூந்தலுடைய ஒருத்தியிடம்.]

'என்ன சொல்ல வேண்டும் தெரியுமா? இங்கே காட்டில் தன் அருமை மகன் காயும் கிழங்கும் உண்டு தவிக்க, அங்கே அயோத்தியில் அரச உணவு உண்டு வாழும் அந்த அரசனிடம் இன்னும் சாகாமல், உடம்பை விடாமல் பிடித்துக் கொண்டு உயிர் வாழும் அவனுடைய வலிமை மகத்தானதுதான் என்று சொல்.

'கானகம் பற்றி இப்புதல்வன் காய்உண,
போனகம் பற்றும் அப்பொருவில் மன்னர்க்கு
ஊன்அகம் பற்றிய உயிரோடு இன்னம் போய்
வான்அகம் பற்றிலா வலிமை கூறு'

[உண-உண்ண; போனகம்-சிறந்த உணவு; பொருவில்-ஒப்பற்ற. (தசரதனைப் போல் யார் இருக்கிறார்கள் என்ற ஏளனக் குறிப்பு) ஊன் அகம்-மாமிசப் பிண்டமான இந்த உடம்பு; வான் அகம் - மறு உலகம்.]

தசரதனைத் தந்தை என்று லக்ஷ்மணன் குறிப்பிட வில்லை. அரசன் என்றே பேசுகிறான். அவனுடைய வாய்மையைப் பரிகசிக்கிறான். அவன் சாகாமல் இன்னும் உயிரோடிருக்கிறானே, என்ன ஆசை உயிரிலே இந்தக் கிழத்துக்கு என்று இடித்துக் காட்டுகிறான். இவ்வளவு கனல் லக்ஷ்மணன் பேச்சில் எங்கிருந்து வந்தது? இராமனிடமுள்ள அன்பிலிருந்து முளைத்தது இந்தக் கோபத் தீ. ஆங்கில அறிஞர் கார்லைல் கூறினார்: Indignation is inverted Love 'சினம் என்பது அன்பின் மறுபுறம்' என்று. இது எவ்வளவு உண்மை என்பது நமக்கு லக்ஷ்மணன் பேச்சிலிருந்து தெரிகிறது.

சுமந்திரன், தேரைத் திருப்பிக் கொண்டு அயோத்தி நோக்கிப் போகிறான். இராமன், சீதை, லக்ஷ்மணன் மூவரும், இருட்டில், காட்டுக்குள்ளே சென்று மறைகிறார்கள்.

நாம் இருளில் நிற்கிறோம். இப்போது அது இருளாகத் தோன்றவில்லை. இந்த இருளில் தானே கம்பருடைய கவிதை ஒளியின் துணைக் கொண்டு, நான்கு மனித உள்ளங்கள் ஒரே சுருதியில் எப்படி வெவ்வேறாகத் துடிக்கின்றன என்பதைக் கண்டோம்! சுமந்திரனுடைய அன்பு துயரத்தில் தோய்கிறது. சீதையின் அன்பு களங்கமற்ற மதலையின் தன்மையாக வடிவெடுக்கிறது. லக்ஷ்மணனுடைய அன்பு சினமாகப் பொங்குகிறது. இராமனுடைய அன்போ, எல்லா உயிர்களையும் அணைத்துக் கொள்ளும் சலியாத தரும நீதியாக மலர்கிறது.

நாடகப் பாங்கு என்று சொல்கிறார்களே, அதற்குப் பல முகங்கள் உண்டு. ஒரு முகத்தை இங்கே கண்டோம். ஒரு நிலை, ஓர் உணர்ச்சி அல்லது ஒரு நிகழ்ச்சியின் வீச்சில், கதையில் வரும் பல பாத்திரங்களின் இயல்புகளை ஒரே காலத்தில் காணும்படி உதவும் சக்தி, நாடகப் பண்பில் ஓர் அம்சம். இது கம்பருடைய காவியம் முழுவதிலும் அங்கங்கே நாம் காணக் கூடிய அற்புதம்.

இன்னொன்று. இன்று நாம் பார்த்தது சோக இருள் நிரம்பிய கதைப் பகுதி தான். ஆனாலும், இராமன், லக்ஷ்மணன், சீதை மூவரும் காட்டில் மறைவதைப் பார்த்துக் கொண்டு நிற்கும் நம்மிடம், சோகத்தைவிடப் பெருமிதஉணர்ச்சியே ஓங்கி நிற்கிறது. காரணம் என்ன? இருட்டிலே, பயங்கரமான காட்டுக்குள்ளே தான் அவர்கள் போகிறார்கள். என்றாலும், போகின்றவர்கள் நிலையைத் தான் இப்போது கண்டோமே. சீதையின் கற்பும், லக்ஷ்மணன் அன்பும், இராமனுடைய கருணையும் அறமும், உடன் செல்கின்றன. இருட்டானால் என்ன? காடானால் என்ன? நம்முடைய இந்த உணர்ச்சியைக் கம்பர் வடிவாக்கித் தருகிறார்.

தையல் தன் கற்பும், தன் தகவும், தம்பியும்,
மையறு கருணையும் உணர்வும் வாய்மையும்
செய்யகை வில்லுமே சேமமாக் கொண்டு
ஐயனும் போயினன் அல்லின் நாப்பணே.

'அல்லின் நாப்பண்' அதாவது இருட்டின் ஊடே, ஐயன் போகிறான்; இரவிருள் மாத்திரம் இல்லை, சோகத்தாலான இருளும் அவனைச் சூழ்கிறது. ஆனாலும், மனிதனுடைய ஆண்மை வீரம், சான்றாண்மை, இவற்றின் முன் இருள் ஏது? சோகம் ஏது? இதை நாம் உணர்ந்ததால், சோகத்தின் நடுவிலும் பெருமித உணர்ச்சி நமக்குக் கிடைத்தது. கம்பருடைய கவிதை ஒளியின் உதவியால் இருட்டிலும் நம்மால் பார்க்க முடிந்தது. சோகத்திலும், தீரமும் எழுச்சியும் பெற முடிந்தது. அந்த ஒளி இடையறாது நம்முடைய வாழ்விலும் வீசினால், வீசும்படி நாம் அவர் காவியத்தைப் பயின்றால், எந்த இருள் தான் விலகாது? (தொடரும்)



# ஆலயப் பிரவேசம் அனைவரின் உரிமை ...

"ஆலயப் பிரவேசம் என்ற ஒரு புனிதச் செயல்தான் "தீண்டாதவர்"களுக்கு சுதந்திர உரிமையையும் ஆண்டவனின் முன்னிலையில் தாங்கள் புறக்கணிக்கப் படாதவர்கள் என்ற உறுதியையும் அளிக்கிறது"

— *மகாத்மா காந்தி*

*இந்திய அரசியல் சட்டம் தீண்டாமையை ஒழித்து எல்லோருக்கும் சமநீதியான சமூக, பிரஜா உரிமைகளை அளிக்கிறது.*

தீண்டாமையை
ஒழித்துக் கட்டுங்கள்
சமத்துவத்தை
நிலை நாட்டுங்கள்

DA 58/545




## 8. தினசரியை II

“இன்றைக்கு நான் யார் முகத்தில் விழித்தேனோ! தொட்டதெல்லாம் இப்படி....” என்று பலர் வெறுத்துக் கொள்வதைப் பார்த்திருக்கிறோம்.

“யாரைச் சொல்லி என்ன? நான் விழித்த முகம் அப்படி!” என்று தன் விதியையே நொந்து கொள்வோரையும் பார்த்திருக்கிறோம்.

நித்திரை நீத்து விழித்தவுடன் முதன் முதலில் ஒவ்வொரு நாளும் பார்க்கத் தக்க நற்பொருள்கள் யாவை? இதையறிந்து கொள்ளுதல் அவசியம்.

“ கஞ்சம் தங்கம் தீபம் கண்ணாடி பொச்சங்கி
செஞ்சந்த நீர்மண் சிவலிங்கம்—மஞ்சங்கள்
கற்று நமது வலக்கை மனை நடாச்சியவை
யுற்றல் விழிப்பில் உத்தமம்”

தாமரை, தங்கம், விளக்கு, கண்ணாடி, சூரியன், புகையொழிந்த நெருப்பு, செஞ் சந்தனம், கடல், வயல், சிவலிங்கம், முகில் சூழ்ந்த மலை, கன்றையுடைய பசு, தமது வலக்கை, தம் மனைவி, மிருதங்கம் ஆகியவையாகும். யாவற்றினும் எளியது தனது வலக்கைதான். அதுவும் மோதிரம் அணிந்த வலக் கையானால் மிகவும் உத்தமம். இதன் பிறகுதான் வாய்த்தற்கரிய பெரும் பேறான தந்தை தாயர்களைத் தொழுதெழுதல் வேண்டும்.

இவ்வாறு எழுந்தபின் வீட்டினுள்ளே சிறிது உலாவி, சரீர சிந்தை செய்து, காலைக் கடன்களை முடித்துக் கை கால்களைக் கழுவிக் கொள்ள வேண்டும். பிறகு பல் தேய்க்க வேண்டும். இவ்வாறு வடமொழியில் வகுத்த வைத்திய நூல்கள் கூறுகின்றன. தென்மொழியில் வகுத்த நூல் ஒன்று கூறுகிறது, காலையில் எழுந்தவுடன் சுத்த நீர் சிறிது அருந்த வேண்டும் என்று!

“ தூங்கி விழித்தவுடன் சுத்தோதக மருந்தில்
ஓங்கிநின்ற பித்தம் ஒழிவதன்றி—தேங்கு
மலமூத்திரங்கள் வாதாதியுந்தம்
நலமாந் திரமுறவுந் தான்.”

மலஜலங்கள் சிக்குப்படாமல் கழியும். வாத பித்த கபங்கள் தத்தம் இயற்கை நிலையில் நின்று இயங்கும். இயற்கையாயுள்ள தத்தம் செயல்களைப் புரிந்து சரீரத்தை ஆரோக்கிய நிலையில் நிறுத்தும்.

மனிதன் ஆரோக்கியத்தைக் காப்பாற்றிக் கொண்டு ஆயுளையும் நீடித்துக் கொள்ள வேண்டும் என்பதற்காகவே தினசரியை ஏற்பட்டுள்ளது. சுத்தநீர் அருந்தித்தான் மலஜலங்கள் கழிய வேண்டும். இல்லாவிடில் ‘தேங்கு மல மூத்திரங்கள் தங்கி விடும்’ என்று ஏற்படுமாயின் ஒருவனை எப்படி ஆரோக்கிய முள்ளவன் என்று கூற முடியும்? இந்த ஆட்சேபம் ஒரு பெரிய விஷயமில்லை. இவ்விதம் சுத்த நீர் அருந்துவதே தனது ஆரோக்கியத்தைக் காத்துக் கொள்வதற்கு இன்றியமையாத தென்ற பழக்கம் உள்ளவர்கள் இதை ஏற்கட்டும். மற்றவர்கள் விட்டு விடட்டும். முதலில் சொன்னது எல்லோருக்கும் விதிக்கப்பட்ட பொதுத் திட்டம். நீர் அருந்துவது ஒரு சிலருக்கு மட்டும் அனுமதிக்கப்பட்ட விசேஷ விதி என்று ஏற்றுக் கொண்டால் முன் சொன்ன ஆட்சேபம் தீரும்.

இவ்விதமே சிலர் காலையில் எழுந்தவுடன் முதற் காரியமாகத் தாம்பூலம் தரிக்கும் பழக்கமுள்ளவராயிருப்பார்கள். இவர்களும் இவ்வித விதிவிலக்கின் கீழ் தாம்பூலந்தரிக்கலாமென அனுமதிக்கப்படுகிறார்கள். வடமொழியில் வகுத்த வைத்திய நூல்களில் எண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்வதற்கு முன்பாகத்தான் தாம்பூலம் தரித்தல் அனுமதிக்கப்பட்டுள்ளது.

இனி, முன் சொன்ன ‘சரீர சிந்தை’ என்பதென்ன என்று அறிய வேண்டும் அல்லவா? காலையில் எழுந்தவுடன் இரவு நன்றாகத் தூங்கி இளைப்பாறியதால் புதிய பலமும் சக்தியும் உண்டாகிச் சுறுசுறுப்பான நிலை வந்திருக்க வேண்டும். சரீரம் இலேசாயிருப்பதோடு,

அறிவுக் கூர்மையும் உண்டாகியிருக்க வேண்டும். வயிற்றில் கனமோ, வயிறு நிறைந்தது போன்ற தோற்றமோ, உப்புசமோ இருக்கக் கூடாது. அசுத்தமான ஏப்பம் — அதாவது புளித்த ஏப்பம், அப்பொழுதுதான் சாப்பிட்டு எழுந்தது போன்ற ஏப்பம் அல்லது பொறியரிசி ஏப்பம்—இருக்கக்கூடாது. அறிவுமரத்தம், மனச்சோர்வு, சோம்பல், உடல்வலி, உடல் கனம் இவை இருக்கக் கூடாது. இவ்வித நிலையில் சரீரம் இருக்கிறதா என்று தனக்குத்தானே சிந்தித்துப் பார்த்துத் தெரிந்துகொள்ள வேண்டும். இதைத்தான் 'சரீர சிந்தை' என்பர். இதனால் தனது ஆரோக்கிய நிலையைக் கணித்து அறிந்து, பிறகுதான் காலைக்கடன்களை முடித்துக் கொள்ள வேண்டும்.

காலைக் கடன்களை முடிக்குங்கால் நீரைக் கழிக்கும் போது இடது கையால் அடி வயிற்றின் வலப்பக்கத்தைப் பிடித்திருத்தல் வேண்டும்; அவ்வாறே மலங் கழிக்கும் போது வலக் கையால் அடி வயிற்றின் இடப் பக்கத்தைப் பிடித்திருத்தல் வேண்டும். மலஜலங்கள் பற்றறக் கழியும் வரை மனத்தை வேறு விஷயங்களில் சிறிதும் செலுத்தக் கூடாது. மலம் சரிவரக் கழிவுபடாமல் சிறிதேனும் தடைப்பட்டிருப்பின் சற்று நேரம் இடது பக்கம் சரிந்து கிடந்து, வலது நாசியால் சுவாசித்தலும்; அவ்விதமே நீர் சரிவரக் கழிவுபடாமலிருப்பின் சற்று நேரம் வலது பக்கம் சரிந்து இடது நாசியால் சுவாசித்தலும் வேண்டும். இப்படிச் செய்வதால், தடை நீங்கி மலஜலங்கள் சரிவரக் கழிய வகையுண்டாகும் என்று தமிழ் மொழியில் உள்ள நாட்டு வைத்திய நூல்கள் தெரிவிக்கின்றன.

யோக சாதனையில் சித்தி பெற்ற தமிழ்ச் சித்தர்கள் சமைத்த சாஸ்திரமானதால் மேற்சொன்ன விசேஷ விஷயங்கள் விளக்கப்பட்டிருக்கின்றன.

'பிராணயாமம்' என்ற முறைப்படி சுவாசிக்கப் பயிற்சி பெறுவது யோக சாஸ்திரத்தில் விளக்கப்பட்டுள்ள ஒரு அங்கம். இடை என்றும் பிங்கலை என்றும் சுஷும்னை (சுழிமுனை) என்றும் யோகாப்பியாசக் கிரமத்தில் சுவாசிக்கும் பயிற்சியை விளக்கிடுங்கால் சொன்ன சொற்களையேனும் கேளாதவர் இருக்க முடியாது. எட்டு படிவங்களாகப் பிரிக்கப்பட்டுள்ள பயிற்சிக்கிரமம் கொண்ட இந்த யோகக் கலையில் பிராணயாமம் என்பது நான்காவது படிவமாகும்.

ஏட்டிலுள்ள யோக சாஸ்திரமும், நடைமுறையிலுள்ள அதன் பயிற்சிகளும் பாரத நாட்டுக்கு மட்டும் உள்ள ஒரு தனிக்கலை. அச்சாஸ்திரத்துக்குப் பல பேர்கள், பல்வேறு காலங்களில் எழுதியுள்ள உரைகள் இதைப் பலரும் கற்றுத் தேர்ச்சி பெற்றனர் என்பதற்குச் சான்று. இக்கலையின் பயிற்சியில் தேர்ச்சியும் சித்தியும் பெற்ற பலரை — முன்னில் சித்தர் பதினெண்மரையும், பின்னில் அவ்வழியைப் பின்பற்றிய வேறு பலரையும் ஈன்ற பெருமை தமிழ் நாட்டுக்குரியதாகும். யோக சாஸ்திரத்தைத் தழுவி வேதாந்த சாஸ்திரமும் சித்தாந்த சாஸ்திரமும் அமைத்திட நேரிட்டதிலும் தமிழ்நாடும் தமிழும் பெரிதும் பங்கெடுத்துக் கொண்டதை மறுக்க முடியாது. ஞானமும் யோகமும் அடிப்படையாய் அமைந்தது— ஞான யோகமென்னும் அத்துவித வேதாந்தம். இஞ்ஞான யோகத்துடனும் பக்தியுஞ் சேர்ந்து அடிப்படையாயமைந்த சமய சாஸ்திரம் சைவ சித்தாந்தம். இவை கரிக்குதவாத ஏட்டுச் சுரைக்காயல்ல என்பதற்குச் சான்று நமது நாயன்மார்களும் மற்றுஞ் சமயக் குரவர்களுமாவர்.

சுவாசிப்பதால் சரீரத்தின் உட்செல்லும் காற்றிலுள்ள பிராணவாயுவைச் சரீரம் ஏற்று அங்குள்ள கரியமல வாயுவைத் திருப்பி யனுப்புகிறது என்பது யாவரும் அறிந்ததே. வாயுக்களின் மாற்றம் (Exchange of gases) என்பர். ஆனால் யோகாப்பியாச முறையைத் தழுவி 'பிராணயாம'க்கிரமத்தில் சுவாசிப்பதில் என்ன விசேஷம் இருக்க முடியும் என்றறிய மேல்நாட்டு விஞ்ஞானிகளின் கவனம் சென்ற இருபது இருபத்தைந்து வருஷங்களாகப் பெரிதும் செல்லலாயிற்று. பதஞ்சலியின் யோக சூத்திரமும், அதன் உரைகளில் அச்சானவை, ஆகாதவை என்ற பலவும் மேல் நாட்டினர் விரும்பிடவும் நம் நாட்டினர் அனுப்பிடவும் நேரிட்டது. இவற்றைப் பெற்று ஆராய்ச்சிகளைத் தொடர்ந்து நடத்தி வந்த அவ்விஞ்ஞானிகள் சில உண்மைகளை ஊகித்தறிய நேரிட்டது. அவை ஊர்ஜிதம் பெறுவதற்கான முயற்சிகளும் தொடர்ந்து செய்யப்பட்டு வருகின்றன. காற்றைச் சுவாசிக்கும்போது மேற்சொன்ன 'வாயுக்களின் மாற்றம்' என்பதோடு, காற்றிலுள்ள மின்சார சக்திக் கணங்களும் காற்றுடன் உட்செல்வதால் இச் சக்தி மாற்றமும் (Exchange of Electric Ions) நடைபெறுகின்றனும் என்ற புதிய ரஹஸ்யம் சில வருஷங்களுக்கு முன் மேல்நாட்டு விஞ்ஞானிகளின் ஆராய்ச்சிக் கூடங்களில் ஏற்படலாயிற்று.

'பிராணயாம' முறைப்படி சுவாசிப்பதால் இம்மின்சார சக்தி நமது சரீரத்தில் சில கேந்திர ஸ்தானங்களையும், மர்மங்களையும், ஆசயங்களையும் குறிப்பிட்ட முறையில் இயங்கிடச் செய்யும் வாய்ப்பைப் பெறுகிறது என்ற ஹேஷ்யம் இவ்விஞ்ஞானிகளின் மனத்தில் எழவும், இதை இன்னதென்று தெரியவே தமது ஆராய்ச்சிகளைத் தொடர்ந்து நடத்திடச் சில விஞ்ஞானிகள் பாரதம் வந்து சேர்ந்தனர். யோகிகள் சிலரைத் தமது குழுவில் அழைத்துக் கொண்டு அவர்கள் யோகத்தை அப்பியசிக்குங்கால் அவர்கள் சரீரத்தின் உறுப்புக்களின் இயக்கங்களில் என்ன வேற்றுமைகள் ஏற்படுகின்றன என்று பரீட்சித்து அறிந்து தெளியச் சில மேல்நாட்டு விஞ்ஞானிகள் செய்து வரும் ஆராய்ச்சி முயற்சிகளைச் சமீபத்தில் பத்திரிகைகளில் நாம் காண நேரிட்டது.

தடைப்பட்டு நிற்கும் மலத்தையும் நீரையும் தாராளமாகப் போக்குவதற்குத் தமிழ்ச் சித்தர்கள் சொன்ன மேற்கண்ட விஷயமும் இவ்வாராய்ச்சியாளரின் கவனத்துக் குரியவையாகும்.

"இருமலங்கள் தங்கா நிறங்கங்காக்; மூன்றும்
இருமலங்கள் தங்கள் நிலைபெய்யும்-இருமச்
சமனுக் கினிசாரும்; சாராதோ யிட்டம்;
சமனுக் கிலைசாரா தாம்."

தினந்தோறும், காலை மாலை இரண்டு நேரமும் மல மூத்திரங்கள் சரிவரக் கழிதல் முக்கியமாகும். இதனால் வாத பித்த கபங்கள் நன் நிலையில் இயங்கி ஆரோக்கியத்தை அளிக்கும். சடராக்கினி-செரிப்புத்தீ—அதிகரிக்கும். நோய்கள் அணுகாத இந்நிலையில் உள்ளவனிடம் யமனின் ஆக்கினை செல்லாது என்று உத்தரவாதம் அளிக்கின்றனர் தமிழ்ச் சித்தர்.

# படித்துப் பாருங்கள்

## கலைக் களஞ்சியம்

சில புஸ்தகங்களை வாங்கியவுடன் ஒரே மூச்சில் படித்து முடித்துவிட வேண்டும் என்று தோன்றுகிறது. அப்படிப் படித்து முடித்த பிறகு அது நம் கண் எதிரில் நிற்காமல் எங்கேயாகிலும் ஓடி மறைந்து விட்டால் தேவலை என்றும் நினைக்கிறோம். இன்னும் சில புஸ்தகங்கள் கொஞ்சம் கொஞ்சமாகப் படித்து அனுபவிக்க விரும்புகிறோம். எங்கே போனாலும் கூடவே கையோடு கொண்டு போக விரும்புகிறோம். யாராவது இரவல் கேட்டால் கொடுக்கத் தயங்குகிறோம். வேண்டுமானால் புதிய பிரதி வாங்கிக் கொடுத்து விடலாம் என்று நினைக்கிறோம். இந்த இரண்டு வகைப் புத்தகங்கள் தவிர மூன்றாவது வகைப் புத்தகங்களும் உண்டு அவை உடனே படித்து முடித்துவிடக் கூடியவையல்ல; கையில் எப்பொழுதும் வைத்திருந்து படித்து அனுபவிக்கக் கூடியவையுமல்ல. ஆனால் நம் வீட்டு அலமாரியில் நிச்சயம் இருக்கக்கூடியவை. சமயத்துக்கு உதவக் கூடியவை. அவைதான் 'கலைக் களஞ்சிய' நூல்கள்.

நம முன்னோர்கள் உலகில் அறுபத்து நான்கு கலைகள் என்றார்கள். ஆனால் இன்று அறுபத்து நாலாயிரம் கலைகளாகப் பெருகிவிட்டன! இத்தனை கலைகளும் ஒரு மனிதன் தன் வாழ் நாள் முழுதும் செலவிட்டால் கூடப் பயில முடியாது. ஆனால் ஒவ்வொரு சமயத்தில் இந்தக் கலைகளின் ஒவ்வொரு அம்சமாவது தெரிந்து கொள்ள வேண்டி நேர்கிறது. தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வம் பிடரியைப் பிடித்து உந்துகிறது. அந்த நிலையில் நமக்கு ஆபத்பாந்தவனாக உதவுவது கலைக் களஞ்சிய நூல்களே!

தேசத்தில் தேர்தல் நடக்கிறது! இந்தச் சமயத்தில் 'குடியரசு' என்ற சொல் பெரிதும் அடிபடுகிறது. 'குடியரசு' என்றால் என்ன என்று இப்பொழுது யாருக்காகிலும் தெரிந்து கொள்ள வேண்டும் என்று தோன்றலாம். அவர்களிடம் சமீபத்தில் வெளியான கலைக் களஞ்சியம் நான்காவது புத்தகம் இருந்தால் போதும். அதன் முதல் பக்கத்தைப் புரட்டினாலேயே தெரிந்து கொள்ளலாம்!

தமிழ்த் தாத்தா சாமிநாதய்யர் திருநாள் சமீபத்தில் சென்னையில் சில இடங்களில் கொண்டாடப்பட்டது. இன்று பள்ளிக்கூடத்தில் படிக்கும் மாணவனுக்கு 'யார் இந்த சாமிநாதய்யர்?' என்ற ஆர்வம் எழலாம். அவன் வீட்டில் இந்தக் கலைக் களஞ்சியம் நான்காவது புத்தகம் இருந்தால் உடனே தெரிந்து கொள்ளலாம்.

இந்த நான்காவது புத்தகத்தில் 'சரித்திரம்' என்ற தலைப்பில் தமிழ் நாட்டின் சரித்திரத்தையே ஓரளவு கொடுத்திருக்கிறார்கள். 'சிற்பம்' என்ற தலைப்பில் வெளியாகியுள்ள கட்டுரைகளும் படங்களும் நம் நாட்டுச் சிற்பத்தை மட்டுமன்றி, கிரேக்க நாட்டு சிற்ப சாஸ்திரம், ரோமாபுரி சிற்ப சாஸ்திரம் ஆகியவைகளையும் நமக்கு விளக்குவனவாக இருக்கின்றன. சினிமா என்ற தலைப்பில் வந்துள்ள கட்டுரையும் சிரிய முறையில் அமைந்துள்ளது.

இப்பொழுதுதான் கலைக் களஞ்சியத்தின் மூன்றாவது புத்தகம் வெளிவந்தாற் போல் இருக்கிறது. அதற்குள் சுமார் எண்ணூறு பக்கங்களில் விஷயச் செறிவும் படங்களும் கொண்ட இந்த நான்காவது புத்தகத்தைப் பார்க்கும்போது நமக்கு இனந் தெரியாத இன்ப அதிர்ச்சி ஏற்படுகிறது. தமிழர்கள் நிச்சயமாய், வெகுவேகமாய் முன்னேறி விடத் தீர்மானித்து விட்டார்கள் என்ற மகிழ்ச்சி பொங்குகிறது.

கிடைக்குமிடம்; ஓரியண்ட் லாங்மன்ஸ், மவுண்ட் ரோடு, சென்னை. விலை ரூ. 25.

# ரகுபதியின் ராஜினாமா



அந்தக் காரியாலயத்தில் காலியான மானேஜரின் அந்தரங்கக் காரிய தரிசிப் பதவிக்கு யாரை நியமிக்கப் போகிறார் மானேஜர் சங்கரலிங்கம் என்பது மர்மமாகவே யிருந்தது. ஏற்கனவே காரியாலயத்திலே அலுவல் பார்த்து வந்தவர்களில் ஒவ்வொருவனும் தனக்குத்தான் அந்தப் பதவி கிடைத்துவிடப் போகிறது என்று மனப்பால் குடித்து வந்தான்.

ஒரு பெரிய அதிகாரியின் அந்தரங்கக் காரிய தரிசிப் பதவி என்றால் சும்மாவா? நந்திதேவனைப் பேட்டி காணாமல் ஈசுவரனை வழிபடுவது சாத்தியமா? அதுமட்டுமா? பெருமை, புகழ், கௌரவம் எல்லாம் எவ்வளவு கிடைக்கும்? எல்லாவற்றுக்கும் மேலாக, தன்னைக் கலந்தாலோசிக்காமல் அதிகாரி எந்தக் காரியமும் செய்யமாட்டார் அல்லவா? எனவே இப்படிப்பட்ட ஒரு அரிய பெரிய சந்தர்ப்பம் தனக்குத்தான் கிடைக்க வேண்டும் என்று ஒவ்வொரு சிப்பந்தியும், எதிர்பார்த்ததில் வியப்பென்ன?

ஆனால், சங்கரலிங்கம் எல்லோருடைய ஆசையிலும் மண்ணைப் போட்டு விடுவார் என்று யாரும் கனவிலும் கருதவில்லை. தங்களுக்குள் ஒருவனுக்குத்தான் அந்தப் பதவி கிட்டப் போகிறது என்று எண்ணியவர்கள் ஏமாந்து போனார்கள். ஏன்? சங்கரலிங்கம் தமக்கு அந்தரங்கக் காரியதரிசியாக வெளியிலிருந்து ஒரு நபரை நியமித்து விட்டார். அதுவும் யார்? ஒரு அழகிய யுவதி! அவளுக்குச் சுமார் இருபத்திரண்டு வயது இருக்கலாம்.

''இதோ, இவள்தான்! இன்று முதல் எனது அந்தரங்கக் காரியதரிசி. பெயர் மஞ்சுளா. இனிய சுபாவமுடையவள். நமது காரியாலய அலுவல்கள் திறம்பட நடத்த வேண்டுமென்பதில் ஆர்வம் மிக்கவள்'' என்று சங்கரலிங்கம் அன்று அங்குள்ள எல்லாச் சிப்பந்திகளுக்கும் அவளை அறிமுகம் செய்து வைத்தார்.

எல்லாச் சிப்பந்திகளும் ஏமாற்றமடைந்தது மட்டுமல்லாமல் தங்களுக்குள் தாபமும் கொண்டார்கள். ''இனி அதிகாரியின் தர்பார்கள் ஒரு பெண்ணின் மூலம் நடைபெறப் போகின்றன. அதிகாரியின் தயவைப்பெறுவதற்கு முன்பு, இந்தப் பெண்மணியின் தயவைப் பெற்றாக வேண்டும். அட! கடவுளே!'' என்று ஒவ்வொருவனும் ஏங்கினான்.

சிப்பந்திகள் தாபம் மட்டுமா அடைந்தார்கள்? வெறுப்பும் கூடத்தான்! ஒரு யௌவனப் பிராயமுள்ள அதிகாரி, தமக்கு அந்தரங்கக் காரியதரிசியாக ஒரு பெண்ணை அமர்த்திக்கொண்டார் என்றால், கேட்க நன்றாயிருக்கிறதா? அதுவும் அந்த அதிகாரி ஏற்கெனவே திருமணம் செய்துகொண்டு, இரண்டு குழந்தைகளுக்குத் தந்தையானவர்!

பொறாமையும், அசூயையும் சிப்பந்திகளின் உள்ளத்தில் கொழுந்து விட்டு எரிந்தன.

சங்கரலிங்கத்தின் அறையிலே தினமும் சிரிப்பும் கொம்மாளமும்தான். அதைக்

கேட்ட 'வெளியில் உள்ள சிப்பந்திகள் தங்க ளுக்குள் கண்களால் பேசிக் கொண்டார்கள்.

அந்தக் காரியாலயத்திலே ஜூனியர் அக் கௌண்டெண்ட் வேலை பார்த்து வந்தான் ரகுபதி என்ற இளைஞன். அவன் சில காலம் ரஜாவில் வெளியூர் சென்றிருந்தான். ரஜாவி லிருந்த சமயம் அவனுக்கு மற்றொரு குமாஸ் தாவிடமிருந்து ஒரு கடிதம் கிடைத்தது.

"அன்புள்ள ரகுபதிக்கு.

நீ திரும்ப வேலைக்கு வரும்போது உனக்கு ஒரு அதிசயம் காத்திருக்கிறது நமது காரியால யத்திலே. நமது மானேஜரின் அந்தரங்கக் காரியதரிசியான சுந்தரம் உடல் நிலை காரண மாகத் தம் வேலையை ராஜிநாமாச் செய்து விட்டார். அந்த ஸ்தானத்தைப் பூர்த்தி செய்ய நம் மானேஜர் சங்கரலிங்கம் யாரைப் போட் டிருப்பார் என்று கற்பனை செய்து பார்! ஊஹூம்! உன்னால் முடியாது. நான் சொல் கிறேன், கேள். அழகிய ஒரு பெண்ணை நிய மித்திருக்கிறார். அவளுக்கு வயது இருபத் திரண்டு தானிருக்கும். மானேஜரின் அறையில் எப்போதும் சிரிப்பும் கூத்தும் தான். வெளியில் சொன்னால் வெட்கக்கேடு. எல்லாம் நீயே இன்னும் சில தினங்களில் கண்ணால் கண்டு களிக்கப்போகும் விஷயம்! நம் தலைவிதி இனி, நம் அதிகாரிகளிடம் நல்ல பெயர் எடுக்க வேண்டுமானால், இந்தப் பெண் ணைத் திருப்தி செய்ய வேண்டியதுதான். என்ன நடக்கப் போகிறதோ! இங்ஙனம்,

துரைசாமி."



இந்தக் கடிதத்தைக் கண்ணுற்ற ரகுபதி வியப்பினால் செயலற்றுப் போனான். ஒரு பெண்ணா மானேஜரின் அந்தரங்கக் காரிய தரிசி? இனி ஒரு பெண்ணுக்கா பணிந்து நடக்க வேண்டும்? சரி! அந்த வேடிக்கையையும் பார்த்து விடலாம். எல்லாருக்கும் நேரும் கதி நமக்கும் நேரட்டும்—இவ்விதம் எண்ணியவனாய்த் தன் ரஜா முடிவடைந்ததும், காரியாலயத்துக்குப் போய் வேலையை ஏற்றுக் கொண்டான் ரகுபதி.

அன்று அவனுக்கு வேலையே ஓடவில்லை. புதிதாக நியமிக்கப்பட்ட அந்தப் பெண்ணைப் பார்க்க வேண்டும் என்று துடித்தது அவன் மனம். அன்று ஏனோ மஞ்சுளா பிற்பகல் ஒன்றரை மணி வரையில் வரக் காணோம்.

மற்றக் குமாஸ்தாக்களுடன் ரகுபதி சிற்றுண்டிக்காக வெளியேறினான். சுமார் அரை மணிக்குப் பிறகு திரும்பியவனுக்கு ஒரு அழைப்பு கிடைத்தது. "ஸார்! உங்களை அம்மா கூப்பிடறாங்க!" என்றான் பையன்.

அந்த அம்மாவைப் பார்க்கப் போகும் துடிப்புடன் உள்ளே நுழைந்த ரகுபதி அவளைக் கண்டதும் பேயறையப்பட்டவன் போல் ஆனான். எனினும் ஒரு நொடியில் தன்னைச் சமாளித்துக் கொண்டான். அதே கணம் அவளும் தன்னைக் கண்டு அதிர்ச்சியடைந்து விட்டாள் என்பதையும் அவனால் அறிந்து கொள்ள முடிந்தது.

"இந்தாருங்கள்! இந்தப் பட்டியல்படி ஒரு செக் தயாரித்து, மானேஜரின் கையெழுத்துக்கு உடனே அனுப்ப வேண்டும். மானேஜர் இன்று உடல்நலக் குறைவினால் காரியாலயம் வரவில்லை. எனவே செக்கை அவர் வீட்டுக்கே அனுப்புங்கள். இன்றையத் தபாலில் இது அனுப்பப்பட வேண்டும் என்று அவர் உத்தரவு!" என்று அவன் முகத்தை நோக்காமலேயே கூறினாள் மஞ்சுளா.

ரகுபதியின் மனோபாவம் ஒரு பெண்ணின் உத்தரவுக்குப் பணிய மறுக்கும் இயல்புடையது. தவிர இந்தப் பெண்ணின் மீது அவனுக்கு ஏற்பட்டிருந்த கோபமும் வெறுப்பும் அளவிட முடியாதவை.

அதற்குக் காரணம்தான் என்ன என்று பார்க்கலாம்.

சில மாதங்களுக்கு முன்பு, ரகுபதியின் தமையன் பத்மநாபனுக்கு வெளியூரிலிருந்து ஒரு பெண் வந்தது. பெண்ணைப் பார்த்து விட்டு வரப் பத்மநாபனும் அவன் தந்தையும் தாயும் போயிருந்தார்கள். அவர்களுடன் ரகுபதியும் சென்றான். பெண் பார்க்கும் படலம் நடந்து முடிந்தது. பெண்ணைப் பிடித்து




விட்டது" பத்மநாபனுக்கு. அவன் பெற்றோருக்கும் திருப்திதான். ரகுபதிக்கு மட்டற்ற மகிழ்ச்சி. "அண்ணா! நீ அதிருஷ்டசாலி. உனக்கு ஏற்ற பெருமைப்படக்கூடிய பெண்தான் இவள்" என்று பத்மநாபனின் காதில் மெதுவாகக் கூறினான்.

ஆனால் ஊர் திரும்பியதும், பெண் வீட்டாரிடமிருந்து வந்த கடிதம் வருமாறு:

"ஐயா! தயவுசெய்து என்னை மன்னிக்க வேண்டுகிறேன். என் குழந்தை தங்கள் மகனை மணக்கச் சம்மதிக்க மாட்டேன் என்று தீர்மானமாய்க் கூறி விட்டாள். நாங்கள் எவ்வளவோ சொல்லிப் பார்த்து விட்டோம். பயனில்லை.—சுப்ரமண்யம்."

ரகுபதியின் பெற்றோர் ஏமாற்றமடைந்தார்கள். "பெண்ணின் முகத்திலே தென்பட்ட பாவம் சம்மதம் தெரிவிக்கும் வகையில் தானே இருந்தது! ஏன் மறுத்துவிட்டாள்?" என்று அவர்கள் தாபமடைந்தார்கள். ஆனால் பத்மநாபன் அதைப் பெரிதாய்ப் பாராட்டவில்லை. "அப்பா! எனக்கென்று ஒரு பெண் இனி பிறக்கப் போவதில்லை. எங்கோ வளர்ந்து தான்வருகிறாள்" என்று தத்துவம் பேசினான். இருப்பினும், ரகுபதியின் ஆத்திரத்தை அடக்க முடியவில்லை. எந்த வகையிலும் குறை காண முடியாத தன் தமையனைக் கணவனாக ஏற்க அந்தத் திமிர் பிடித்த பெண் மறுத்ததனால் அவள் பேரில் கோபமும் வெறுப்பும் கொண்டான். "என் அண்ணனை விட ஒரு அழகன் அவளுக்குக் கிடைத்துவிடப் போகிறானா? என் அண்ணனை அவமதித்துவிட்ட திமிர் கொண்ட பெண் அல்லவா!" என்று அவன் துடியாய்த் துடித்தான்.

பத்மநாபன் என்னவோ வேறொரு பெண்ணை மணந்து கொண்டு விட்டான். ரகுபதியும் மனம் சமாதானத்தை யடைந்துவிட்டான். ஆனால், தன் அண்ணனை அவமதித்து விட்ட அதே பெண்ணின் கட்டளைக்குக் கீழ்ப்படிய நேர்ந்ததைக் கருதி அவன் பெரும் தாபம் அடைந்தான். ஆம், பத்மநாபனை அன்று மணக்க மறுத்தவள்தான் இந்த மஞ்சுளா!

* * *

"அண்ணா! நான் என் வேலையை ராஜினாமாச் செய்துவிடப் போகிறேன்" என்றான் ரகுபதி அன்றிரவு தன் அண்ணனிடம்.

"ஏன்? என்ன காரணம்?" என்று கேட்டான் பத்மநாபன் பரபரப்புடன்.

"ஏனா? என் மானேஜரின் அந்தரங்கக் காரியதரிசியாக ஒரு பெண் நியமிக்கப்பட்டிருக்கிறாள். அவள்..." என்று ரகுபதி கூறி முடிப்பதற்குள்ளாகவே, "ஆம், நானும் கேள்விப்பட்டேன். உன் மானேஜரின் பெரியப்பாவின் பெண்ணாம் அவள். அதனால் நமக்கென்ன? வேலை என்று வரும்போது எல்லாம்தான் இருக்கும். அதுவும் இது பெண்களுக்கும் சகல உரிமைகளும் சமமாய் வழங்கப்பட்ட காலம். என் காரியாலயத்தில் கூடத்தான் என் மேலதிகாரி ஒரு பெண்மணி. அதற்காக நான் வேலையை ராஜினாமா செய்தேனா, என்ன?" என்று சமாதானம் கூறினான் பத்மநாபன்.

"அண்ணா! அந்தப் பெண் யார் என்று உனக்குச் சொன்னால்தான் புரியும். உன்னை




சாரங்பூர் காட்டன் மான்யுபாக்சரிங் கம்பெனி லிமிடெட். அகமதாபாத்



**பாகவதர் பையன் :–** அப்பா! நீ வெளிநாட்டுக்குப்போயிருக்கிறாயாமே?

**பாகவதர் :–** இல்லையே, ஏன்டா, கண்ணு?

**பாகவதர் பையன் :–** பின்னே பாகவதர் கானடாவிலே ரொம்ப சஞ்சாரம் பண்ணுவாரென்று யாரோ சொன்னாளே!

அன்று மணக்க மறுத்து விட்டாளே அதே பெண்தான் அவள்! என் அருமை அண்ணாவை—பார்த்தால் மன்மதனைப் போலுள்ள உன்னை-மணக்கச் சம்மதிக்காமல் அவமதித்து விட்டவள் கட்டளைக்கு நான் கீழ்ப்படிவதா? இது முடியாது. உன்னை அவள் அவமதித்தது என்னையே அவமதித்த மாதிரி தான் நான் எடுத்துக் கொள்கிறேன்'' என்றான் ரகுபதி. அவன் குரலில் கண்ட ஆக்ரோஷம் பத்மநாபனை அயரச்செய்து விட்டது.

''சரி, உன் விருப்பம்போலச் செய்!'' என்று கூறிவிட்டான் பத்மநாபன்.

மறுநாள் காரியாலயம் சென்று தன் ராஜினாமாக் கடிதத்தை மானேஜரிடம் நேரில் சமர்ப்பித்தான் ரகுபதி. ராஜினாமாவைக் கண்ட சங்கரலிங்கம் வியப்படைந்தார்.

''ஏன் திடீரென்று இந்த முடிவு? உனக்கு இங்கு என்ன அசௌகரியம்? வேறு எங்காவது அதிகச் சம்பளம் உனக்குக் கிடைக்கிறதா?'' என்று கேட்டார் அவர்.

''ஐயா! காரணம் சொல்ல முடியாமைக்கு வருந்துகிறேன். தயவுசெய்து இதை ஏற்றுக் கொள்ள வேண்டும்'' என்றான் ரகுபதி. சங்கரலிங்கத்தினால் மறுக்க முடியவில்லை.

ரகுபதி ராஜினாமாச் செய்துவிட்ட விஷயம் எல்லாச்சிப்பந்திகளுக்கும் வியப்பையளித்தது.

வேறொரு கம்பெனியில் ரகுபதிக்கு உத்தியோகம் கிடைத்தது. கல்யாணத்துக்கு அவனுக்குப் பெண் பார்க்கும் படலத்தைத் தொடங்கினான், அவனுடைய அண்ணன். தன் பெற்றோர் காலமாகி விட்டதால், அவனே குடும்பத்தின் தலைவன் ஆனான்.

அன்று ஒரு பெண்ணைப் பார்ப்பதற்காகப் பத்மநாபன் தன் தம்பி ரகுவையும் அழைத்துக் கொண்டு வெளியூருக்குச் சென்றான். பெண்ணைப் பார்த்ததும் ரகுபதிக்குப் பிடித்து விட்டது. அவன் முகபாவத்தைக் கண்ணுற்ற பெண்ணின் தந்தை மகிழ்ச்சியடைந்தார். அப்போது பெண்ணின் தங்கை அந்தப் பக்கம் எதற்கோ வந்தாள். அவள் மீது ரகுபதியின் பார்வை விழவும் ஒருகணம் அவன் அயர்ந்து விட்டான். ஏன்? அந்தப் பெண் அத்தனை அழகு பொருந்தியவளாய்க் காணப்பட்டாள்.

''இதோ, இவள்தான் இளைய பெண். அடுத்த வருஷம் இவளுக்கும் மணம் முடித்தாக வேண்டும்'' என்றார் பெண்ணின் தந்தை.

ஊர் திரும்பிய ரகுபதி தான் அந்தச் சிறிய பெண்ணைத் தான் மணக்க விருப்பம் என்றும், மூத்த பெண்ணை ஏற்கமுடியாது என்றும், தன் அண்ணனிடம் கூறிவிட்டான்.

'' அது முறையாகுமா? எந்தப் பெண்ணை நீ பார்க்கப் போனாயோ, அவளைவிட்டு இன்னொருத்தியைத் தான் மணப்பேன் என்று கூறுவது அவர்களுக்கு எத்தனை வேதனையும் ஏமாற்றமும் அளிக்கும்! தவிர அந்த மூத்த பெண்ணும் மனம் உடைந்து விடுவாள் அல்லவா?'' என்றான் பத்மநாபன்.

'' இல்லா விட்டால், பொதுவாகச் சம்மதமில்லை என்று எழுதி விடு'' என்றான் ரகுபதி.

வேறு வழியின்றிப் பத்மநாபன் அவ்வாறே எழுதி விட்டான். சில தினங்களுக்கெல்லாம், ரகுபதியின் வீட்டுக்குச் சங்கரலிங்கம் அவசரமாய் அவனைத் தேடி வந்தார்.

'' ரகுபதி! ஒரு விஷயம் கேள்விப்பட்டேன். சில நாட்களுக்கு முன்பு நீ ஒரு பெண்ணைப் பார்த்து விட்டு வந்தாயாம். அவளை உனக்குப் பிடித்திருந்ததாகத்தான் உன் முகபாவனையிலிருந்து தெரிந்ததாம். ஆனால் ஊர் திரும்பியதும் விருப்பமில்லை என்று எழுதி விட்டாயாமே. ஏன்? பெண்ணின் தந்தை எனக்கு வேண்டியவர் ஆயிற்றே!'' என்றார் சங்கரலிங்கம்.

'' ஐயா! இருக்கலாம். ஆனால் விஷயம் என்னவெனில், அந்தப் பெண்ணின் தங்கையைத் தற்செயலாய் அங்கு கண்டேன். என் கண்களுக்குப் பெரிய பெண்ணைவிட அவள் தான் மிகவும் பிடித்திருந்தாள். ஆனால் என் அண்ணா அம்மாதிரி மாற்றுயோசனை கூறுவது முறையல்ல என்று கூறவே, காரணம் கூறாது பொதுவாக மறுத்து எழுதச் சொன்னேன்'' என்றான் ரகுபதி.

'' சரி! இன்னொரு விஷயமும் கேள்விப்பட்டேன், என் தங்கை மஞ்சுளாவின் மூலம். அவளைப் பார்க்க உன் தமையன் போயிருந்தாராம். நீயும் உடன் சென்றாயாம். அப்போது உன்னைக்காண நேர்ந்த மஞ்சுளா, உன்னைத் தான் அடைய வேண்டும் என்று விரும்பினாளாம். தன் விருப்பத்தைத் தந்தையிடம் கூறினாள். ஆனால் அவள் தந்தை அது நியாயமல்ல என்று கூறினாராம். எனவே பொதுவாய், விருப்பமில்லை என்று எழுதச் சொல்லி விட்டாளாம். ஆண் பிள்ளையான நீயே உன் கருத்தைப் பச்சையாய் வெளியிடத் துணியாத போது, ஒரு பெண் எவ்வாறு 'எனக்கு அவர் வேண்டாம், இவர்தான் வேண்டும்' என்று எழுதச்சொல்வாள்? நீ பார்த்த பெண்ணுக்கு வேறு இடத்திலே நிச்சயமாகி விட்டது. அதைப் பற்றிக் கவலையில்லை. நான் வந்த காரியம் மஞ்சுளாவை மணக்க உனக்குச் சம்மதமா என்று அறியத்தான். மஞ்சுளா உன் ராஜினாமாச் செய்தியை அறிந்து, காரணத்தை ஒருவாறு கற்பனை செய்து கூறினாள். தன் அண்ணனை மணக்க மறுத்த அவனுக்குப் பணியச் சம்மதிக்காமல் தான் நீ வேலையை விட்டு விட்டாய் என்று. அது சரியோ தவறோ! இருக்கட்டும். இப்பொழுது அவளை மணக்க உனக்குச் சம்மதமா?'' என்று கேட்டார் சங்கரலிங்கம்.

வியப்பினால் ரகுபதி சங்கரலிங்கத்தையே நோக்கினான். அவன் முக பாவத்திலிருந்து, மஞ்சுளாவை மணக்க அவனுக்குப் பூரண சம்மதந்தான் என்று அறிந்து கொள்ளச் சங்கரலிங்கத்துக்கு அதிக நேரம் ஆகவில்லை.




மனைவி:—உங்களுக்கு உடம்பு சரியில்லை என்கிறீர்கள். நீங்கள் பத்து நாள் ஆபீஸிலே லீவு எடுத்துக் கொண்டால் என்ன?

கணவன்:—அது யோசிக்க வேண்டிய விஷயம்!

மனைவி:—ஏன்? நீங்க ஒருத்தர் போகா விட்டால் ஆபீஸிலே வேலையொன்றும்நடந்து விடாதா, என்ன?

கணவன்:— அதொன்றுமில்லை. ஆனால் அதை அவர்கள் தெரிந்துகொண்டு விடப் படாது, பார்! அதனால்தான் லீவு எடுக்கத் தயங்குகிறேன்!



கணக்கு வாத்தியார்:—ராமு! 1920-ம் வருஷம் பிறந்த ஒருவருடைய சரியான வயது இப்பொழுது என்ன?

ராமு:—அவர் ஆடவராயிருந்தால் சரியான வயது முப்பத்தேழு; பெண்மணியாய் இருந்தால் சரியான வயது தெரிந்து கொள்ள முடியாது ஸார்!



"கமலா! சரோஜா வீட்டுக்குப் போய் விட்டு வரலாமா? அவர்கள் வீட்டில் அவள் தம்பிக்குப் பிறந்த நாளாம்!"

"நான் சரோஜாவோடு பேசுவது கிடையாதே! எங்கள் இருவருக்கும் சண்டையாயிற்றே!"

"ரொம்ப நல்லது! நீ அவசியம் வர வேண்டும். அவர்கள் வீட்டுக்குப் போனால் நேரமாகிவிடுமோ என்று பயந்தேன். சீக்கிரம் வந்து விடலாம்! வா, போகலாம்!"



ஹோட்டலில் சாப்பாட்டுக்காகப் போடப் பட்டிருந்த பட்டியலைப் பார்த்து விட்டு அதிருப்திப்பட்டு ஒருவர் ஹோட்டல் சிப்பந்தியிடம், "என்ன ஐயா! இன்றைக்குச் சாப்பாடு சுகப்படாது போலிருக்கே! கறி, ரசம் ஒன்றும் நன்றாயிருக்காது போலிருக்கே! இதுதவிர வேறு ஏதாவது கொடுப்பீர்களா?" என்று கேட்டார்.

ஹோட்டல் சிப்பந்தி:—சரி! இந்தாருங்கள் ஸ்டாண்டில் மாட்டியுள்ள உங்கள் குடை!



கடன் கொடுத்தவர்:— உங்களை மூன்று மாதமாக ஒன்று கேட்க வேண்டும் என்று இருக்கிறேன்!

கடன் வாங்கியவர்:—நானும் அதற்குரிய பதிலை மூன்று மாதங்களாகத் தயாராக வைத்திருக்கிறேன்!

வகுப்பில் பாடம் நடந்து கொண்டிருந்தது. ஒரு பையன் தொண தொண வென்று பேசிக் கொண்டிருந்தான். உடனே ஆசிரியர் பிரம்பை அந்தப் பையனுக்கு நேராகக் காட்டி, "இந்தப் பிரம்புக்கு எதிராக இருப்பவன் சுத்த வாயாடி!" என்றார் கோபத்துடன்.

பையன் (சிரித்துக் கொண்டே):—அது சரி ஸார்! நீங்கள் கோபித்துக் கொள்ளா விட்டால் ஒன்று சொல்கிறேன். பிரம்புக்கு இரண்டு முனைகள் இருக்கின்றன, ஸார்!



தகப்பனார்:—நம்ம பையன் நன்றாகப் படிக்கிறானா? அவன் நன்கு படித்து நல்ல வேலைக்கு வருவானா?

ஆசிரியர்:—ஓ! நிச்சயம் வருவான்! படித்த பிறகு அவனுக்கு மேஸ்திரி வேலை நிச்சயம் கிடைத்துவிடும்!

தகப்பனார் (வியப்புடன்):—என்ன, அப்படியா? எதனால் சொல்கிறீர்கள்?

ஆசிரியர்:—இப்பொழுது பிடித்து அவன் தன் கணக்குகளை யெல்லாம் பிற பையன்களைக் கொண்டு போட்டுச் சமாளித்து விடுகிறான். அதனால்தான்!



"நான் இப்பொழுது ஒரு பயங்கரக் கதை சொல்லப்போகிறேன்! அதைக் கேட்டால் தலைமயிர் குத்திட்டு நின்று விடும்!"

"நீங்க சுத்த லேட் பேர்வழி ஐயா! இப்பொழுது வந்து சொல்கிறீர்களே. கொஞ்சநாட்கள் முன்பே வந்து அதைச் சொல்லியிருக்கப்படாதா?"

# சுடர்

## தீப்பெட்டிகள்




தயாரிப்பவர்கள் :

**அரசினர் தீப்பெட்டி தொழிற்சாலை**

**பெரம்பூர், சென்னை**

SISTAS-MM-1



சென்னை சர்க்கார் தொழில் & வர்த்தக
இலாகாவின் ஒரு பிரிவு

எல்லா ஜில்லாக்களிலும் தொழில் & வர்த்தக
உதவி டைரக்டர் காரியாலயங்களில் கிடைக்கும்




* * *

காலை வேலைக் காரியங்களை யெல்லாம் ஒரு வழியாக முடித்துக் கொண்ட கௌரி 'அப்பாடா' என்று ஊஞ்சலில் வந்து உட்கார்ந்து கொண்டு அன்றையத் தினசரியை எடுத்துப் பிரித்தாள். ஏனோ அன்று அவள் மனம் பத்திரிகை படிப்பதில் லயிக்கவில்லை; கடிவாளமிடப்படாத குதிரையைப் போலக் கட்டுக்கடங்காமல் எங்கெங்கோ சென்று அலைந்து கொண்டிருந்தது.

பத்திரிகையை வைத்து விட்டு ஊஞ்சலிலேயே படுத்தாள். அவளது வலது கண் படபட வென்று துடித்தது. 'மலையே புரண்டாலும் தலையே தாங்கிக்கொள்' என்று கூறக் கூடிய நெஞ்சுறுதி வாய்ந்த அவளது இரும்பு மனமும் ஏனோ கலக்கமடைந்து தவித்தது. இது ஏதாவது வரப்போகும் கெடுதலுக்கு முன்னறிவிப்போ என்று எண்ணினாள். சந்தோஷச் சிகரத்தில் ஏறி நிற்காவிடினும் துன்பக் கடலில் அமிழாமல் அமைதியாகச் சென்று கொண்டிருக்கும் தன் வாழ்வில் ஏதாவது பயங்கரத் திருப்பம் காத்துக் கொண்டிருக்கிறதோ என்று எண்ணும்போதே அவளது மெய் சிலிர்த்தது.

படபட வென்று வாசற் கதவைத் தட்டும் சத்தமும், கூடவே அவளது மகன் ராஜா ''அம்மா! அம்மா!'' என்று கூப்பிடும் சத்தமும் கேட்டுத் திடுக்கிட்டு எழுந்தாள். ஒரு நாளுமில்லாமல் இன்றைக்கு என்ன வேளை யற்ற வேளையில்ராஜா திரும்பி வந்திருக்கிறான் என்று எண்ணிக் கொண்டே கதவைத் திறந்தாள். உள்ளே வந்த ராஜா கையிலிருந்த பொட்டலங்களை ஊஞ்சலில் வைத்து விட்டு 'அப்பாடா' என்று ஈஸிசேரில் சாய்ந்து கொண்டான். மகனுக்கு மின்சார விசிறியைப் போட்டு விட்டுக் கௌரி உள்ளே சென்று ஒரு டம்ளரில் ஜில்லென்ற சர்பத்தை நிரப்பிக் கொண்டு வந்து கொடுத்தாள். அதை வாங்கிப் பருகிவிட்டு ராஜா, ''அம்மா! இன்று மாலை என்னுடைய பெரிய டாக்டர் நம் வீட்டுக்கு வரப்போகிறார். சிற்றுண்டிகள் தயாரிப்பதற்காக இவைகளை வாங்கி வந்திருக்கிறேன். ஒரு இனிப்பும், ஒரு காரமும் செய்தாயானால் போதும்'' என்றான்.

''அதற்கென்ன, ஒரு நொடியில் எல்லாம் செய்து விடுகிறேன்'' என்று பதிலளித்த கௌரி பொட்டலங்களை யெல்லாம் எடுத்துக் கொண்டு சமையலறைக்குள் சென்றாள்.

கூடவே வந்த ராஜா ''நீ என்னம்மா, பெண் குலத்துக்கே எதிர் விரோதமாக இருக்கிறாயே? பெரிய டாக்டர் வரப்போகிறார் என்றதும் சரி என்று போய்விட்டாயே. இப்பொழுது எதற்காகத் திடீரென்று இங்கே வரப்போகிறார் என்று கேட்கத் தோன்றவில்லையே உனக்கு?'' என்றான்.

புன்னகையுடன் அவன் பக்கம் திரும்பிய கௌரி ''சரக்கு மலிந்தால் தானே கடைக்கு வருகிறது. நீ தானாகவே என்னிடம் விஷயத்தைக் கூறுவாய் என்ற நம்பிக்கையினால்தான் நான் ஒன்றும் உன்னிடம் கேட்கவில்லை'' என்று பதிலளித்தாள்.

அவன் அருகில் வந்து அமர்ந்து கொண்ட ராஜா ''அம்மா! எங்கள் பெரிய டாக்டருக்குக் குழந்தைகள் இல்லை. தம்முடைய மைத்துனன் பெண்ணைத்தான் வளர்க்கிறார்.



கலியாண வயதை எட்டியிருக்கும் அப் பெண்ணுக்கு அவர் வரன் தேடிக் கொண்டிருக்கிறார். அவளை உன்னுடைய மருமகளாக்கிக் கொள்கிறாயா என்று கேட்கத்தான் உன்னைப் பார்க்க வருகிறார். நீ என்ன சொல்கிறாயம்மா?'' என்று கேட்டான்.

கௌரி மைந்தனின் முகத்தை ஏறிட்டு நோக்கினாள். செம்மை படர்ந்த அவன் முகத்தையும், கண்களில் சுடர் விடும் ஒளியையும் கண்டதுமே அவளுக்கு இந்த விவாகத்தில் ராஜாவுக்குப் பரிபூர்ண சம்மதம் என்பதை ஊகித்துக் கொண்டாள். ''ராஜா! அந்தப் பெண்ணையும் உனக்குப் பிடித்திருந்து, நமது பண்புக்கேற்றபடி அவளது குணமும் அமைந்திருந்தால் இந்தப் பங்குனியிலேயே கல்யாணத்தை முடித்து விடலாம்'' என்று கூறினாள்.

**மா**லை சரியாக மூன்று மணிக்குப் பெரிய டாக்டர் கலியாணராமன் வந்து சேர்ந்தார். ராஜா அவரை வரவேற்கும் குரலைக் கேட்டுக் கௌரி கூடத்துக்கு வந்தாள். கூடத்தில் ராஜாவுக்கு எதிராக அமர்ந்திருந்த விருந்தாளியைக் கண்டதும், பாம்பை மிதித்தவளைப் போலத் திகைத்துப் பின்வாங்கினாள். கலியாணராமனும் திடுக்கிட்டு எழுந்தார். 'ஆ, கௌரியா?' என்ற வார்த்தைகள் அவர் வாயிலிருந்து உதிர்ந்தன. மறு கணம் அவர் ராஜாவிடம் கூடச் சொல்லிக் கொள்ளாமல் வெளியேறினார்.

இவற்றை யெல்லாம் கண்ட ராஜா பிரமித்துப் போய் நின்றான். தன் நினைவு வந்ததும் எங்கோ சூனியத்தை வெறித்து நோக்கிய வண்ணம் அமர்ந்திருந்த தாயை நோக்கி, ''அம்மா! இதெல்லாம் என்ன? அவர் ஏன் எழுந்து போய் விட்டார்? உனக்கும் அவருக்கும் முன்பே பரிச்சயம் உண்டா?'' என்று கேள்விகளை அடுக்கினான் ராஜா.

கௌரி ''ராஜா! இப்பொழுது ஒன்றும் என்னைக் கேட்காதே! என் மனம் குழம்பிக் கிடக்கிறது. சென்ற காலத் துயர நினைவுகளை யெல்லாம் இவனுடைய வருகை கிளப்பி விட்டு விட்டது. ஒன்று மட்டும் சொல்கிறேன். இந்தக் கயவனுடைய சம்பந்தம் நமக்கு வேண்டாம். பிறகு எல்லாவற்றையும் உனக்கு விவரமாகச் சொல்கிறேன்'' என்று கூறினாள்.

ராஜா குழம்பிய மனத்துடன் வெளியே சென்றான். கலியாணராமனின் வளர்ப்புப் பெண் மாலதியை அவன் மனமார நேசித்தான். இந்தக் கலியாணம் நடக்காது என்று அறிந்தவுடன் அவனுக்கு மிகுந்த ஏமாற்றம் உண்டாயிற்று. அம்மா தானாகச் சொல்லும் வரையில் காத்திருக்க அவனுக்குப் பொறுமையில்லை. டாக்டர் கலியாணராமனையே என்ன விஷயமென்று கேட்டு அறிந்து கொண்டு விடுவோம் என்ற எண்ணத்துடன் அவரைத் தேடிச் சென்றான்.

**ப**ழைய நினைவுகளாகிற துயரச் சேற்றில் புதைந்துபோன தன் மனக் குதிரையை விடுவிக்க வழி தெரியாமல் கௌரி தன்னை மறந்த நிலையில் இருந்தாள். நேரம் செல்வதையே அவள் கவனிக்கவில்லை. இருட்டி வெகு நேரமாகி விட்டது. விளக்கு ஏற்றக் கூடத் தோன்றாமல் அவள் உட்கார்ந்திருந்தபோது தள்ளாடிய வண்ணம் ராஜா திரும்பி வந்தான். படீரென்று வாசற் கதவை அறைந்து சாத்திவிட்டு உள்ளே வந்து விளக்கைப் போட்டுத் தன் எதிரில் நின்ற மைந்தனைக் கண்ட கௌரி திடுக்கிட்டாள்.

சில மணி நேரங்களில் பத்து ஆண்டு வயது அதிகமானவனைப் போன்று காட்சியளித்தான் ராஜா. சரியாக வாரப்படாத கிராப்பு சிலும்பிக் கொண்டு நின்றது. கண்கள் இரண்டும் நெருப்புக் கோளங்களெனக் கனன்று கொண்டிருந்தன. உணர்ச்சி மேலிட்டால் உடல் வெட வெட வென்று நடுங்கிக் கொண்டிருந்தது. நெற்றி நரம்புகளெல்லாம் புடைத்திருந்தன. கௌரியை வெறித்து நோக்கிய அவன் விழிகளில் கொலைகாரனின் வெறியும், அடிபட்ட மிருகத்தின் வேதனையும் ஒன்று சேர்ந்து காணப்பட்டன. ஏதோ சொல்ல விரும்பிய அவனது உதடுகள் உணர்ச்சிப் பெருக்கினால் துடித்தன.

கௌரி மெல்ல 'ராஜா!' என்றாள். அந்த ஒரு வார்த்தை மந்திரம் போல் வேலை செய்தது. ராஜா சண்டமாருதமெனச் சீறி எழுந்தான். நெருப்புக் கங்குகளென வார்த்தைகளைக் கொட்டினான். ''போதும், நிறுத்து. உன்னை அம்மா என்று அழைக்கக் கூட என் வாய் கூசுகிறது. இதோ! இந்தப் படத்தில் இருக்கும் கயவனை உன்னுடைய கணவனென்றும், நான் உங்களுடைய மகனென்றும் பொய் கூறி ஏன் ஏமாற்றினாய்?'' என்று இடிபோன்ற குரலில் கர்ஜித்த வண்ணம் அருகிலிருந்த ஒரு தடித்த புஸ்தகத்தை எடுத்து அப்படத்தை நோக்கி எறிந்தான்.

மலர்களால் அலங்கரிக்கப்பட்டு, கௌரியின் பக்திக்கும், அன்புக்கும் பாத்திரமான அவள் இதயேசுவரனின் படம் கீழே விழுந்து சுக்கு நூறாகியது. இந்த உலகத்தில் தனக்கு இருந்த கடைசி பந்தத்தையே அவள்

ஒரேயடியாக உதறி நொறுக்கித் தள்ளுவது போல் அவனுக்குத் தோன்றியது.

படபடப்புடன் அவள் அவனை நெருங்கினாள். ''அடே! நீ என்னை என்ன வேண்டுமானாலும் சொல். ஆனால் அதோ அந்த உத்தமரைப் பற்றி உன் எச்சில் வாயால் எதுவும் கூற உனக்குத் தகுதி கிடையாது'' என்று கூறிக்கொண்டே பளீரென்று அவன் கன்னத்தில் ஒரு அடி வைத்தாள்.

மறு நிமிடம் இருவருமே ஸ்தம்பித்து நின்றனர். ராஜா வேகமாக வெளியே சென்றான். எங்கு செல்கிறோமென்பதையே கவனியாமல் கால்போன வழியே நடந்து கொண்டிருந்தான். ஜில்லென்ற காற்று வீசின பிறகுதான், தான் கடற்கரைக்கு வந்திருப்பதை அறிந்தான். யாருமில்லாத ஒரு ஒதுக்குப்புறமாகச் சென்று துண்டை விரித்துப் படுத்தான்.

மனோ விசாரமும், பசி மயக்கமும் சேர்ந்து அவனுக்குக் கண்ணைச் சுற்றிக் கொண்டு வந்தது. படபடவென மழைத்துளிகள் மேலே விழுந்ததும் கண் விழித்துக் கொண்டான். கடற்கரையில் ஆள் நடமாட்டமே இல்லை. இரவு நெடுநேரத்துக்கு மேல் ஆகியிருக்கும் போல் தோன்றியது. வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்து வீட்டுக்கு விரைந்தான்.

மழை வலுத்தது. தெரு ஓரங்களில் தங்கியிருந்த தண்ணீரில் தெரு விளக்குகளின் ஒளி வெள்ளம் பாய்ந்து அழகிய ஒளிக் கோலங்களைக் காட்டிக் கொண்டிருந்தது. அவன் ஒன்றையும் கவனிக்காமல் ஓடினான். வீட்டு வாசற் கதவு தாளிடப்படாமல் சாத்தி வைக்கப்பட்டிருந்தது. கதவைத் திறந்துகொண்டு இருட்டில் தடவிக்கொண்டே சென்று விளக்கைப் போட்டான். தினந்தோறும் எவ்வளவு நேரமானாலும் அவனுக்காகக் காத்திருக்கும் கம்பீரமான அந்த அன்புருவத்தைக் காணவில்லை. அவனது மனத்தைப்போலவே எங்கும் சூன்யமாக இருந்தது. அவனைப் பார்த்து விதி சிரிப்பதைப்போல மேஜையின் மேல் வைக்கப்பட்டிருந்த கடிதம் காற்றில் படபடத்தது. ராஜா பாய்ந்துசென்று அதை எடுத்தான்.

ஆம். அது கௌரியின் கடிதம்தான்.

படபடக்கும் இதயத்துடன் அதைப் படிக்க ஆரம்பித்தான். 'சோ' வென்ற மழை இரைச்சல் பின்னணியாகத் துயர கீதம் இசைத்துக் கொண்டிருந்தது.

அன்புள்ள ராஜா,

உன்னிடம் விடைபெற்றுக் கொள்கிறேன். இருபத்தி எட்டு வருடங்களாக ஒரே திசையில் சென்று கொண்டிருந்த நம்மிருவர் வாழ்க்கைப் பாதைகளும் பிரியும் முனை வந்து விட்டது. மகனே! எல்லாத் தாய்மார்களைப்போல் நான் உன்னைப் பாலூட்டி வளர்க்கவில்லை. ஏனென்று கேட்கிறாயா? சொல்கிறேன் கேள். ஏனெனில் நான் உன்னைப் பெற்ற தாயல்ல. ஆனால் பெற்ற தாயினும் பன்மடங்கு சாலப் பரிந்து, என் இன்ப வாழ்வையே தியாகம் செய்து உன்னைப் பாராட்டி வளர்த்து ஆளாக்கினேன். என் சரீரத்தைச் செருப்பாகத் தேய்த்து உன்னை ஒரு டாக்டராக்கினேன். ஏன்..?...

உன்னிடமிருந்து நான் ஒருவிதப் பலனையும் எதிர்பார்க்கவில்லை. நீ கீழே தள்ளி உடைத்தாயே ஒரு படம், அந்தப் படத்திலிருந்த உத்தமருக்கு நான் கொடுத்த வாக்கைக் காப்பாற்றுவதற்காகவே உன்னை மனிதனாக்கினேன். அந்த உத்தமோத்தமரின் அருங்குணங்களையும், பண்புகளையும் உன்னுள் ஏற்ற முயன்றேன். வேப்பங்கன்றை நட்டு வேரில் சர்க்கரைத் தண்ணீரையே பாய்ச்சினாலும் அதன் பிறவிக் குணமான கசப்பு மாறுமா? அதைப்போலவே நீயும் உன் குணத்தைக் காட்டிவிட்டாய். இருபத்தெட்டு வருடங்களாக இரவு பகல் உனக்காக உழைத்த என்னை, இருபத்தெட்டு தினங்களே அறிமுகமுள்ள ஒருவனின் பேச்சைக் கேட்டுக்கொண்டு அவமதித்து விட்டாய். இனி எப்படி நாமிருவரும் சேர்ந்து வாழ முடியும்? உன்னிடம் கடைசியாக விடைபெற்றுக் கொள்கிறேன். அத்துடன் உன்னுடைய பிறப்பைப் பற்றிய உண்மை விவரத்தையும் சொல்லிவிட்டுப் போகிறேன், கேள்.

ராஜா! நீ வாய் கூசாமல் என்னைக் களங்கமுள்ளவள் என்று சொன்னாய். மகனே! ஆனால் நான் கன்னிகூடக் கழியாதவள்.



உனக்காக, உன் வாழ்வை வளம் பெறச் செய்வதற்காக அந்த அபாண்டத்தை ஏற்றுக் கொண்டேன். எந்த உத்தமரை உன் தந்தை என்று நினைத்துக் கொண்டு கபடவன் என்று ஏசினாயோ, அவர் உன் தந்தையுமல்ல. உண்மையில் நீ அவர் உன் தந்தையாக இல்லையே என்பதற்காக வருந்த வேண்டும்.

சிறு வயதிலேயே தந்தையை இழந்த நான் என் அன்னையுடன் மாமாவிடம் அடைக்கலம் புகுந்தேன். மாமாவுக்குத் தியாகு என்று ஒரு பிள்ளையும், நளினி என்று ஒரு பெண்ணும் இருந்தனர். சமவயதுள்ள நளினியும், நானும் மிக நெருங்கிய தோழிகளாக இருந்தோம். தியாகுதான் எங்கள் இருவருக்கும் குரு. அவரை நான் தெய்வமாகவே போற்றி வந்தேன் என்று சொன்னால்கூட மிகையாகாது. தியாகுவின் கல்லூரிப் படிப்பும், எங்களிருவரின்பள்ளிப்படிப்பும் முடியும் தறுவாயில், என் அன்னையும், மாமாவும் திடீரென்று மறைந்துவிட்டனர். தம் படிப்பு முடிந்ததும் தியாகு பொதுநல சேவையில் இறங்கினார். எங்கள் கிராமம் அவரது உழைப்பால் ஒரு லட்சியக் கிராமமாயிற்று. ஏழை விவசாயிகள் அவரைத் தெய்வமெனக் கொண்டாடினர்.

நளினியின் விவாகத்தை நடத்திவிட்டுப் பிறகு என்னைத்தான் மணந்து கொள்வதாகத் தியாகு வாக்களித்திருந்தார். நாங்கள் இருவரும் அதிக உலக அனுபவமில்லாமல் மலர்ந்து மலராப் பருவத்தில் இருந்தபோது இந்தக் கலியாணராமன் எங்கள் வீட்டுக்கு வந்து போக ஆரம்பித்தான். பெண்கள் முன்னேற்றத்துக்காகப் பாடுபடுபவன் என்று சொல்லிக் கொண்டான். டாக்டர் பரீட்சைக்குப் படித்துக் கொண்டிருந்த அவன் விடுமுறைக்காகக் கிராமத்துக்கு வந்திருந்தான். பெண்ணின் பெருமையைப் பற்றி ஆகாயமளாவ வர்ணிப்பான். பெண் சக்தியின் அம்சம், அகில உலகத்துக்கும் அன்னை என்றெல்லாம் வர்ணிப்பான். ஆண்கள் பெண்களை அடக்கி வைத்திருக்கும் கொடுமையைப் பற்றி நெஞ்சுருகப் புலம்புவான். நளினி, நான் ஆகிய இருவரில் ஒருவரைக் கண்ணி வைத்துப் பிடிக்க அவன் முயலுகிறானென்பதை நான் அறிந்து கொண்டேன். ஆனால் கபடமற்ற நளினி அவன் வலையில் சிக்கிவிட்டாளென்பதை நான் அறியவில்லை.

ஆறு மாதங்களுக்குப் பிறகு விஷயம் மிஞ்சி, நிலைமை விபரீதமான பிறகே அறிந்தேன். விஷயமறிந்த தியாகு துடித்துப் போனார். பண்பு நிறைந்த அவரது மனம் அந்தக் களங்கத்தை அழிக்க ஒப்பவில்லை. நளினியின் வயிற்றில் வளரும் சிசுவின் தந்தை கலியாணராமன் என்று நாங்கள் நினைத்தோம். ஆனால் நிச்சயமாகத் தெரியவில்லை. கண்ணீரும் கம்பலையுமாக இருந்த நளினியோ ஏதும் கூற மறுத்து விட்டாள். கடைசியில் தியாகு ஒரு முடிவுக்கு வந்தார். அதற்கு என் ஒத்துழைப்பை வேண்டியபோது, மனப்பூர்வமான சம்மதம் அளித்தேன். வீட்டில் நெடுநாட்களாக வேலை செய்து கொண்டிருந்த கிழ வேலைக்காரியை எங்கள் அந்தரங்கத்தில் சேர்த்துக் கொண்டோம். குழந்தை பிறக்கும் வரையில் ஊரில் ஒருவருக்கும் தெரியாமல் காப்பாற்றி வந்தோம். குழந்தை பிறந்த பிறகு குழந்தையின் தாய் நான்தானென்! தந்தை தியாகுவென்றும் வதந்தியைப் பரவவிட்டோம். நளினியின் உடல் கொஞ்சம் தேறினதும் விரைவிலேயே என்னைத் தாம் மணந்து கொண்டு விடுவதாகத் தியாகு கூறிக் கொண்டிருந்தார். அவரிடம் இருந்த நம்பிக்கையினால் மனங் கூசாமல் களங்கத்தை என்மீது ஏற்றிக் கொண்டேன். ஆனால் விதி வேறு விதமாக நினைத்தது. அருகிலிருந்த ஊருக்குக் காலரா கண்டபோது தொண்டுக்குச் சென்ற தியாகு திரும்பவேயில்லை. அண்ணனின் அகால மறைவுக்குத் தன்னுடைய செயலே காரணமென்று எண்ணி எண்ணி மறுகிய நளினியும் அதற்குப் பிறகு அதிக நாட்கள் உயிருடன் இருக்கவில்லை. அப்பொழுது மறுபடியும் கிராமத்துக்குத் திரும்பிய கலியாணராமன் எனக்குத் தொந்தரவு கொடுக்க ஆரம்பித்தான். நளினி இறக்கும் தறுவாயில், தன்னை வஞ்சித்தவன் கல்யாணராமன்தான் என்றும் அவன் கையில் சிக்காமல் உன்னை வளர்க்கும்படியும் கேட்டுக் கொண்டாள். கல்யாணராமனுக்கோ, நளினிக்குக் குழந்தை பிறந்ததே தெரியாது. எனவே நடத்தை கெட்டவளாக என்னை நினைத்த கலியாணராமன் என்னைத் தன் விருப்பத்துக்கு இணங்கும்படி தொந்தரவு செய்ததில் வியப்பில்லை. அவனது இம்சை பொறுக்காமல் நான் ஒருவரும் அறியாமல் அந்த ஊரைவிட்டுக் கிளம்பி விட்டேன்.

யாரும் நம்மை அறியாத இந்த ஊருக்கு வந்தேன். உன்னைப் படிக்க வைத்துப் பெரிய மனிதனாக்கினேன். அதன் பலனையும் அனுபவித்துவிட்டேன். உன் மாமாவைப் போல உன்னையும் வளர்க்க எண்ணினேன். ஆனால் உன் உடலில் ஓடும் உன் தந்தையின் ரத்தம் அதன் குணத்தைக் காட்டிவிட்டது. அத்திரத்தினால் அறிவிழந்து விட்டாய். உன் பெரிய டாக்டர் கலியாணராமனைக் கேட்டுப் பார். 'நளினி என்ற பேதைப் பெண்ணை வஞ்சித்ததுண்டா?' என்று கேள். உனக்கு இஷ்டமானால் மாலதியை மணந்துகொள். இவனுடைய குற்றத்துக்கு அவள் என்ன செய்வாள், பாவம்?

பார்வைக்கு அழகாக இருக்கும் வெண்முகிலினால் யாருக்கும் ஏதும் பயன் கிடையாது. ஆனால் கண்ணுக்குக் கறுப்பாக இருக்கும் கருமுகில் களங்கத்தையெல்லாம் சுமந்து கொண்டு, தன்னையே மழையாகப் பொழிந்து அகில உலகத்தையும் வாழ்விக்கிறது. இத்தனை நாளும் கருமுகிலைப் போல் களங்கத்தைச் சுமந்துகொண்டே உன் வாழ்வில் குளுமையை உண்டாக்கினேன். இன்று என்னையே தியாகம் செய்து கொள்கிறேன். கடைசி கடைசியாக உனக்கு என் அன்பும் ஆசியும்.

உன் வளர்ப்புத் தாய்,

**கௌரி.**

கண்களில் ஊற்றெடுத்துப் பெருகும் கண்ணீருடன் ராஜா அந்தக் கடிதத்தைப் படித்து முடித்தான். மழை நின்றுவிட்டிருந்தது. எங்கிருந்தோ வந்த கருமுகில் தன் கருணையையெல்லாம் மழையாகப் பொழிந்து விட்டு, நான் வந்த காரியத்தை முடித்து விட்டுச் சென்று விட்டது.

**Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10 for the Proprietors Messrs Bharathan Publications Private Limited**
**Managing Editor: T. Sadasivam.**

No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

**ஆரோக்கியமான குழந்தைகள் தவறாமல் லைப்பாய் சோப் உபயோகித்துக் குளிக்கின்றனர்**

***அன்றாட அழுக்கிலுள்ள கிருமிகளை அது கழுவிக் களைகிறது!**

*தினசரி நம்மீது படியும் அழுக்கிலுள்ள கிருமிகள் வாயிலாக நாம் ஒவ்வொருவரும் தொத்து நோய் ஆபத்துக்கு ஆளாகிறோம். அதன் காரணமாகவே, ஆரோக்கியமுள்ள பலர் வழக்கமாக லைப்பாய் சோப் உபயோகித்து அழுக்குடன் கிருமிகளையும் கழுவிக் களைந்து தத்தம் ஆரோக்கியத்தைப் பாதுகாத்துக் கொள்கின்றனர்— ஆரோக்கியமான அத்தகைய புதுமலர்ச்சியை அது அளிக்கிறது!

